# தர்மரட்சகன்

(கதைகள், கட்டுரைகள்)

பதிப்பாசிரியர் :

வை. கோவிந்தன்






சக்தி காரியாலயம்

# தர்மரட்சகன்

முதலிய கதை, கட்டுரை

*பதிப்பாசிரியர்*

**வை. கோவிந்தன்**



சக்தி காரியாலயம்
ராயப்பேட்டை : : சென்னை—14

# பதிப்புரை

பத்திரிகைகள் பல வெளிவருகின்றன. ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஒரு பிரத்தியேக லட்சியம் இருக்கிறது. சில பத்திரிகைகள் உல்லாசப் பொழுதுபோக்குக்கு மட்டும் பயன்படும் விஷயங்களை மக்களுக்கு உதவி வருகின்றன; சில பத்திரிகைகள் பொழுதுபோக்குடன் ஆழ்ந்த கருத்துக்களும், ஆழ்ந்த தத்துவங்களும் அடங்கிய இலக்கிய சிருஷ்டிகளையும் உதவி வருகின்றன. இது யாவரும் அறிந்தது தான். இம்மாதிரி ஆழ்ந்த பொருளமைதிகொண்ட இலக்கியங்களை ரசிக்கவும், அவற்றைப் பயன் படுத்தவும், அவற்றைப் பேணிக்காக்கவும் செய்கின்ற தலைசிறந்த வாசகர்கள் தமிழகத்தில் ஏராளமாக இருக்கிறார்கள். ஆனால், பத்திரிகை வாயிலாக இப்படிப்பட்ட இலக்கியங்கள் வெளி வருவதில், ஒரு சில சௌகரியக் குறைவுகள் இருப்பதை வாசகர்கள் உணர்ந்திருக்கலாம். பத்திரிகைகள் எவ்வளவு தலை சிறந்த விஷயங்களைத் தம்மகத்தே கொண்டிருந்தாலும், அவற்றை வரிசைப்படி பைண்டு செய்து, நிரந்தரமான உபயோகத்துக்குப் பயன்படும்படியாகப் பேணிவைக்கும் வாசகர்கள் குறைவு என்றே சொல்லவேண்டும்; பெரும்பாலானவர்கள் படித்துமுடித்ததும், பத்திரிகைகளை அப்படியே கீழே போட்டுவிடுகிறார்கள். இதனால் வாசகர்கள் நிரந்தரமான பயன் பெற இயலாமல் போய்விடுகிறது; சிறந்த இலக்கியங்களும் போதிய பாதுகாப்பின்றி சிதைய ஆரம்பிக்கின்றன.

மேற்கூறிய விஷயங்களை ஆலோசித்தும், பைண்டு செய்யும் சிரமத்தை வாசகர்களுக்குக் கொடுக்காமல் இருக்கவும் நாங்கள் இந்தப் புது முயற்சியைத் தொடங்குகிறோம். முன்பு சக்தி இதழ்களில் சிறந்த இலக்கியங்களைக் கொடுக்க முயன்றோம். இனி, இம்மாதிரிப் புத்தக உருவில் அதே பணியைத் தொடர்ந்து நடத்திவரத்தீர்மானித்திருக்கிறோம். சிறந்த விஷயங்களுடன் சிறந்த காகிதத்தில், அதிக பக்கங்களில், அதே சமயத்தில் குறைந்த விலையில், வெளிவந்துள்ள இந்த நூலை வாசக நேயர்கள் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

மாதாமாதம் இதுபோன்ற இலக்கியத் தொகுப்பு நூல் ஒன்று வெளிவரும். நம் நாட்டிலும் பிற நாடுகளிலும் உள்ள எழுத்தாளர்களின் உயர்தரமான சிருஷ்டிகளை வெளியிடத் தீர்மானித்திருக்கிறோம். பன்னிரண்டு புத்தகங்களுக்கு, முன்பணமாகப் பன்னிரண்டு ரூபாய் அனுப்பித் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளும் அன்பர்கள் புத்தகங்களைத் தபால் செலவின்றிப் பெற்றுக்கொள்ளலாம் என்ற விவரத்தையும் இங்கே தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பதிப்பாளர்

---

திருத்தம்: பக். 30. வரி, 17— 'விட்டது' என்பதை 'விடாது' எனக் கொள்க.

# பொருள் அடக்கம்

# பட்டினியிலிருந்து நம்மை டீ எப்படிக் காப்பாற்றுகிறது?

அயல் நாட்டு நாணயச் செலாவணி நம் நாட்டுக்கு இன்று மிகவும் அவசியமாக இருக்கையில், நாம் ஏற்றுமதி செய்யும் 44 கோடி பவுண்டு தேயிலை, அவசியமான உணவுப்பொருள்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய ஏராளமான தொகையை அளிக்கிறது. டீ நம் நாட்டு கலாசாரத்துக்கு மட்டுமல்ல, பட்டினியைத் தடுக்க உத்திரவாதமும் அளிக்கிறது. ஏற்றுமதித்தொழிலில் இரண்டாவதாக நிற்கும் டீத்தொழில் நாட்டின் பொருளாதார அமைப்பில் பிரதான ஸ்தானம் வகிக்கிறது.

டீயைப்பற்றிய சில புள்ளி விவரங்கள்.

- ஏழு லக்ஷத்து அறுபதினாயிரம் ஏக்கர் நிலத்தில் வருஷமொன்றுக்கு 56½ கோடி பவுண்டு டீ உற்பத்தி செய்கிறோம்.
- இத்தொழிலில் 15 லக்ஷம் ஆண்களும் பெண்களும் ஈடுபட்டிருக்கிறார்கள்.
- உள்நாட்டில் அருந்தும் டீயிலிருந்து பவுண்டு ஒன்றுக்கு 3 அணா வரியும், ஏற்றுமதி செய்யப்படும் டீயிலிருந்து பவுண்டு ஒன்றுக்கு 4 அணா வரியும் சர்க்காருக்கு கிடைக்கிறது. நாட்டு கஜானாவுக்கு வருஷமொன்றுக்கு கிட்டத்தட்ட ரு. 13 கோடி வரும்படி கிடைக்கிறது.
- மேலும் டீ தொழிலகம் செலுத்தும் பல வரிகள் மூலமாக சர்க்காருக்கு கணிசமான தொகை கிடைக்கிறது.



# டீ

ஒரு மகத்தான இந்தியக் கைத்தொழில்.




# லிப்டன்ஸ்

## என்றால்

# சிறந்த டீ

# தர்மரட்சகன்

## கஸ்தேவ் பிளாபர்*

மலையடிவாரத்திலே ஒரு மரக்காடு. அந்தக் காட்டின் நடுவே ஒரு அரண்மனை. அந்த அரண்மனையில்தான் ஜூலியனுடைய தாய் தந்தையர் வசித்து வந்தனர்.

அரண்மனையின் நான்கு மூலைகளிலும் உள்ள நான்கு கோரிகள், ஈயத் தகடு வேயப்பட்டு, ஊசிக் கோபுரங்கள் போல் இருந்தன. அவற்றின் அஸ்திவாரம், ஒரு பாறையின் மீது போடப்பட்டிருந்தது. அந்தப்பாறையின் சரிவிலே ஒரு அகழி.

முற்றத்தின் பரப்பிலெல்லாம், தேவாலயத்தில் பதித்திருப்பது போல மாசுமறுவற்ற அகலமான கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. அங்கிருந்த நீண்ட தண்ணீர்க் குழாய்கள் மலைப் பாம்புகள்போல் ஓடி, ஒரு குளத்தில் போய் நீரைக் கொட்டிக் கொண்டிருந்தன. ஜன்னல்களில், அழகழகான பூஞ்செடிகள் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன.

* மொழி பெயர்த்தவர் : கு, அழகிரிசாமி

அரண்மனையின் இரண்டாம் பிரகாரத்தில் நாற்புறமும் வேலி போடப்பட்டு கனிவிருக்ஷங்கள் வைக்கப்பட்டிருந்தன. மேலும் அங்கு ஒரு தோட்டம் இருந்தது. அந்தத் தோட்டத்திலுள்ள மலர்களெல்லாம் எழுத்துக்களைப் போல ஒதுக்கிக் கத்திரித்து விடப்பட்டிருந்தன. காற்று வாங்குவதற்காக ஒரு லதா குஞ்சமும், வேலைக்காரப் பையன்கள் விளையாடுவதற்காக நீளமான ஒரு மைதானமும் அங்கு இருந்தன. மறுபுறத்தில், நாய்களை அடைக்கும் கூண்டுகள், குதிரை லாயங்கள், ரொட்டி சுடும் மடைப்பள்ளி, ஒயின் மது தயாரிக்கும் ஆலை, களஞ்சியங்கள் முதலியன இருந்தன. இந்த இடங்களை எல்லாம் சுற்றி ஒரு புல்வெளியும், புல்வெளிக்கு ஒரு பலத்த முள் கம்பி வேலியும் உண்டு.

நீண்டகாலமாக அந்த இடம் அமைதியின் வாசஸ்தலமாக இலங்கி வந்தது. அரண்மனை வாசலின் தொங்கு-கதவுகள் நெடுநாட்களாக இயக்கமற்றிருந்தமையால், இப்போது பழுதுபட்டுப் போயிருந்தன. அகழிகளிலோ நீர் நிரம்பிக் கிடந்தது; தலையிலாங் குருவிகள், அரண்மனைக் கோபுரத்தின் வளைகளில் கூடுகள் கட்டிக்கொண்டு வாழ்ந்தன. சுற்றிலும் உள்ள கோட்டைச் சுவரின் பக்கம் நாள் முழுதும் பாரா காக்கும் வில்வீரன், வெயில் கடுமையாக இருக்கும்பொழுது, வெளிப்புறத்தில் தூரத்தே நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த ஒரு கோரிக்குள் போய் படுத்துக்கொண்டு ஒரு பிக்ஷுவைப்போல் உறங்குவான்.

உட்பக்கத்தில் அங்கும் இங்கும் உள்ள இரும்பு வேலைப்பாடுகள் யாவும் பள பள என்று மின்னிக்கொண்டிருந்தன. வெளிப்புறத்துக் குளிர் உள்ளே வராமல் தடுப்பதற்கு சித்திரத் தையல் போட்ட திரைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. பெரிய பெரிய பெட்டிகளில் உடைகள் வைக்கப்பட்டிருந்தன. உடைகள் பெட்டி நிரம்பி வெளியிலும் பிதுங்கிக்கொண்டிருக்கும். பாதாள அறைகளில் பெரிய பீப்பாய்கள் வைக்கப்பட்டிருந்தன. பணப் பைகளின் பாரம் தாங்காமல், ஓக் மரத்தால் செய்யப்பட்டிருந்த பெட்டிகள் 'நற நற' வென்று இரீச்சிட்டுக் கொண்டிருந்தன.

ஆயுதச் சாலையில் விளக்குத் தாங்கிகளுக்கும், காட்டு மிருகங்களின் தலைகளைப் போலச் செய்த பொம்மைகளுக்கும் நடுவே ஒவ்வொரு தேசத்தைச் சேர்ந்தனவும் ஒவ்வொரு காலத்தைச் சேர்ந்தனவுமான ஆயுதங்கள் காட்சியளித்தன.

ஆமலெஸைட் ஜாதியினர் உபயோகித்த கவண்கள், காரமாந்திய ரின் வேல் கம்புகள் முதலியவற்றிலிருந்து, மத்திய காலத்திய முகம்மதியர்கள் உபயோகித்த அகலமான வாளாயுதங்கள், நார்மானியரின் வஜ்ர கவசங்கள் வரை பல யுத்த சாதனங் களும் அங்கு வைக்கப்பட்டிருந்தன.

சமையல் கூடத்தில், மாமிசத்தைக் குத்தி வாட்டுவதற்காக போடப்பட்டிருந்த சுழல் கம்பியில் ஒரு காளையையே குத்திச் சொருகி வாட்டமுடியும். அங்குள்ள தேவாலயமோ ஒரு அரச னின் அந்தரங்க பூஜாகிருஹம் போல இருந்தது. உள்ளே தள்ளி ஒதுக்கமாக இருக்கும் மூலையில், பழைய ரோமானியர் கள் உபயோகித்தமாதிரியில் ஆவியில் குளிக்கும் ஸ்நான அறை இருந்தது. ஆனால், அரண்மனைக்கு அதிபரான பிரபுவோ இந்த ஸ்நான அறையை உபயோகிக்க மறுத்துவிட்டார் அப்படி உபயோகித்தால், அது விக்கிரக ஆராதனைப் பழக்கத்தை ஒட் டிய ஒரு காரியமாகிவிடுமாம்.

பிரபு, நரித் தோல் அங்கி ஒன்றைத் தரித்துக்கொண்டு, தம் முடைய மாளிகையில் உலாவுவார்; குத்தகைதாரர்களுக்கு நியாயத் தீர்ப்பு செய்வார்; அண்டை அயலாரின் பிணக்குகளைத் தீர்த்துவைப்பார். குளிர் காலத்தில், அவர், உறைந்த பனிக்கட்டி பாளம் பாளமாகக் கீழே விண்டு விழுவதைப் பார்த்துக்கொண் டிருப்பதோ, அல்லது தமக்குக் கதைகளை வாசித்துக் காட்டச் சொல்லிக் கேட்டுக்கொண்டிருப்பதோ வழக்கம். குளிர்காலம் போய் மனோரம்மியமான பருவம் தலை காட்டத் தொடங்கி விட்டால், அவர் தம் கோவேறு கழுதையின்மேல் சவாரி செய்துகொண்டு, குறுகலான தெருக்களின் வழியாகச் செல்லு வார். கதிர் முற்றிச் செழித்த வயல் வரப்புகளின் ஓரமாகச் சென்று, கிராமத்து ஜனங்களிடம் பேசிக்கொண்டிருப்பார்; அவர்களுக்குத் தம் ஆலோசனைகளையும் கூறுவார். பற்பல அசகாய சூரத்தனங்களை யெல்லாம் சாதித்துவிட்டு கடைசியாக ஒரு உயர் குடும்பத்துக் கன்னிமகளை வரித்துக் கல்யாணம் செய்துகொண்டார், பிரபு.

பிரபுவின் மனைவியாகிய அந்தச் சீமாட்டி ஒரு பேரழகி. அவளிடம் கொஞ்சம் கர்வமும், 'கம்' என்று அடங்கிய அமைதியும் உண்டு. அவள் தலையின்மேல் போட்டுக்கொண் டிருந்த துணியில், இரண்டு கொம்புகள் வைத்ததுபோல் அலங் காரம் செய்யப்பட்டிருந்தது. அந்தக் கொம்புகள் அவள் இங்கும் அங்கும் செல்லும்போது வாசல் நிலையில் தட்டிக்

கொண்டிருக்கும். அவளுடைய ஆடையின் கீழ்ப்பாகம் மூன்றடி அகலத்திற்குத் தரையில் கிடந்து புரளும்; அவள் நடந்து செல்லும்போது, தரையைப் பரசிக்கொண்டே வரும். அவளுடைய தட்டுமுட்டுச் சாமான்கள் யாவும் ஒழுங்குபெற வைக்கப்பட்டிருந்ததால், அந்த இடம் மடாலயத்தின் தோற்றத்தை அளித்தது.

ஒவ்வொருநாளும், காலையில், தன் பணிப்பெண்களுக்கு அவரவர்கள் செய்யவேண்டிய காரியங்களை எடுத்துரைத்து அனுப்புவாள், சீமாட்டி. பின்பு, சேதப்பட்டு விடாமல் தான் பத்திரப்படுத்தி வைத்திருக்கும் பண்டங்களையும், மருந்து வகைகளையும் போய்ப் பார்வையிட்டுவிட்டு வந்து நூல் நூற்பாள்; பலிபீடத்தின்மேல் விரிக்கும் துணிகளில் பூவேலை செய்து தைத்துக் கொண்டிருப்பாள். அடிக்கடி அவள் செய்துவந்த பிரார்த்தனையின் பலனாக, அவளுக்கு ஒரு புதல்வன் பிறந்தான்.

குழந்தை பிறந்த வைபவத்தை மூன்று நாள் பகலும், நான்குநாள் இரவும் கொண்டாடினார்கள். தரையில் கிடக்கும் இலைக்குவியலின் மீது அமர்ந்து, பெரிய பெரிய களியாட்டங்களும், விருந்துகளும், தீப்பந்த விளையாட்டுகளும், யாழ்வாத்திய சங்கீதமுமாக வைபவத்தை நடத்தினார்கள். அப்போது நடந்த விருந்தில், சாமான்யத்தில் கிடைக்காத நறுமணம் கமழும் அபூர்வமான பதார்த்தங்களை அருந்தினார்கள். விருந்துக்குக் கொண்டுவந்த கோழிகளெல்லாம் செம்மறியாடுகளைப்போல் அவ்வளவு பெரிதாக இருந்தன. உல்லாசமாகப் பொழுது போக்கிக் களிப்பதற்கு ஒரு சித்திரக்குள்ளன் வரவழைக்கப் பட்டிருந்தான். மது உண்பதற்கு வைத்திருந்த கோப்பைகள் வந்திருந்தவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்றதாக, போதுமான அளவில் இல்லை. அதன் காரணமாக, கொம்பு வாத்தியங்களிலும், கவசத் தொப்பிகளிலும் கூட மது ஊற்றிப் பருகவேண்டியதாயிற்று.

வாழ்க்கையிலேயே முதன் முதலாகப் பிரசவித்த அந்தத் தாய் அப்போது இந்த வைபவ நிகழ்ச்சிகளின் நடுவே இல்லை; அமைதியாகத் தன் படுக்கையில் சயனித்துக்கொண்டிருந்தாள். ஒருநாள் மாலை அவள் உறக்கம் நீங்கிக் கண் விழித்தாள். ஜன்னல் வழியாக அறைக்குள் பாய்ந்துள்ள ஒரு நிலாக் கிரணத்தின் ஊடே ஏதோ ஒரு சாயா ரூபம் அசைந்து கொண்டிருப்பது போலத் தோன்றியதைப் பார்த்தாள். அப்படி அசைந்து கொண்டிருந்தது ஒரு கிழவன்தான். கைநெசவு போட்ட

துணியால் ஆன ஒரு அங்கியை அவன் தரித்திருந்தான். ஒருபுறத்தில் ஜப மாலை தொங்கிகொண்டிருந்தது. தோளில் ஒரு சாப்பாட்டு மூட்டையைத் தொங்கவிட்டிருந்தான். மொத்தத்தில், அவன் ஒரு முனிவனைப்போலக் காட்சியளித்தான். படுக்கையின் பக்கம் மெதுவாக வந்தான். வந்து, தன் உதடுகளைத் திறக்காமலேயே பின்கண்டவாறு சொன்னன் :

"மகனைப் பெற்றெடுத்த தாயே! சந்தோஷப்படுவாயாக! உன் மகன் ஒரு முனி சிரேஷ்டனுக விளங்குவான்!"

அவள் கூச்சலிட்டுக் கத்துவதற்குத் தயாராக இருந்தாள். ஆனல், அதேசமயத்தில் அந்த முனிவன் நிலாக்கிரணத்தின் வழியாகவே வானத்தை நோக்கி நழுவி மறைந்துவிட்டான். வெளியே விருந்து மண்டபத்தில் திடீரென்று அதிக சப்தத்துடன் பாட்டுகள் கேட்கத் தொடங்கின. அவளுடைய காதில் தேவ தூதர்களின் குரல்கள் கேட்டன. பழையபடியும் தலையணையில், தலையைப் புதைத்துக்கொண்டாள். அவளுடைய தலைக்கு மேலே, ஒரு பிராணத் தியாகியின் எலும்புக் கூடு ஒன்று சாதிச் சிவப்புக்கள் இழைத்த சட்டம் போடப்பட்டு அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது.

மறுநாள். அன்று அவள் எல்லா வேலைக்காரர்களையுமே விசாரித்தாள். ஒவ்வொருவனும், தான் எந்த முனிவரையும் பார்க்கவில்லை என்றே சொன்னன். கனவோ அல்லது நனவோ எதுவாக இருந்தாலும், அதைத் தெய்வலோகத்திலிருந்து வந்த தொரு செய்தியாகவே கொள்ளவேண்டும் என்று அவள் கருதினள். அவள், அந்த விஷயம் சம்பந்தப்பட்டமட்டில், ஜாக்கிரதையுடன் நடந்துகொண்டாள். அதைப்பற்றி எதுவும் அவள் சொல்லவில்லை. சொன்னல், அது வீண் டம்பமாக ஆகிவிடும் என்றும், அந்த 'டம்ப'த்தினல் தான் குற்றவாளியாக நேரிடும் என்றும் பயந்தாள்.

பொழுது புலர்ந்ததும் விருந்தினர்கள் தத்தம் வாசஸ்தலங்களுக்குப் புறப்பட்டார்கள். ஜூலியனுடைய தந்தை அறையின் பக்க வாசலில் நின்று ஒவ்வொருவருக்கும் விடை கொடுத்து அனுப்பிக்கொண்டிருந்தார். கடைசி மனிதனும் விடைபெற்றுப் போனன். அப்பொழுது திடீரென்று, பனி மூட்டத்தின் மறைவிலிருந்து, ஒரு பிச்சைக்காரன் வந்து கண்ணெதிரே நின்றன். அவன் பொஹீமியாச் சீமையைச் சேர்ந்தவன், தாடியைப் பின்னி முடிந்துவிட்டு, கையில் வெள்ளிக் காப்புகளை அணிந்துகொண்டு வந்திருந்தான். அவனுடைய கண்கள் தீக்கங்குகளைப்

போல இருந்தன. ஆவேசம் வந்தவனைப்போலக் கீழ்க்கண்ட சம்பந்தா சம்பந்தமற்ற வார்த்தைகளை அவன் உளறிக் கொட்டினான்:

" ஆஹா! உன் மகன்...! அமோகமான ரத்தம்!...அமோகமான பெருமை!...நிரந்தரமான சந்தோஷம்! ஒரு சக்கரவர்த்தியின் குடும்பம்!" பிறகு, அந்தப் பிச்சைக்காரன் தனக்குப் போடப்பட்ட பிச்சைக் காசை எடுப்பதற்காகக் குனிந்தான். குனிந்தவன் அப்படியே புல்லாந்தரைக்குள்ளே மறைந்துவிட்டான்.

அரண்மனையின் அதிபரான உத்தமப் பிரபு வலதுபுறமும், இடதுபுறமும் திரும்பிப் பார்த்தார். உரத்த குரலில் கூவி அழைத்தார். காற்று சீட்டியடித்தது; காலை நேரத்துப் பனிப்படலங்கள் விலகி நகர்ந்து சென்றுகொண்டிருந்தன. அவ்வளவுதானே ஒழிய அங்கே மனிதன் எவனும் இல்லை.

சரியான தூக்கமில்லாதிருந்த காரணத்தால், தம் கண்ணுக்கு இப்படிப் பொய்யான உருவெளித் தோற்றம் தோன்றியிருக்கிறது என்று நினைத்துக்கொண்டார் பிரபு. இதைப்பற்றி வெளியே சொன்னால், எல்லோரும் சிரித்துப் பரிகசிப்பார்கள் என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். தாம் காதாரக் கேட்ட வாசகம் தெளிவுபட இல்லை என்றாலும், காதாரக் கேட்டது உண்மைதானா என்பது சந்தேகத்துக்கிடமாக இருந்த போதிலும், அவர் தம் மகனுடைய எதிர்கால சௌபாக்கியங்களையும், பீடு பெருமைகளையும் எண்ணி எண்ணிப் பிரமித்துப் போய்விட்டார்.

கணவரும் மனைவியும் தம்முடைய இந்த ரகசியங்களை ஒருவருக்கு ஒருவர் தெரிவித்துக்கொள்ளவில்லை. ஆனால் இருவரும் சமதையான பாசத்துடன் குழந்தையைப் பேணி வளர்த்தனர். தெய்வ கட்டளைப்படி வந்துதித்தவன் என்று கருதி அவனிடம் பயபக்தியுடன் நடந்துகொண்டனர். எந்நேரமும் கண்ணும் கருத்துமாக அவனைச் சுற்றியே இடைவிடாத கவனத்துடன் அமர்ந்திருந்தனர். அவனுடைய படுக்கையின் மேல் மிக மிக மிருதுவான தூவியை உயரமாகப் பரப்பி மெத்தையாகச் செய்திருந்தனர். அந்த மெத்தைக்கு மேலாக புறாவின் வடிவத்தில் செய்யப்பட்ட தீபம் ஒன்று நந்தா விளக்காக எப்போதும் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவனுக்குத் தொட்டிலாட்ட மூன்று தாதிமார் நியமிக்கப்பட்டிருந்தனர். அருமையான துணிகளால் போர்த்தப்பட்டு, ரோஜா நிறக் கன்னங்களுடனும்

நீல விழிகளுடனும், குமிழ் வைத்துத் தைக்கப்பட்ட மேல் சட்டையுடனும், முத்துக்களை இடைவெளியின்றி சரம் சரமாகக் கோத்திருந்த குல்லாயுடனும் அவன் காட்சியளித்தது கிறிஸ்து நாதரைக் குழந்தைப்பிராயத்தில் பார்த்ததுபோல் இருந்தது. அவனுக்குப் பல் முளைக்கும்போது, அவன் ஒருதடவை கூட அழுதது கிடையாது.

பாலகனுக்கு எழாண்டு நிரம்பியது. பெற்றெடுத்த அன்னை அவனுக்குச் சங்கீதம் கற்றுக்கொடுத்தாள். அவனைத் தைரியவானாக்க எண்ணிய தந்தை, பெரியதொரு குதிரையின் மேல் அவனை ஏற்றி உட்கார வைப்பார். ஜூலியன் சந்தோஷ மிகுதியுடன் சிரிப்பான். சிறிது காலத்திலேயே அவன் அசுவ சாஸ்திரத்தைப் பற்றிய சகல விஷயங்களையும் தெரிந்துகொண்டுவிட்டான்.

கற்றறிந்த முதறிஞராகிய ஒரு பிக்ஷு வந்து அவனுக்குப் புனித வேதங்களையும், அராபிய எண் குறியீடுகளையும், லத்தீன் பாஷையையும், திரைச்சீலையில் கண்கவரும் ஓவியங்களைத் தீட்டும் முறைகளையும் கற்றுக் கொடுத்தார். வித்தியாப்பியாசத்திற்கு அமைதியான சூழ்நிலை வேண்டுமென்று குருவும், சிஷ்யனும் அரண்மனையின் மேல் மாடத்திற்குப் போய் விடுவார்கள். ஒவ்வொரு நாளும் பாடங்கள் முடிந்து, இருவரும் படிகளின் வழியாகக் கீழே இறங்கி வரும்பொழுது அங்கு கண்ணில் தென்படும் மலர்களையெல்லாம் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டு வருவார்கள்.

சில சமயங்களில், தொலைவிலே வளைந்து செல்லும் பள்ளத்தாக்கு மார்க்கத்தில், ஒரே சாரையாகப் பொதி ஏற்றிய குதிரைகள் நடந்து செல்லும். கீழை நாட்டு உடை தரித்த ஒருவன் அந்த குதிரைச் சாரையை நடத்திச் செல்வான். அவன் ஒரு வியாபாரி என்று தெரிந்து கொண்டு, அவனை அழைத்து வரும்படி தம்முடைய பணியாளனை அனுப்பி வைப்பார் பிரபு. அந்த அந்நியன் மனக்களிப்புடன் கோட்டைக்கு வருவான். முகப்பு மண்டபத்தில் வந்திருந்து தான் கொண்டு வந்த பட்டு பட்டாவளிகளையும், பொன்மணி பூஷணங்களையும், வாசனைத் திரவியங்களையும், இது வரையிலும் யாரும் பார்த்தறியாத அபூர்வ வஸ்துக்களையும் வெளியிலெடுத்துக் காண்பிப்பான். வியாபாரம் முடிந்ததும் எதேஷ்டமான லாபத்துடன் திரும்பிச் செல்வான்

மற்றொரு சமயம் யாத்திரிகர்கள் கூட்டம் ஒன்று வந்து வாசல் கதவைத் தட்டும். கணப்பின் முன்னால் போய் நின்றால் அவர்களின் உடைகளிலிருந்து ஆவி கிளம்பும். வயிறாரச் சாப்

பிட்ட பின்பு அவர்கள் தங்கள் பிரயாணக் கதைகளைச் சொல்லுவார்கள். நுரை கக்கும் கடலில் திசை கெட்டுச் செல்லும் கப்பல்களைப் பற்றியும், தீயாகக் கொதிக்கும் பாலைவன மணலில் கால்நடையாக நடந்து சென்ற பிரயாணங்களைப் பற்றியும், 'அஞ்ஞானி' க் கூட்டத்தின் மூர்க்கத்தைப் பற்றியும், ஸிரியா தேசத்து குகைகளைப் பற்றியும், குதிரை லாயத் தொட்டிகள், கல்லறைகள் முதலியவை பற்றியும் சொல்லுவார்கள். பிறகு சின்னப் பிரபுவுக்கு தங்கள் மேலங்கிகளிலிருந்து கிளிஞ்சல்களை எடுத்துக் கொடுப்பார்கள்.

அரண்மனையின் அதிபரான பிரபு அடிக்கடி தம் போர்க்களச் சகபாடிகளுக்கு விருந்து செய்வார். விருந்தினர்கள் குடித்துக் களிக்கும்போது, முன்பு தாம் செய்துள்ள யுத்தங்களைப் பற்றியும், இடித்துத் தகர்க்கும் யந்திர சாதனங்களைக் கொண்டு கோட்டையரண்களை மோதித் தாக்கியதைப் பற்றியும், அப்போது ஏற்பட்ட பலத்த காயங்களைப் பற்றியும் பழையபடியும் ஞாபகப்படுத்திப் பேசிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் பேசுவதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கும் ஜூலியன் ஒரே ஆரவாரத்துடன் முழங்குவான். இதைக் கண்ட அவனுடைய தந்தை, தம் மகன் சந்தேகமில்லாமல் ஒரு பெரிய வெற்றி வீரனாகத் தலையெடுப்பான் என்று எண்ணி மகிழ்வார். கிறிஸ்து நாதரின் திருவவதாரத்தை ஒட்டி நடத்தப்படும் வைபவம் முடிந்தபின், அந்தி மாலைப் பொழுதில், வெளியே வருவான் ஜூலியன். திருவோடுகளுடன் காத்திருக்கும் பிச்சைக்காரர்களின் மத்தியில் சென்று, மிகுந்த அடக்கத்துடனும் உத்தமமான தோற்றப் பொலிவுடனும், தன் பணப் பையை எடுத்துத் தானம் வழங்குவான். இதைக் கண்ட அன்னை, நம் மகன் ஒரு தலைமைப் பாதிரியாராக விளங்கப் போவதை நாம் கண்ணாரக் காணப் போகிறோம் என்று தனக்குள் தீர்மானித்துக் கொள்ளுவாள்.

தேவாலயத்திற்குப் போனால், தன் பெற்றோர்களின் பக்கத்தில் போய் இருந்து கொள்வான் ஜூலியன். பிரார்த்தனைக் காலம் எவ்வளவு நேரம் நீடித்த போதிலும், அவன் முழந்தாளிட்டு, தலை தரையைத் தொடும்படியாகக் குனிந்து, கூப்பிய கரங்களுடன்தான் இருப்பானே ஒழிய ஒரு தடவை கூட எழுந்து நிமிரமாட்டான்.

ஒரு நாள். அன்று இதே போன்று பிரார்த்தனை செய்யும் போது ஒரு முறை சற்றே தலை தூக்கி ஏறிட்டுப் பார்த்தான்.

அப்போது சுவரின் பொந்திலிருந்து ஒரு சுண்டெலி ஓடி வந்து பலிபீடத்தின் படிகளின் வழியாகச் சென்று, இரண்டு மூன்று முறை வலப் புறமும் இடப் புறமுமாக ஓடியபின், வந்த வழியே திரும்பிச் சென்றுவிட்டது. அடுத்த ஞாயிற்றுக்கிழமை அவன் பிரார்த்தனைக்கு வந்திருந்தபோது, சுண்டெலியைத் திரும்பவும் தான் பார்க்க நேரிடும் என்ற எண்ணம் அவன் சிந்தையைக் குலைத்துக் கொண்டிருந்தது. திரும்பவும் சுண்டெலி வந்தது. அப்படியே ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் அவன் சுண்டெலியின் வரவை எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். சுண்டெலியைப் பற்றிய எண்ணம் அவனுக்கு எரிச்சலைத் தந்தது. பிறகு அதைத் திரும்பிப் பார்க்கவே கூடாது என்றும், அதை ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்றும் தீர்மானித்தான். அப்புறம் ஜூலியன், பூஜாக்கிருஹத்தின் கதவுகளைப் பூட்டினான். அதன் படிகளில் ரொட்டித் துண்டுகளைச் சிதறி வைத்தான். கையில் ஒரு கோலை எடுத்து வைத்துக் கொண்டு, சுவர்ப் பொந்தின் பக்கமாக நின்று கொண்டான்.

வெகு நேரத்துக்கப்பால், ஒரு இளஞ்சிவப்பான மூக்கு வெளியே தெரிந்தது. பிறகு சுண்டெலி பரிபூரணமாகப் பொந்தைவிட்டு வெளியே வந்தது. உடனே அதை ஒரு அடி அடித்தான். அந்தச் சின்னஞ்சிறிய சடலம், இயக்க சக்தியை இழந்து போய்க் கிடக்கும் காட்சியை பயபீதியுடன் பார்த்துக் கொண்டு நின்றான். அந்த இடத்தில், ஒரு துளி ரத்தம் தெறித்து விழுந்து கறை பட்டிருந்தது. அவசர அவசரமாக அதைத் தன் சட்டையினால் துடைத்தான். சுண்டெலியைத் தூக்கி வெளியில் எறிந்தான். அப்புறம் அதைப் பற்றி அவன் யாரிடமும் எதுவும் சொல்லவே இல்லை.

தோட்டத்தில், பலவகைப்பட்ட பட்சி ஜாலங்கள் வந்து இரைதேடுவது உண்டு. ஜூலியன், தந்திரமாக ஒரு பொறியமைத்து, அதில் கடலைப் பருப்புகளைச் சிதறி வைத்து விட்டு வந்து விடுவான். சிறிது நேரத்தில், எல்லாப் பறவைகளும் பொறியில் அகப்பட்டு, உயிரிழந்து அவன் மீது மழைத் துளிகளைப் போலச் சிதறி விழும். ஜூலியன் தன் தந்திரத்தை எண்ணிப் பார்த்து, சிரித்துச் சந்தோஷம் அடைவான்.

ஒரு நாள் காலையில் கோட்டைச் சுவரின் உச்சியில் ஒரு புறா உட்கார்ந்து அலகினால் தன் இறகுகளைக் கோதிக் கொடுத்துக் கொண்டிருப்பதை அவன் பார்த்தான். சற்று நின்று கவனித்தான். பக்கத்தில் இருந்த சுவரில் ஒரு பொந்தும், அந்தப் பொந்

தில் ஒரு கல்லும் இருந்தன. உடனே கல்லைக் கையில் எடுத்து புறாவைக் குறிபார்த்து எறிந்தான். அவ்வளவுதான் கல்லெறி பட்டு, மொத்தையாக அகழியில் போய் விழுந்தது புறா.

விறு விறு என்று கீழே இறங்கி வந்தான் ஜூலியன். நாய்க் குட்டியைவிட அதிக வேகத்துடனும், சூக்ஷ்மத்துடனும் புதர் களிடையே துழாவித் துழாவிப் பார்த்தான்.

சிறகொடிந்த புறா, வேலிப்புறத்தில் வளர்ந்திருந்த ஒரு வெண் மலர்ச் செடியில் வந்து அமர்ந்து, நடுநடுங்கிக்கொண்டி ருந்தது.

அதனுடைய உயிர் இன்னும் உடலைவிட்டு நீங்காமல் விடாப்பிடியாக ஒட்டிக் கொண்டிருந்ததைப் பார்க்க ஜூலி யனுக்கு எரிச்சலாக இருந்தது. உடனே அதன் கழுத்தைப் போய்த் திருகத் தொடங்கினான். புறா வலிப்பு பிடித்தது போலத் தன் அங்கங்களை உதறுவதைக்கண்டு ஜூலியனுடைய இதயம் ராக்ஷஸப் பூரிப்புடன் படபடவென்று அடித்துக்கொண்டது. பிறகு, புறா பரிபூரணமாக விறைத்துவிட்டது. அப்போது ஜூலியன் தனக்கு மயக்கம் வருவதை உணர்ந்தான்.

அன்று மாலையில், சாப்பிட்டுக் கொண்டிருக்கும் சந்தர்ப் பத்தில், அவனுடைய தகப்பனார், ஜூலியனைப் போன்ற வய துள்ள சிறுவன் வேட்டையாடும் வித்தையைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்று கூறினார். உடனே எழுந்துபோய், ஒரு பழைய கையெழுத்துப் பிரதியைக் எடுத்துக்கொண்டு வந் தார். அதில் வேட்டைக் கலையைப்பற்றிய விவரங்கள் வினா— விடை ரூபத்தில், ஒரு வாத்தியார் தம் சிஷ்யனுக்குக் கற்பிக்கும் முறையில், எழுதப்பட்டிருந்தன. அந்த நூலில், நாய்களுக்குப் பயிற்சி கொடுப்பது, பருந்துகளைப் பழக்குவது, வலை விரிப்பது முதலிய விவரங்களும், மோப்பத்தின்மூலம் மான்களையும், சுவடுகளைப்பார்த்து ஓநாய்களையும் கண்டுபிடிப்பது எப்படி என்ற விவரங்களும் இருந்தன. மேலும், அந்த விலங்கினங்கள் எப்படிப் புறப்பட்டுப் போயின, எங்கே அவை ஒளிந்து கொள் வது வழக்கம் முதலிய விவரங்களைக் கால் தடத்தைக் கொண்டு கண்டுபிடிக்கும் முறைகளும், பற்பல ஜீவராசிகளின் குரல்களைப் பற்றிய அட்டவணையும், வேட்டைக்குச் சாதகமாக அடிக்கும் காற்றுகளும், மிருகத்தைத் துரத்திச் செல்லவேண்டிய நியதிகளும் புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருந்தன.

ஜூலியன் இவற்றையெல்லாம் மனப்பாடமாக ஒப்பிக்கத் தொடங்கியதும், அவனுடைய தகப்பனார் அவன் வேட்டையாடு

வதற்கு வேண்டிய பரிவாரங்களையும், சாதனங்களையும் தயார் செய்தார்.

வேட்டைப் பரிவாரத்தில், மான்களைவிட அதிவேகமாக ஓடக் கூடியனவும், தப்பி ஓடும் குணம் உடையனவுமான ஆப்ரிக்க நாய்கள் மொத்தம் இருபத்துநான்கு இருந்தன. பிரித்தானிய மாகாணத்தைச் சேர்ந்த நாய்கள் ஆணும் பெண்ணுமாக மொத்தம் பதினேழு ஜோடிகள். அவற்றின் வெண்ணிற மேனியில் செம்புள்ளிகள் விழுந்திருந்தன. அகன்ற மார்புள்ள அந்த நாய்கள் எஜமானன் கிழித்த கோட்டை எக்காரணம் கொண்டும் தாண்டாது. அவற்றின் குரல் இடி முழக்கம் போல அலறும். பன்றி வேட்டைக்காக, கரடி போல ஒரே கற்றையாக மயிர் முளைத்த நாய்கள் மொத்தம் நாற்பது வரவழைக்கப்பட்டிருந்தன. கழுதைகளைப் போலப் பெருத்த ஆகிருதி கொண்டதும், தீக்கொழுந்து போல நிறமுடையதும், காட்டு எருதுகளைத் துரத்திப் பிடிப்பதற்காகக் கொண்டு வரப் பட்டது மான தார்த்தாரிய நாய்களும் இருந்தன. அவற்றின் முதுகுப புறம் அகன்றும் கால்கள் செங்குத்தாகவும் இருக்கும். மேலும், பட்டுப் போன்ற மயிர் முளைத்த கருநாய்கள்வேறு சித்தப் படுத்தி வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் குரல் எக்காள வாத்தியத்தின் தொனியையும் கூட மிஞ்சக் கூடியதாகும்.

ஒரு கஜ தூரத்துக்கப்பால் தனியாக எட்டு நாய்கள் கட்டிக்கிடந்தன. அவை எந்நேரமும் சங்கிலிகளைச் சலசல என்று ஆட்டிக் கொண்டிருக்கும். அந்த சுழல் விழிக குக்கல்கள் தலை தெறிக்கும் வேகத்தில் ஓடும்; சிங்கத்தைக் கண்டாலும் கூட பயப்படாது.

இந்த நாய்களுக்கெல்லாம் வெள்ளைக் கோதுமையில் சுட்ட ரொட்டிகளை உணவாக வைத்தார்கள். கல் தொட்டிகளிலே அவை நீர் பருகும். அவற்றிற்கு மிகவும் தடபுடலான பெயர்கள் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன.

நாய்க் கூட்டங்களின் தகுதியையும் மிஞ்சக் கூடியவையாக இருந்தன, ராஜாளி இனப் பறவைகளின் கூட்டம். வேட்டையில் பயன்படுத்துவதற்காக இந்தப் பறவைகள் தருவிக்கப் பட்டிருந்தன. காகஸஸ், பாபிலோன், ஜெர்மனி முதலிய நாடுகளின் வல்லூறுகளும், தூர தேசங்களின் நெய்தல் பிராந்தியங்களில் உள்ள மலைச் சிகரங்களில் பிடித்த பைரிகள், கழுகுகள், ராஜாளிகள் முதலியவையும் கூரைவேய்ந்த ஒரு தனி அறையில் அவற்றின் ஆகிருதிக்கு ஏற்ப வரிசைப்படுத்தி வைத்து சங்கிலி

யால் பிணைக்கப்பட்டிருந்தன. அவற்றின் முன்பு உள்ள புல் வளர்ந்த திட்டில் அவை அடிக்கடி இறங்கிவந்து, அங்கங்களை ஆட்டி அசைத்து, உடம்பின் விறைப்பைத் தளர்த்திக் கொள்ளும்.

வேட்டைக்காக பற்பல தினுசான வலைப்பைகள், தூண்டில்கள், பொறிகள், பத்தயங்கள், வலைகள் ஆகியவையும் தயார் செய்யப்பட்டு சித்தமாக இருந்தன.

வேட்டை நாய்களுடன் அடிக்கடி காட்டுப் புறத்திற்கு அவர்கள் செல்லுவார்கள். திடீரென்று நாய்கள் ஒரு இடத்தை இலக்கு வைத்துத் திரும்பும். வேட்டைக்காரர்கள் மிகவும் ஜாக்கிரதையாக அடியெடுத்து வைத்துச் சென்று ஒரு பெரிய வலையை விரித்து வைப்பார்கள். திடீரென்று, உத்தரவு கொடுத்த மாத்திரத்தில் நாய்கள் குரைக்கும். காட்டுப் பறவைகள் பறக்க எத்தனித்து, வலையில்தான் சிக்கிக் கொள்ளும். சுற்றுப் பக்கங்களிலிருந்து வரவழைக்கப்பட்டவர்கள் தம்பதிகள், குழந்தைகள், பணிப் பெண்கள் சமேதராக வந்து, பறவைகளை மிக இலகுவாகப் பிடித்துக்கொண்டு செல்வார்கள்.

மற்றொரு சமயத்தில் ஜூலியனுடைய ஆட்கள் முரசுகளை ஓங்கிக் கொட்டுவார்கள். அவற்றைக்கேட்டு முயல்கள் திகில் கொண்டு ஓடும்; நரிகள் குழிகளிலோ, நீரூற்றுக்களிலோ போய் விழும். சந்தர்ப்ப வசமாக ஒரு ஓநாயின் கால், வில்கம்பிகளில் அகப்பட்டுக் கொள்ளுவதும் உண்டு.

ஜூலியன் இப்படி மிகவும் இலகுவான முறையில், சாதனங்களின் துணை கொண்டு வேட்டையாடுவதை விரும்பவில்லை. தன்னுடைய குதிரையோடும், ராஜாளியோடும் தூரத்தே சென்று, யாருடைய கூட்டுறவும் இல்லாமல் தனியாக வேட்டையாடுவதையே விரும்பினான். அவனுடைய ராஜாளி, கருங்கடல் பிரதேசத்திலிருந்து கொண்டுவரப் பட்டதாகும். பனித் துண்டம் போல் அது வெள்ளை வெளேர் என்று இருந்தது. அதன் உச்சந்தலையில் மிருதுவான தூவல் முளைத்திருந்தது. அதன் நீலநிறக் கால்களில் கட்டப்பட்டிருந்த தங்கமணிகள் கிலுங்கிக் கொண்டிருந்தன. புல்வெளிப் பிரதேசத்தில் ஜூலியன் நாலுகால் பாய்ச்சலில் சவாரி செய்து கொண்டு போகும்போது கூட, அவன் புஜத்தில் அது அசையாமல் உட்கார்ந்து கொண்டிருக்கும். அவன் அதனுடைய கால்களைப் பிடித்து மேலே பறக்க விடுவான். உடனே அது அம்பைப் போல ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு பறக்கும். பிறகு

வானத்தில் பெரிதும் சிறிதுமாக இரண்டு புள்ளிகள் திரும்பு வதும் சந்திப்பதுமாக இருக்கும்; அப்புறம் ஆகாயத்தின் நீல நிறத்தில் மறையும். கொஞ்ச நேரத்திற்குள்ளாக ராஜாளி ஒரு பறவையை குத்திக் கிழித்து இழுத்துக்கொண்டு படபடக்கும் சிறகுகளுடன் வந்து ஜூலியனுடைய மணிக்கட்டில் உட்காரும்.

இதேமாதிரி, கழுகுகளையும், பருந்துகளையும், காகங்களையும், பிணங் கொத்திக் கழுகுகளையும் பறக்க விடுவான் ஜூலியன்.

தன்னுடைய கொம்பை ஊதிக்கொண்டே, மலைச்சாரல்களிலும், நீரூற்றுக்களிலும், காட்டுப் பகுதியிலும் தன்னுடைய நாய்கள் செல்லும்போது அவற்றைப் பின் தொடர்ந்து செல்லுவதில் ஜூலியனுக்கு மிகவும் விருப்பம். நாய்களின் வாயில் அகப்பட்ட மான் கதறத் தொடங்கியதும், அவன் 'பட்' டென்று அதைக் கீழே வீழ்த்துவான். வேட்டை நாய்கள் மிகவும் உக்கிரமாக அந்த மானைக் கிழித்துத் துண்டம் துண்டமாகக் கபளீகரம் பண்ணுவதையும், மானின் உடம்பிலிருந்து ஆவி கிளம்புவதையும் பார்த்து சந்தோஷம் அடைவான்.

பனி மூட்டம் போட்டிருக்கும் தினங்களில் நீர்த்தேக்கங்களுள்ள சதுப்பு நிலத்தில் வெகுதூரம் தள்ளிப்போய், வாத்துகள், மீன் தின்னிப் பிராணிகள், காட்டுத் தாராக்கள் முதலியவற்றுக்காகப் பதிபோட்டுக் காத்துக்கொண்டிருப்பான்.

வைகறைப்போதில் வாசல் படிகளில் மூன்று மெய் காவலர்கள் அவனுக்காகக் காத்துக்கொண்டிருப்பார்கள் மூகறிஞரான அந்த பிக்ஷு தம் வீட்டுக் கூரையில் உள்ள ஜன்னல் வழியாக சைகை காட்டி ஜூலியனைத் திரும்பி வரும்படி அழைப்பார். இதை எல்லாம் ஜூலியன் காதில் போட்டுக்கொள்ளுவதில்லை. அனல் கொதிக்கும் வெயில் அடித்தாலும், மழை பெய்து கொண்டிருந்தாலும், புயல் அடித்தாலும் எதையும் கவனிக்காமல் அவன் வெளியே கிளம்பி விடுவான். ஊற்று ஜலத்தைக் கையால் அள்ளிக் குடிப்பான். வாயு வேகத்தில் சவாரிசெய்யும் போது காட்டில் கனிந்த ஆப்பிள் பழங்களை எடுத்துத் தின்பான். களைப்பாக இருந்தால், ஒரு ஓக் மரத்தின் கீழே அமர்ந்து ஓய்வெடுத்துக் கொள்ளுவான். நடுஜாமத்தில் பழையபடியும் வீட்டுக்குத் திரும்பி விடுவான். வரும்போது அவனுடைய உடம்பெல்லாம் ரத்தமும் மண்ணுமாக இருக்கும். தலையிலே சுக்கான் கற்கள் சிதறிக் கிடக்கும். உடம்பிலே, காட்டு

மிருகங்களின் நாற்றம் வீசும். அவனும் காட்டு மிருகங்களைப் போலவே வளர்ந்து வந்தான். அவனுடைய தாயார் அவனை முத்தமிட்டுத் தழுவும்போது, யாதொரு மன இங்கிதமும் இன்றியே அந்த உபசரணையை ஏற்றுக்கொள்ளுவான். அப்போது அவன், ஆழ்ந்த விஷயங்களைப் பற்றி மனசுக்குள்ளேயே சிந்தனை செய்துகொண்டிருப்பது போலக் காணப்படுவான்.

ஜூலியன் கத்தியால் காடிகளைக் கொன்றான்; கோடரியால் மாடுகளைக் கொன்றான்; வேல் கம்பினால் பன்றிகளைக் குத்திக் கொன்றான். ஒரு சமயத்தில், தூக்குமேடைக் கருகில் ஒரு பிணத்தைக் கடித்து மென்று தின்றுகொண்டிருந்த ஓநாய்களின் கூட்டத்தில் அகப்பட்டுக்கொள்ளும்படி நேர்ந்தது. அப்போது கைக் காவலுக்கு ஆயுதம் ஒன்றுமில்லாமல் இருந்தான்; ஒரு கம்புதான் இருந்தது. அதைக்கொண்டு தன்னைப் பாதுகாத்கொண்டான் ஜூலியன்.

குளிர்காலத்தில் ஒருநாள் காலை. அன்று சூரியோதயத்துக்கு முன்பே எழுந்து, தோளில் வில் சுமந்து, அம்புகளைத் தூணியில் வைத்துக்கொண்டு தளவாடங்களுடன் வெளியே கிளம்பிப் போனான்.

டென்மார்க் தேசத்திலிருந்து வாங்கிவந்த அவனுடைய குதிரை நிதானமாக நடை போட்டுக்கொண்டு சென்றது. அதன் குளம்பு பட்டுத்தரையில் ஓசை கிளம்பியது. அதைப் பின் தொடர்ந்து இரண்டு நாய்கள் வந்துகொண்டிருந்தன. அவனுடைய அங்கியில் வெண்பனி முத்து முத்தாக உதிர்ந்து படிந்தது. அப்போது முரட்டுக் காற்றும் அடித்துக்கொண்டிருந்தது. அடிவானத்தின் ஒரு பகுதி வெளுத்தது. உதயத்தின் வெண் சோதியில் சில முயல்கள் தங்கள் வளைகளின் வாயிலில் உல்லாசமாக விளையாடிக்கொண்டிருந்தன. இதைக் கண்ட இரண்டு நாய்களும் 'பளிச்'சென்று முயல்களின் மீது பாய்ந்தன; இங்கும் அங்கும் கொஞ்ச நேரம் மறுக் காட்டி ஓடி, கடைசியில் முயல்களின் முதுகுகளை முறித்துவிட்டன.

சற்று நேரத்தில், மரக் காட்டினுள் நுழைந்தான் ஜூலியன். ஒரு மரத்தின் கிளையில், கரு நிறமான சேவல் ஒன்று குளிரினால் விறைத்துப்போய், ஸ்மரணையையும் இழந்து, சிறகின் கீழே தலையை வைத்து உறங்கிக்கொண்டிருந்தது. ஜூலியன், பின் வீச்சாக வாளை வீசி, அந்தப் பறவையின் இரண்டு பாதங்களையும் வெட்டிவிட்டான். பிறகு, கீழே விழுந்த பறவையை

எடுக்காமல் அப்படியே போட்டுவிட்டு, அப்பால் நடந்து சென்றான்.

மூன்று மணி நேரத்திற்குப்பின் அவன் ஒரு மலைச்சிகரத்தின் மேல் இருந்தான். வானமே கருத்துத் தெரியும் அளவுக்கு அவ்வளவு உயரமாக இருந்தது அந்தச் சிகரம். அவனுக்கு முன்பாக நீண்ட சுவர்போல ஒரு பாறை; அதன் சரிவில் கீழே தள்ளி செங்குத்தான ஒரு சிகரம். அந்தப் பாறையின் மறு கோடியில் இரண்டு மலையாடுகள் மலை வெடிப்பின் வழியாகக் கீழே பார்த்துக்கொண்டிருந்தன. ஜூலியனிடத்தில் அப்போது அம்புகள் இல்லை. ஏனென்றால், தான் கீழே நிறுத்திவிட்டு வந்திருக்கும் குதிரையின் மேல் அவற்றைத்வைத்துவிட்டு வந்திருந்தான். அதனால், தானே அந்த ஆடுகள் நிற்கும் இடத்திற்குப் போகத் தீர்மானித்தான். காலில் செருப்பு ஒன்றுமில்லாமல், அந்த இடத்திற்கு நடந்து சென்றான். முதலில் அகப்பட்ட ஆட்டின் இடுப்பு வழியாகத் தன் வாளைக் குத்திச் செருகினான். உடனே இரண்டாவது ஆடு, பயபீதியுடன் வெட்ட வெளியில் தாவிக் குதித்தது. அதையும் தாக்குவதற்காக ஜூலியன் முன் நோக்கி பாய்ந்தான். அப்போது வலது கால் வழுக்கியதால், செத்துக் கிடக்கும் ஆட்டின் மீது விழுந்துவிட்டான். அவனுடைய தலை, மலை வெடிப்பிற்கு மேலாக இருந்தது; கைகள் விரிந்து கிடந்தன.

கீழே, சமவெளிக்கு அவன் இறங்கி வந்தபின், அங்கிருந்த ஆற்றங் கரையில் உள்ள மர வரிசையை ஒட்டி நடந்து சென்றான். நாரைகள் அடிக்கடி அவனுடைய தலைக்கு மேலாகத் தாழப் பறந்து கொண்டிருந்தன. அவற்றை ஒன்றுவிடாமல், தன் சவுக்கால் அடித்து வீழ்த்தினான்.

இதற்கு நடுவே, சற்று கதகதப்பான காற்றடித்து வெண்பனி உருகிக்கொண்டிருந்தது. பனிப்படலத்தின் பெரிய பெரிய கீற்றுக்களெல்லாம் மேல் நோக்கி எழும்பிக்கொண்டிருந்தன. கதிரவன் வெளியே முகம் காட்டினான். அப்போது, தூரத்தில் ஈயத்தைப்போல உறைந்துகிடக்கும் ஏரியொன்று மினுமினுத்துக் கொண்டிருப்பதை ஜூலியன் பார்த்தான். அந்த ஏரியின் நடுவில், அவன் இதுவரையிலும் பார்த்திராத ஒரு பிராணி நின்றுகொண்டிருப்பது தென்பட்டது. அது நீரிலும் நிலத்திலும் வாழக்கூடிய ஒரு பிராணியாகும். அதன் மூக்கு கன்னங் கரேல் என்றிருந்தது. தூரத்திலிருந்தபோதிலும், ஜூலியன் எய்த அம்பு அதன் சரீரத்தைக் கீழே வீழ்த்தியது. ஆனால், அதன் பக்கமாகப்

போய் தோலை உரித்துக்கொள்ள இயலாமல் இருந்ததை எண்ணி அவன் மிகவும் மனம் வருந்தினான்.

அதன் பின் இருபுறமும் உயரமான மரங்கள் வளர்ந்துள்ள பாதை வழியாக நடந்து சென்றான். அந்த மரங்களின் கிளைகள் ஒன்றோடு ஒன்று பின்னி, அரண்யத்தின் ஆசார வாசலுக்கு வெற்றிக் கவான் வளைத்துவிட்டதுபோல் இருந்தது. அங்கே ஒரு புதரிலிருந்து சின்னஞ்சிறு மான் ஒன்று வெளியே துள்ளிக் குதித்து சாலைச் சந்திப்பில் வந்து நின்றது. வேறொரு பிராணி வளையிலிருந்து வெளியே வந்தது. பசும் புல்லின் மேல் ஒரு மயில் தனது தோகையைவிரித்தது. அவன் எல்லாவற்றையும்கொன்று தீர்த்ததும், பின்னும் அதிக மான்கள், பின்னும் அதிக மயில்கள், அப்படியே எண்ணிறந்த கரும் பறவைகள், வர்ண சிங்காரத்துடன் தூவி முளைத்த பல பறவைகள், பூனை ஜாதியைச் சேர்ந்த பல விலங்குகள், நரிகள், முள்ளம் பன்றிகள், துரித திருஷ்டியுடைய பிராணி வகைகள்,—இப்படிக் கணக்கிலடங்காத ஜீவராசிகள், ஒவ்வொரு தடவையும் அடியெடுத்து வைக்கும்போது முன்னே வந்து வந்து குழுமிய வண்ணம் இருந்தன.

எல்லாம் அவனைச் சூழ்ந்து வளைத்து நின்றன. நடுங்கிக்கொண்டும், இதமாகவும், வேண்டுதல் நிறைந்த பார்வையுடனும் அவை நின்றன. ஆனால், அவற்றைக் கொல்லுவதில் கொஞ்சம் கூட அவன் சளைக்கவில்லை. ஒருசமயம், வில்லை வளைத்தான்; மறு சமயம் வாளை உருவினான்; வேறொரு சமயம் அகன்றதொரு கத்தியால் குத்தினான். எதைப் பற்றியும், அவனுக்கு சிந்தனை இல்லை; எந்த ஒரு விஷயத்தைப் பற்றிய பழைய ஞாபகமும் இல்லை. இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாத ஏதோ ஒரு இடத்தில், இவ்வளவென்று கணக்கிட முடியாத ஏதோ ஒரு கால அவகாசத்தில், அவன் வேட்டையாடினான்; தான் உயிரோடு இருப்பது ஒன்றையே காரணமாகக் கொண்டு, வேட்டையாடினான். ஒவ்வொரு காரியமும், கனவில் அனுபவிக்கும் சௌகரிய வசதிகளுடன் நடந்தேறிக்கொண்டிருந்தது. அப்போது, அசாதாரணமான ஒரு காட்சி அவனைக் கவர்ந்திழுத்தது: சர்க்கஸ் கொட்டகையின் உட்புறம் போல அமைந்த ஒரு பள்ளத்தாக்கு; அதில் நிரம்ப நிரம்ப மான் கூட்டம். எல்லாம ஓரிடத்தில் குழுமி தங்கள் சுவாசத்தால் ஒன்றுக்கொன்று சுகோஷ்ணம் நல்கிக்கொண்டிருந்தது. அங்கிருந்து ஆவி கிளம்பி பனிமூட்டத்தின் ஊடே செல்லுவது கண்ணுக்குப் புலனாகியது

எல்லாவற்றையும் பிணக் காடாக குவிக்கப்போகிறோம்

என்ற எண்ணம், சில கணங்கள் அவனை ஆனந்தத்தில் ஆழ்த்திப் பேச்சு மூச்சில்லாமல் செய்துவிட்டது. அவ்வளவுதான் குதிரையைவிட்டு இறங்கினன். சட்டைக் கைகளை மேல்நோக்கி நிரைத்துச் சுருட்டினன். அம்புகளைத் தொடுக்க ஆரம்பித்து விட்டான்.

முதல் அம்பு சீட்டியடித்துக்கொண்டு பாய்ந்தது. இந்தச் சப்தத்தைக் கேட்ட மான்கள் ஒரு கணம் முகத்தைத் திருப்பிப் பார்த்தன. இடைவெளியின்றி ஒரு பெரும் பிண்டமாகக் கூடியிருந்த மான்கூட்டத்தின் நடுவே, இடைவெளிகள் தோன்றின; ஓலக் குரல்கள் எழும்பின. கூட்டம் முழுவதிலுமே பய நடுக்கம் உதறலெடுத்தது.

பள்ளத்தாக்கின் வாசல் மிக மிக உயரத்திலிருந்ததால், அதைக் கடப்பது நடவாத காரியமாக இருந்தது. அதனுல் சுற்றிச் சூழ்ந்துள்ள மலை மறைப்பை ஒட்டி மான்கள் தாவிக் குதித்தன. ஜூலியன் குறிவைத்து அம்புகளை எய்துகொண்டிருந்தான். புங்கானுபுங்கமாக அவன் தொடுத்த பாணங்கள், புயல் வீசும்போது உதிரும் மழைச் சரம்போலச் சிதறின. சுவாதீனத்தை இழந்துவிட்ட மான்கள் போராடின; பின் வாங்கி சண்டை செய்தன. ஒன்றின்மேல் ஒன்று குதிரை ஏறின; மான்களின் கொம்புகள் ஒன்றுடன் ஒன்று சிக்கிக் கொண்டன. எல்லா மான்களின் உடம்பும் ஒன்ருக இணைந்து, பெரியதொரு மண்மேடுபோல் குவிந்து, நொறுங்கிச் சரிவதும், பழையபடியும் மேல் நோக்கி எவ்வுவதுமாக இருந்தன.

நெடுநேரத்துக்குப் பின் எல்லாம் உயிரைவிட்டன. மணல் மேல் கிடக்கும் மான்களின் சடலங்களில் உதிர நீர் கசிந்தது; குடல்கள் வெளியே பிதுங்கிக் கிடந்தன; மூச்சுவிடும்போது புடைத்துச் சுருங்கும் அவற்றின் வயிறுகளின் அசைவு சன்னஞ்சன்னமாகக் குறைந்துகொண்டிருந்தது. கடைசியில் எல்லாம செயலொடுங்கிவிட்டன.

இரவு நெருங்கிக்கொண்டிருந்தது; மரக்கிளைகளின் ஊடாகத் தெரியும் அடிவானம், ரத்தப்படலம் போலக் காட்சியளித்தது.

ஜூலியன் ஒரு மரத்தின்மேல் சாய்ந்து, அகல விரித்த கண்களுடன் தான் செய்த எண்ணற்ற கொலைகளை ஆச்சரிய பிருதியுடன் பார்த்துக்கொண்டு நின்ருன். இத்தனையையும் தன்னுல் எப்படிக் கொல்ல முடிந்ததென்பது அவனுக்கே விளங்கவில்லை.

பள்ளத்தாக்கின் மறுபக்கத்திலே, வனப்பிரதேசத்தின் விளிம்பில், ஒரு ஆண் மானும், ஒரு பெண் மானும், ஓராண்டு நிரம்பிய ஒரு மான் குட்டியும் நிற்பதை ஜூலியன் பார்த்தான்.

ஆண் மான் பருத்த சரீரத்துடனும், கருப்பாகவும், வெள்ளைத் தாடியுடனும் இருந்தது. பதினாறு கவடுகளுடன் அதற்குக் கொம்பு முளைத்திருந்தது. பெண் மான், பழுத்த இலைகளைப் போல பழுப்பாக இருந்தது. அப்போது நுனிப் புல்லை மேய்ந்து கொண்டிருந்தது. புள்ளிகள் விழுந்துள்ள மான் குட்டி சிவப்பும் மஞ்சளும் கலந்த தங்க நிறத்தில் இருந்தது. கொஞ்சம்கூட ஆடாமல் அசையாமல் நின்று அது தன் தாயிடம் பால் குடித்துக் கொண்டிருந்தது.

பழையபடியும் ஜூலியனுடைய வில் நாத ஜங்காரம் செய்தது. அந்த ஸ்தலத்திலேயே கொலையுண்டு விழுந்தது மான் குட்டி. அடுத்த இலக்கு அதன் தாய். ஆகாயத்தைப் பார்த்து மனிதக் குரல் கொடுத்து, உள்ளத்தைப் பிளக்கின்ற ஓலத்துடன் கீழே விழுந்தது பெண் மான். இது, ஜூலியனுக்கு சினத்தை மூட்டிவிட்டது. மற்றொரு அம்பால் அதன் மார்பைத் துளைத்துக் கீழே படுக்கவைத்தான்.

ஆண் மான் ஜூலியனைப் பார்த்தது. ஒருதடவை துள்ளிக் குதித்தது. ஜூலியன் தன் கடைசி அம்பை அதன் மீது எய்தான். அம்பு மானின் நெற்றியில் தைத்து, அங்கேயே குத்திக் கொண்டு நின்றது.

அம்புபட்ட வேதனையை மான் உணர்ந்ததாகத் தெரியவில்லை. கீழே செத்துக் கிடக்கும் சடலங்களைத் தாண்டிக் கொண்டு அது ஜூலியனை நோக்கி வந்தது; அவன் மீது பாய்ந்து, அவன் குடலைக் கீழே சரிப்பதற்கும் தயாராக அது வந்துகொண்டிருந்தது. வாய்விட்டுச் சொல்ல முடியாத பீதியுடன் ஜூலியன் பின் வாங்கினான். அந்த ராக்ஷஸப் பிராணி அங்கே நின்றது. கனல் பொரி பறக்கும் கண்களுடன், ஒரு பெரிய மனிதனைப்போலவும், நீதிபதியைப் போலவும் மேதகைமையுடன் நின்றது. தூரத்தில் 'கலகல' என்று ஒருமணி கிலுங்கிக்கொண்டிருக்கும் சப்தம் கேட்டது. அப்போது பின் கண்டபடி மூன்றுதடவைகள் மாறி மாறிச் சொன்னது மான்:

" நாசமாய்ப் போகிறவனே! நாசமாய்ப் போகிறவனே! நாசமாய்ப் போகிறவனே! ஏ ராக்ஷஸநெஞ்சம் படைத்த காட்டு

பிராண்டியே! நீ என்றாவது ஒரு நாள் உன் தகப்பனையும், தாயையும் கொல்லும் கொலை பாதகனாக ஆவாயாக!"

மானின் கால்கள் தடுமாறி, வளைந்து கொடுத்தன. கண்கள் அமைதியோடு மூடிக்கொண்டன. மான் செத்துப்போய் விட்டது.

ஜூலியன் வாயடைத்துப் போனான். பிறகு, அலுப்பு மேலீட்டால், வெறுப்பும், ஆழ்ந்த சோகமும் அவனைத் திடீரென்று பற்றிக்கொண்டன, தலையைக் கைகளில் தாங்கிக்கொண்டு நெடுநேரம் அழுதான்.

அவனுடைய குதிரை எங்கோ காணாமல் போய்விட்டது. நாய்கள் அவனைக் கைவிட்டுவிட்டன. அவனைத் தழுவிய ஏகாந்தம், பயங்கரமாகவும் இன்னதென்று புரிந்துகொள்ள முடியாத பல அபாயங்கள் நிரம்பியும் இருந்தது. திடீரென்று ஒரு பெரும் பயத்தினால் உந்தித் தள்ளப்பட்டு, எழுந்து நடக்க ஆரம்பித்தான். கால் காட்டும் திசையில் யாதொரு இலக்குமின்றி நடந்து சென்றான். வெகு சீக்கிரத்திலேயே தான் கோட்டைக்கு வந்துவிட்டதை உணர்ந்தான்.

அன்றிரவு அவன் தூங்கவில்லை. தொங்கு விளக்கின் அசைந்தாடும் ஒளியில் அந்தப் பெரிய கருப்பு மானையே மனக்கண்ணால் பார்த்துக்கொண்டிருந்தான். அது கூறிய தீர்க்க தரிசனம் அவன் மனதை சஞ்சலத்தால் நிரப்பிவிட்டது. அந்த நினைப்பை எதிர்த்துப் போராடினான். "மாட்டேன்! மாட்டேன்! நான் அவர்களைக் கொல்ல இயலாது!" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். பிறகு சிந்தித்தான். "ஆனாலும், ஒருவேளை எனக்கு அப்படி எண்ணம் தோன்றி விட்டால்...?" அந்தப் பைசாசம் அவ்விதம் கொலை புரியும்படி தன்னைத் தூண்டிவிடக்கூடாதே என்று பயந்தான்.

மூன்று மாதகாலமாக அவன் தாயார் அவனுடைய படுக்கையின் பின் பக்கத்தில் இருந்து மனவேதனையுடன் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள். தகப்பனார், ஓய்வொழிச்சலின்றி முன்னும் பின்னும் உலாவிக்கொண்டும், முனகிக்கொண்டும் இருந்தார். மிகவும் பேர் போன வைத்தியர்கள் எல்லாம் வரவழைத்தார் பிரபு. அவர்கள் எத்தனையோ மருந்துகளைக் கொடுக்கும்படியாகக் கூறினார்கள். மேலும், ஏதோ ஒரு கெட்ட காற்று அடித்ததினாலோ, அல்லது காம வேதனைக்கு உள்ளானதினாலோ அவனுக்கு இம்மாதிரி நோய் வந்திருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால், ஜூலியனோ, கேட்கின்ற

கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லாமல் தலையைமட்டுமே ஆட்டிக்கொண்டிருந்தான்.

மறுபடியும் பழைய பலத்தை அடையப் பெற்ருன் ஜூலியன். வாசல் முற்றத்தில் உலாவுவதற்காக அவனை அழைத்துச் சென்றனர். வயோதிகரான பிக்ஷுவும் பிரபுவும் சேர்ந்து ஆளுக்கு ஒரு பக்கம் பிடித்து அவனைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்றுர்கள்.

பரிபூரணமாகக் குணமாகி விட்டது. ஆனலும், வேட்டையாடுவதற்கு மட்டும் அவன் அடியோடு மறுத்து விட்டான்.

அவனுக்கு மன உற்சாகம் ஊட்ட விரும்பிய அவனுடைய தந்தையார், ஒரு பெரிய வாளைப் பரிசாக அளித்தார்.

அந்த வாள், ஒரு கம்பத்தின் உச்சியில், ஒரு இரும்புக் கவசம் ஒன்றின் உள்ளே வைக்கப்பட்டிருந்தது. அந்த இடத்திற்கு ஏணி போட்டுத்தான் ஏறிச் செல்லவேண்டும். ஜூலியன் மேலே ஏறிச் சென்றுன். அந்தவாள் மிகவும் கனமாக இருந்ததினல், அவனுடைய கைப்பிடியிலிருந்து நழுவிக் கீழேவிழுந்து விட்டது. பிரபுவின் பக்கமாக உரசிக்கொண்டு விழுந்த வாள் அவருடைய மேல் அங்கியைத் துண்டித்து விட்டது. ஜூலியனே, தன் தந்தையைத்தான் கொன்றுவிட்டதாக நினைத்தான். உடனே மூர்ச்சையாகி விட்டான்.

அன்றிலிருந்து, ஆயுதங்கள் என்றுலே அவனுக்குப் பெரும் பயம். உறையிலிருந்து உருவி வைத்திருக்கும் வாளைப் பார்த்தால், அவன் பயத்தினல் வெளிறிப் போவான். அவனுக்கு ஏற்பட்ட இந்தப் பலவீனம், குடும்பத்தாரை அதிக துக்கத்தில் ஆழ்த்தியது.

கடைசியில் பிக்ஷு வந்தார். கடவுளின் பெயரால், அவனுடைய கௌரவத்தின் பெயரால், அவனுடைய மூதாதைகளின் பெயரால், அவன் பழையபடியும் பிரபுத்துவ நடவடிக்கைகளில் ஈடுபடவேண்டும் என்று அவர் ஆக்ஞாபித்தார்.

மெய் காவலர்கள் ஒவ்வொரு நாளும், உல்லாசமாக வேல் கம்பு விளையாட்டு ஆடிக் களித்துக் கொண்டிருப்பது வழக்கம். ஜூலியன் இந்த விளையாட்டில் அவர்களை வென்று விட்டான். ஏதாவது ஒரு பாட்டிலின் கழுத்தைக் குறிபார்த்து வேல் கம்பை வீசுவான் ஜூலியன்; பருவக் காற்றடிக்கும் திசைகளைக் காட்டும்கருவியின் முனைகளை வேல்கம்பால் ஒடித்தெறிவான்; நூறு

எட்டுகளுக்கு* அப்பால் நின்று, ஒரு கதவிலுள்ள ஆணிகளைக் குறி பார்த்து எறிவான்.

கோடை காலத்தில் ஒரு நாள் மாலை, பனி மூட்டத்தில் எல்லாமே மங்கலாகத் தோற்றமளித்துக் கொண்டிருந்தன.

தோட்டத்திலே, கொடி வீட்டினுள் ஜூலியன் அமர்ந்திருந்தான். அப்போது வலது கோடியில் உள்ள வேலியின் அழிக்கம்பில் இரண்டு வெண் சிறகுகள் படபடவென்று அடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அது ஒரு கொக்கு என்பதில் அவன் யாதொரு சந்தேகமும் கொள்ளவில்லை. அதைப்பார்த்து வேல்கம்பை வீசினான்.

நெஞ்சைப் பிளக்கும் அலறல் ஒன்று கேட்டது. அப்படி அலறியது அவனுடைய தாயார்தான்; அவளுடைய தொப்பியை ஊடுருவிச் சென்றது வேல்கம்பு; அத்துடன் தொப்பியைக் கொண்டுபோய் சுவரில் ஆணியால் அடித்தமாதிரி மாட்டி விட்டது.

ஜூலியன் கோட்டையைவிட்டு வெளியே ஓடினான்; பிறகு, அவன் அங்கு திரும்பிவரவே இல்லை.

## 2

நாடோடிகளாகத் திரிந்து, அசகாய சூரத்தனங்களைச் செய்துவந்த கூட்டத்தில் ஜூலியன் தானும் ஒருவனாக மாறினான்.

பசியையும் தாகத்தையும், ஜுரத்தையும் பேன் கடியையும் அனுபவித்தான். கலவரங்களின் பேரிரைச்சலும், செத்துக் கொண்டிருக்கும் மனிதர்களின் காட்சியும் அவனுக்கு சாளாரம்பத்தில் பழகிப்போய் விட்டன. காற்று அவனுடைய தோலைப் பதனிட்டது. கவசத்தை அணிந்து அணிந்து அவனுடைய அவயவங்கள் கல்லாக இறுகி விட்டன. தேகதிடமும், வீர நெஞ்சமும் படைத்தவனாக இலங்கினான். 'கம்' என்ற அடக்கத்துடனும், எதையும் கவனித்து முன் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்வோனாகவுமிருந்தான். இந்த நிலையில் யாதொரு சிரமமுமின்றி, ஒரு கூட்டத்தின் தலைமைப் பதவியைச் சம்பாதித்தான்.

* எட்டு-கால் எட்டு; அதாவது, நின்றயிடத்திலிருந்து ஒரு தடவை அடியெடுத்து வைத்ததும், இரண்டு கால்களுக்கும் இடையில் விழும் தூரம்.

யுத்தகளத்தில் போர் தொடங்கும் போது தன் கைவாளை வீசி, ராணுவ வீரர்களை ஏவி விடுவான். புயல் காற்றில் ஆடி அசைந்துகொண்டே, கந்தகக் கலவையின் நெருப்பு தன் மார்புக் கேடயத்தில் விழும்போதும், கொதிக்கின்ற கீலும், உருக்கிய ஈயமும் மேலே கோரிகளிலிருந்து தன்மீது கொட்டப்படும் போதும், முடிச்சுக் கயிற்றைப்போட்டு இரவோடு இரவாகக் கோட்டைச் சுவர்களில் ஏறுவான். அவனுடைய சின்னஞ்சிறு கேடயம் சில சமயங்களில் கல்லெறிப்பட்டு நொறுங்கும். அவனும் அவனுடைய பரிவாரங்களும் செல்லும்போது பாரம் தாங்காது பாலங்கள் உடைந்து சரியும். கைத்தண்டத்தை சுழற்றி வீசி, தன்னந்தனியனாக நின்று பதினைந்து குதிரை வீரர்களைக் கொன்று வீழ்த்துவான். தன்னை நோக்கி முன்னேறி வருகிறவர்களை எல்லாம் அனாயாசமாக எடுத்தெறிவான். இருபது தடவைகளுக்கும் மேலாக, அவன் செத்துப்போய் விட்டதாகக் கருதப்படுகிறான். தெய்வ சாதகத்தால், அவன்எப்போதும் பத்திரமாகத் தப்பித்து வந்தான். ஏனென்றால் அவன் தேவாலய பக்தர்களையும், அனாதைகளையும், விதவைகளையும், குறிப்பாக வயோதிகர்களையும் ஆபத்து அணுகாமல் காப்பாற்றி வந்திருக்கிறான். யாராவது ஒருவன் தனக்கு முன்னால் நடந்து சென்றால் அவனை அழைப்பான்; என்றாவது ஒருநாள் அவனை வேறொருவன் என்று தப்பாக நினைத்துக் கொன்று விடக்கூடாதே என்பதற்காகப் பார்ப்பவனைப்போல் அவன் முகத்தைப் பார்த்துக் கொள்ளுவான். அகதிகளாக உள்ள அடிமைகள், புரட்சி செய்யும் குடியானவர்கள், கல்யாணமாகாத பெண்களின் வயிற்றில் பிறந்து பாகச்சொத்தைப் பெறாத சோரபுத்திரர்கள், விடா முயற்சி நிறைந்த பலதிறப்பட்ட இளைஞர்கள்-எல்லோரும் ஜூலியனுடைய கொடியைச் சுற்றி ஒரு படையாக திரண்டார்கள். படைவளர்ந்தது பிராபல்யத்தை அடைந்தான்; அவனிடம் உதவி நாடி வருவோர் பலராயினர். பிரான்ஸின் இளவரசன், இங்கிலாந்தின் மன்னன், ஜெருஸலத்தின் மதச்சேனை வீரர்கள், பார்த்தியர் தலைவன், அபிஸீனிய வேந்தன், கள்ளிக்கோட்டை சக்கரவர்த்தி முதலிய பலருக்கும் அவன் தக்க சமயங்களில் உதவி செய்தான். மீன் முள்ளைக் கவசமாகத் தரித்துப்போரிட்ட ஸ்காண்டி நேவியர்களையும், கல்யானையின் தோலால் கேடயங்கள்செய்து வைத்துக்கொண்டு சிவப்புக் கழுதைகள் மீது சவாரி செய்து போரிட்ட நீக்ரோக்களையும், தங்கள் தலைப்பாகைகளுக்குமேலாக கண்ணாடியைக்காட்டிலும் அதிகப் பிரகாசம் உடைய வாட்களைவீசி போரிட்ட பொன்னிற மேனியரான

இக்தியர்களேயும் எதிர்த்துச் சமர்புரிந்தான். நரமாமிசபக்ஷணிகளேயும், குரங்கு மனிதர்களேயும் முறியடித்தான். வெயில் நேரத்தில் குடுமியில் தீப்பற்றிக்கொள்ளும்படியாக வெப்பம் நிறைந்துள்ள அனல்பாலேயிலும், கைகளானவை துண்டுபட்டுக் கீழே விழும்படியாகக் குளிர் நிறைந்த பனிக்கட்டிப் பிரதேசத்திலும் அவன் நடந்துசென்ருன், சுற்றிலும் பனிமூட்டம் நிறைந்து, அதன் மூலம் பக்கத்தில் நடப்பவர்களேக் கனவு உருவங்களாகக் காட்டும் நாடுகளிலும் அவன் சுற்றினுன்.

கஷ்டம் நேர்ந்த சமயங்களில் குடியரசுகள் அவனுடைய ஆலோசனையைக் கேட்டன. ஸ்தானிகர்களின் மகா நாடுகளில், கனவில் கூட கருதாத நிபந்தனேகளே எல்லாம் எதிர்கட்சியினர் ஒப்புக்கொள்ளும்படி செய்தான். எவனுவது ஒரு அரசன் தானுகவே ஒரு மோசமான நிலேயை எய்துவிட்டால், தக்ஷணமே விரைந்து வந்து அவனேத் தடுத்தாட்கொண்டான் ஜுலியன். அரண்களில் அடைப்பட்டுக்கிடந்த ராணிகளே அவன் விடுவித்தான். மிலான் நகரத்துக் கார்க்கோடகப் பாம்பையும், ஆபர்பிர்பாச்சின் ராக்ஷஸ நாகத்தையும் கொன்று தீர்த்தவன் அவனே; வேறுயாருமல்ல.

ஒரு சமயம், ஆக்ஸிடேனிய சக்கரவர்த்தி ஸ்பானிய முஸ்லிம்களே வெற்றிகொண்டு, கார்தோவா நகரக் காலிப்பின் சகோதரியைச் சிறை எடுத்து வந்து தனக்கு வைப்பாட்டியாக வைத்துக்கொண்டிருந்தான். அவள் வயிற்றில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையை கிறிஸ்தவ தர்மப்படி சக்கரவர்த்தி வளர்த்துவந்தான். காலிப், தான் மதம் மாற விருப்பம் கொண்டதுபோலப் பாவனே செய்துகொண்டு, எண்ணற்ற மெய்காப்பாளர்கள் புடைசூழ ஆக்ஸிடேனிய சக்கரவர்த்தியின் ஆஸ்தானத்துக்கு வந்து, சக்கரவர்த்தியின் படைகளே எல்லாம் ஒருமிக்கப் படுகொலே செய்தான்; சக்கரவர்த்தியைக் கைது செய்து, ஒரு இருட்டறையில் போட்டான். அவனுடைய பொக்கிஷங்களே அபகரிப்பதற்காக, அவனே மிகவும் முரட்டுத்தனமாக நடத்தினுன் காலிப்.

சக்கரவர்த்திக்கு உதவி செய்ய ஜுலியன் விரைந்தான்; 'அஞ்ஞானிக'ளின் படையை நிர்மூலமாக்கினுன்; நகரை முற்றுகையிட்டான். காலிப்பைக் கொன்று, அவனுடைய தலேயைத் துண்டாக வெட்டி எடுத்தான். அதைப் பந்தைப்போலக் கொத்தளங்களின் மீது வீசினுன். பிறகு, சிறையிலிருந்து சக்கரவர்த்தியை விடுதலே செய்து அழைத்துவந்தான்; பழையபடியும்

ராஜ பரிவாரங்களின் முன்னிலையில் அந்த சக்கரவர்த்தியை ஸிம்மாசனத்தில் ஏற்றிவைத்தான்.

சக்கரவர்த்தி இந்தப் பேருதவிக்குக் கைம்மாருக கூடைக் கணக்கில் ஜூலியனுக்குப் பணம் கொடுத்தான். ஆனல், ஜூலியன் இந்தப் பணத்தை விரும்பவில்லை. அதேசமயத்தில், ஜூலியன் மேலும் அதிகமாக எதிர்பார்க்கிருன் என்று நினைத்த சக்கரவர்த்தி தன்னுடைய செல்வத்தில் முக்கால் பங்கைக் கொடுத்தான். இதற்கும் ஜூலியன் சம்மதிக்கவில்லை. ஆகவே, தன் ராஜ்யத்தைச் சரிபாதியாகப் பங்கிட்டுக் கொடுக்க வந்தான். ஜூலியன் நன்றிக் குறிப்பை வெளியிட்டுவிட்டு, அதையும் மறுத்துவிட்டான். தன் நன்றி விஸ்வாசத்தை எப்படித் தெரிவிப்பது என்று தெரியாமல், மனச் சஞ்சலத்துடன் சக்கரவர்த்தி அழுதுவிட்டான். பிறகு நெற்றியில் கையால் தட்டிக் கொண்டு, பிரதானி ஒருவனுடைய காதில் ஏதோ சொன்னன். திரைகள் சிலவற்றை மேலே தூக்கினர்கள்; அங்கே ஒரு கன்னிப்பெண் காட்சி தந்தாள்.

அவளுடைய அகன்ற, நீல நயனங்கள் சிறு விளக்குகளைப் போலப் பிரகாசித்தன. கவர்ச்சி நிறைந்த ஒரு புன்னகை அவள் அதரங்களை சற்றே மலரச் செய்தது. கடைசுருண்ட கூந்தல், திறந்த கழுத்துடன் உள்ள அவளுடைய மேலங்கியின் நவரத்தினங்களில் விழுந்து புரண்டது. ஒளி ஊடுருவும் கண்ணடி போன்ற மெல்லிய ரவிக்கை அவளுடைய உடம்பின் வாலிபக் கட்டழகைச் சுட்டிக்காட்டியது. மென்மையாக, அழகுக் குழிகள் விழுந்து, கொடியிடையுடன் நின்ருள் அந்தப் பெண்.

ஜூலியன் கண்ணிழந்தான்; காதல் வயப்பட்டான். அதுவரையிலும் ஒழுக்கம் வழுவாமல் வாழ்க்கை நடத்தியவனுதலால் கரைகாணுக் காதல் கொண்டுவிட்டான்.

அவளையும், அவளுக்குத் தாய் வழிச் சொத்தாகக் கிடைத்த ஒரு அரண்மனையையும் அடைந்தான் ஜூலியன். கல்யாணம் நடந்தேறியது. பிறகு விடைபெற்றுச் செல்லும்போது இரு பக்கங்களிலும் மட்டற்ற மரியாதைகளையும் உபசாரங்களையும் பரிமாறிக்கொண்டார்கள்.

தம்பதிகளுக்குக் கொடுக்கப்பட்ட அரண்மனை, கடலுக்குள் நீட்டிக்கொண்டிருக்கும் பூபாகத்தில், ஒரு ஆரஞ்சுத் தோப்பில், மூரிய மனைச்சிற்ப முறைப்படி கட்டப்பட்டதாகும்.

அது முற்றிலும் சலவைக் கல்லால் ஆக்கப்பட்டு, வெள்ளை வெளேர் என்றிருந்தது. அங்குள்ள விரிகுடா விளம்பின் சரிவில் ஒரே கெட்டாக மலர்ச் செடிகள் முளைத்திருந்தன. விரிகுடாவில் நடந்து சென்றால் காலின் கீழ் இளஞ் சிவப்பாக உள்ள சிப்பிகள் மிதிபட்டு நொறுங்குகிற சப்தம் கேட்கும். அரண்மனைக்குப் பின்புறத்தில் விசிறியின் வடிவத்தில் அமைந்த ஒரு வனம் உண்டு. எந்தக்காலத்திலும் அங்கு ஆகாயம் நீலமாகவே இருக்கும். ஒருசமயம் கடற்காற்றினாலும், மற்றொரு சமயம் தூரத்தே அடிவானத்தை நோக்கிச் செல்லும் மலய மாருதத்தாலும் அங்குள்ள மரங்கள் அவ்வப்போது குனிந்து அசைந்து ஆடும்.

மங்கலான இருட்டுடன் இருக்கும் அரண்மனையின் அறைகளுக்கு வெளிச்சம் தருவதற்காக, சுவர்களுக்குள்ளேயே ஒரு வித வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தது. மேலே பெரிய குமிழாக இருக்கும் உருண்டைக் கோபுரங்களை மூங்கிலைப்போன்ற மெல்லிய தூண்கள் தாங்கிக்கொண்டிருந்தன. குகை உருவத்தில் அமைக்கப்பட்ட சிங்காரமனைகளின் தூண்களில் செய்யப்படும் அலங்கார வேலைகள் அந்தத் தூண்களிலும் செய்யப்பட்டிருந்தன.

மண்டபங்களில் நீர்பீச்சும் ஊற்றுக்கள் இருந்தன. முற்ற வெளியில் பலநிறக் கற்களையும் ஒழுங்குபெற அடுக்கி சித்திரங்களைப் போல அலங்கார ரூபங்கள் செய்யப்பட்டிருந்தன. ஒரு அறைக்கும் மற்றொரு அறைக்கும் நடுவே உள்ள மறைப்புகளில் தோரணங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. இன்னும் மனைச் சிற்பத்தின் சொகுசான வேலைப்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டு, எங்கும் ஒரே அமைதி பாவி விளங்கியது அரண்மனை. அங்கே ஒரு கழுத்து 'டை'யின் சலசலப்பும், ஒரு பெருமூச்சும் கூடத் தெளிவாகக் கேட்கும்.

அதற்குப் பிறகு ஜூலியன் யுத்தங்களுக்குச் செல்லவில்லை. அமைதியோடு வாழ்க்கையை நடத்தினான். ஒவ்வொரு நாளும் அவனுக்கு முன்பாக ஏதாவது ஒரு கூட்டம் நடந்து செல்லும். போகும்போது கீழை நாட்டு வழக்கப்படி முழங்கால்களை வளைத்து கைகளில் முத்தமிட்டுச் செல்வார்கள் கூட்டத்தார்கள்.

அவன் ஊதாநிற ஆடை தரித்து, ஜன்னலில் முழங்கையை ஊன்றி அதன்மேல் சாய்ந்து கொண்டிருப்பான். அப்பொழுது, முன்னால் வேட்டையாடிய நாட்களை நினைவு கூர்வான். தீக்

கோழிகளையும், வேறுசில பிராணிகளையும் தூக்கிக்கொண்டு பாலை வனங்களில் ஓடுவதிலும், சிறுத்தைகளுக்காகக் காத்துக் கொண்டு மூங்கில் காட்டில் பதுங்கியிருப்பதிலும், காண்டாமிருகங்கள் நிறைந்த காட்டில் திரிவதிலும், கழுகுகளைக்குறிபார்த்து அடிக்க எட்ட முடியாத மலைச் சிகரங்களில் ஏறுவதிலும், கடலின் பனிப் பாறைகளில் நின்று வெள்ளைக் கரடிகளுடன் போராடுவதிலும் அவனுக்கு ஆசை பிறக்கும்.

சில சமயங்களில், அப்பன் ஆதாமைப்போல, தான் சுவர்க்கத்தின் நடுவில் பிராணிகளின் கூட்டத்தில் நிற்பதுபோல கனவு காண்பான். அப்போது அவன் கையை நீட்டிய மாத்திரத்தில் பிராணிகள் செத்துப்போய் விடும்; அல்லது யானைகள் சிங்கங்கள் முதல் அடர்த்தியாக மயிர் முளைத்த பூனை ஜாதிப் பிராணிகள், வாத்துக்கள் முதலியவை ஈறாக, யாவும் தத்தம் உருவத்திற்கேற்ப இரண்டிரண்டாக அணிவகுத்துச் செல்லும். ஒரு குகையின் நிழலில் பதுங்கியிருந்து அந்தப் பிராணிகளைநோக்கி வேல் கம்புகளை வீசுவான். ஆனால் அந்தப் பிராணிகளோடு வேலை முடிந்து விட்டது. அதேபோல வேறு ஒரு கூட்டம் சாரையாக நடந்து வரும். இப்படியே முடிவில்லாமல் வந்து கொண்டிருக்கும். இதற்கு நடுவே கனவிலிருந்து திடீரென்று விழித்துக் கொள்ளுவான். அப்போது அவனுடைய கண்கள் மிரள மிரள விழித்துக் கொண்டிருக்கும்.

அவனுடைய நண்பர்களில் ராஜகுமாரர்களாக உள்ளவர்கள் வேட்டையாடுவதற்காக அவனை அழைப்பார்கள். அவர்கள் அழைக்கும் போதெல்லாம் அவன் மறுத்து விடுவான். இந்தப் பிராயச்சித்தத்தின்மூலம், இனிமேல் நேரவிருக்கும் நாசத்தை நேரவிடாமல் தடுக்க எண்ணினான். ஏனென்றால் தான் பிராணிகளைக் கொல்லும் கருமத்தை ஒட்டியே தன் பெற்றோர்களின் விதியமைப்பும் இருக்கிறது என்று அவனுக்குத் தோன்றியது. இருந்தாலும் அந்தப் பிராணிகளைப் பார்க்காமல் இருப்பது அவனுக்குக் கஷ்டமாக இருந்தது; பார்க்கவேண்டும் என்ற ஆவலை கடைசியில் அடக்கவே முடியவில்லை.

ஜூலியனுடைய மனச் சந்தோஷத்தின் பொருட்டு அவன் மனைவி பாடகர்களையும், நாட்டியப் பெண்களையும் வரவழைத்திருந்தாள்.

சிறந்ததொரு பல்லக்கில் ஏறிக்கொண்டு, கணவனுடன் காட்டுப் புறத்துக்குச் செல்லுவாள்; அல்லது, ஒரு சிறு ஓடத்தின் மேல்தளத்தின் படுத்துக்கொண்டு இருவரும், வானத்தைப்

போன்று நிர்மலமாக இருக்கும் ஜலத்தில் மீன்கள் ஓடித்திரிவதைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். அடிக்கடி அவள், அவன் முகத்தில் மலர்களை எறிந்து விளையாடுவாள், அவனுடைய பாதங்களின் பக்கம் உட்கார்ந்து, தலைகுனிந்தவண்ணம் மூன்று தந்திபோட்ட யாழைமீட்டி பண்ணிசை கூட்டுவாள். பிறகு அவனுடைய புஜத்தின் மேல் கைகளைக் கோத்துக் கொண்டு, பயந்த குரலில், "பிரியமுள்ள பிரபு! உங்களுக்கு என்ன மனக்கஷ்டமோ!" என்று கேட்பாள்.

அவன் பதில் சொல்லமாட்டான்; விம்மி விம்மி அழுவான். கடைசியில் ஒருநாள், தன் சிந்தனையில் உறுத்திக்கொண்டிருக்கும் அந்தப் பயங்கரமான எண்ணத்தைச் சொல்லிவிட்டான்.

அவள் தக்க காரண காரியங்களைக் காட்டி, அது ஒரு பொய் நினைப்பு என்று வாதாடினன்; மறுதலித்தாள். எப்படிப் பார்த்தாலும் அவனுடைய பெற்றோர்கள் ஏற்கெனவே காலமாகித்தான் இருக்கவேண்டும் என்றும், ஒருவேளை அவன் அவர்களை எப்பொழுதாவது பார்க்க நேரிட்டாலும் எந்த சந்தர்ப்பத்தைக் கருதி, என்ன காரியத்திற்காக அப்படிப்பட்ட குற்றம் செய்யும்படி நேரப்போகிறது என்றும், இதையெல்லாம் யோசித்தால், பயப்படுவதற்கு யாதொரு ஆதாரமும் கிடையாது என்றும், அதனால் அவன் வேட்டையாடுவதை மேற்கொள்ளவேண்டும் என்றும் சொல்லி வாதாடினாள்.

அவள் சொல்லுவதையெல்லாம் புன்னகை செய்த வண்ணம் கேட்டுக்கொண்டிருந்தான் ஜூலியன். ஆனால், தன் ஆசையைத் திருப்தி செய்துகொள்ளுவதற்கு அவன் மனம் சம்மதம் அளிக்கவில்லை.

ஆகஸ்டு மாதத்தில் ஒருநாள் மாலை; இருவரும் பள்ளியறையில் இருந்தனர். அவள் படுக்கையில் போய்ப் படுத்தாள். ஜூலியன் பிரார்த்தனை செய்வதற்காக முழந்தாளிட்டுக் கொண்டிருந்தான். அப்போது அவன் காதுக்கு நரி ஊளையிடும் சப்தம் கேட்டது. அப்புறம் வெளியே ஜன்னலுக்குக் கீழே மெல்லிய காலடி யோசை கேட்டது. இருட்டில், அவன் கண்களுக்கு மிருகங்களின் உருவங்கள் காட்சியளித்து மறைந்தன. அவனுடைய ஆவல் மட்டுக்கு மீறிவிட்டது. உடனே தன் அம்பறாத் தூணியை எடுத்தான்.

அவள் ஆச்சரியம் கொண்டவள்போல் காணப்பட்டாள்.

ஜூலியன் சொன்னன்: "எல்லாம் உன் கட்டளைக்குக்

கீழ்ப்படிந்துதான். சூரியோதயத்தில், நான் திரும்ப வந்துவிடுவேன்.''

அவன் இவ்வாறு சொன்னபோதிலும் கூட, அவள், ஏதோ அபாயம் சம்பவிக்கப் போவதாக எண்ணி பயந்தாள்.

பழையபடியும் அவளுக்கு ஆறுதல் சொன்னான். அவன் முந்திய தினங்களில் சொன்னதற்கும், இப்போது நடந்து கொள்ளுவதற்கும் உள்ள முரண்பாட்டைக் கண்டு ஆச்சரியப்பட்டவளாக, வெளியே சென்றான்.

சிறிதுநேரம் கழித்து, வில்லேச் சேவகன் ஒருவன் உள்ளே வந்து, யாரோ இரண்டு அந்நியர்கள் வந்திருப்பதாகவும், அரண்மனையில் பிரபு இல்லாவிட்டாலும், சீமாட்டியைப் பார்க்க வேண்டும் என்றும் கூறுவதாகவும் சொன்னான்.

சீக்கிரத்திலேயே, ஒரு கிழவனும் கிழவியும், குனிந்து கூனலாகி, ஒரேயடியாகப் புழுதிபடிந்து, முரட்டு சணல் துணிகளை உடுத்து, தடியை ஊன்றிக்கொண்டு உள்ளே வந்தார்கள்.

இருவரும், ஜூலியனுடைய பெற்றோரிடமிருந்து தாம் செய்தி கொணர்ந்திருப்பதாகத் துணிவோடே சொன்னார்கள்.

என்ன செய்தி என்று கேட்பதற்காக, சீமாட்டி சற்று குனிந்தாள்.

ஆனால், வந்திருந்தவர்களும்சீமாட்டியும் ஒருவரை ஒருவர் ஒருதடவை பார்த்துக்கொண்டதும், அவர்கள் கேட்டார்கள்: ஜூலியன் இன்னும் தம்முடைய பெற்றோர் மீது அன்பு வைத்திருக்கிறாரா? எப்போதாவது அவர்களைப் பற்றிப் பேசுவது உண்டா?'' ''சந்தேகமில்லாமல்!'' என்றாள் சீமாட்டி.

உடனே உரத்த குரலில், ''அப்படியா? நாங்கள் தான் அந்தப் பெற்றோர்கள்!'' என்று சொல்லிவிட்டு, இருவரும் உட்கார்ந்தார்கள். மிகமிக அலுத்துக் களைத்துப்போய்த் தள்ளாடினார்கள்.

''என் கணவர், உங்களுடைய மகன்தான் என்பதற்கு என்ன அத்தாட்சி?''

ஜூலியனுடைய உடம்பில் உள்ள குறிப்பிடத்தக்க சில அடையாளங்களை அவர்கள் சொன்னார்கள்.

சீமாட்டி துள்ளி எழுந்தாள். வேலைக்காரனை அழைத்தாள். வந்தவர்களுக்கு சாப்பாடு போடப்பட்டது.

கடும்பசியானாலும், அவர்களால் சரியாகச் சாப்பிடவே இயலாமல் இருந்தது. சிமோட்டி தனியாக ஒதுங்கி உட்கார்ந்து, அந்த இரண்டு வயோதிக ஜீவன்களும் கிண்ணங்களை எடுக்கும் போது கைகள் நடுங்குவதைக் கவனித்துக்கொண்டிருந்தாள்.

ஜூலியனைப் பற்றி அவர்கள் போட்ட கேள்விகளுக்குக் கணக்கில்லை. ஒவ்வொன்றுக்கும் அவள் பதில் சொன்னாள். ஆனால், அவர்களைப் பற்றி (பெற்றோர்களைப் பற்றி) ஜூலியன் மனதில் நிலவியுள்ள துரதிர்ஷ்டம் பிடித்த அந்த ஒரு பயத்தைப் பற்றி மட்டும் அவள் வெளியிடவில்லை.

தங்கள் அரண்மனையைவிட்டு வெளியே சென்ற ஜூலியன் திரும்பி வராமலே இருந்து விட்டதால், அவர்கள் அவனைத் தேடிப் புறப்பட்டு பல வருஷங்களாக அலைந்ததாகவும், ஏதேதோ அர்த்தமற்ற சூசகங்களையும் கூட நம்பி, தங்கள் நம்பிக்கையை இழக்காமல் தேடியதாகவும் சொன்னார்கள். மேலும், பாலங்கள் தோறும் சுங்கக் கட்டணம் செலுத்தவும், சாப்பாட்டு விடுதிகளில் சாப்பிடவும், தங்கியிருக்கவும், அங்கங்கே உள்ள ராஜாங்கங்களின் வரிக்காகவும், வழிப்பறித் திருடர்களுக்குப் பறி கொடுக்கவுமாக, ஏராளமான பணம் செலவழிந்து விட்டதென்றும், கடைசியில் எல்லாவற்றையும் இழந்து, யாதொரு உடைமையும் இன்றி இப்போது பிச்சைக்காரர்களாக இருப்பதாகவும், ஆனல் வெகு சீக்கிரத்தில் தங்கள் குமாரனைக்கண்டு தழுவிக்கொள்ளப் போவதால், அந்தக் கஷ்டங்கள் எல்லாம் ஒரு பொருட்டல்ல என்றும் சொன்னார்கள். தம் குமாரனுக்கு இப்படி அழகான மனைவி கிடைத்த நல்லதிர்ஷ்டத்தைப் போற்றினார்கள். ஆனல் அவளைப் பூரணமாகப் பார்க்கவும், போதுமான அளவு முத்தமிடவும் அவர்களுக்கு முடியவில்லை.

அரண்மனையின் வளப்பத்தைப்பார்த்து அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். தந்தை, சுவர்களை எல்லாம் பார்த்துக்கொண்டு வரும்போது, ஒரு சுவரில் ஆக்ஸிடேனிய சக்கரவர்த்தியின் ராஜ கவசத்தைக் கண்டார். "அந்த சக்கரவர்த்திக்கே உரிய அந்தக் கவசத்தை இந்த அரண்மனையின் மாட்டிவைக்க என்ன காரணம்" என்று கேட்டார்.

"அந்த சக்கரவர்த்திதான் என் தகப்பனார்" என்று அவன் சொன்னான்.

அவருக்கு, முன்னால் பொஹீமியாக்காரன் சொன்ன தீர்க்க தரிசனம் ஞாபகத்துக்கு வந்தது. வயதான தாய்

அந்த முனிவனின் வார்த்தைகளை நினைத்துப் பார்த்தாள். தன் குமாரனுக்கு கிடைத்துள்ள இந்த மிகப் பெரிய கீர்த்தி, என்றென்றும் நிரந்தரமாக நிலைத்து நிற்கப்போகும் கீர்த்தி விலாசத்தின் உதயகாலம் என்று கருதினாள். லஸ்தர் விளக்கின் வெளிச்சத்தில் மேஜையின் பக்கமாக, திறந்தவாய் மூடாமல் ஒரே பிரமிப்பில் ஆழ்ந்துபோய் இருவரும் உட்கார்ந்திருந்தனர்.

அவர்கள் தங்கள் வாலிபத்தில் மிகமிக அழகாக இருந்திருக்கவேண்டும். தாயாரின் அளகபாரத்திலிருந்து ஒரு உரோமம் கூட உதிரவில்லை. அவளுடைய கன்னங்களின்மேல் மென்மையுடன் நெளிந்து தொங்கும் அந்தக் கூந்தல், பனிப்பாளங்களைப்போல இருந்தது. உயரமாகவும், பெரிய தாடியுடனும் இருந்த தந்தை, தேவாலயத்தில் பார்க்கும் உருவச் சிலையைப்போல் இருந்தார்.

ஜூலியன் வரும்வரை கண்விழித்துக்கொண்டே உட்கார்ந்திருக்க வேண்டாமே என்று தெரிவித்துக்கொண்டான் அவன் மனைவி. அவர்களைப் படுக்கைக்குத் தானே அழைத்துச் சென்றாள்; தானே ஜன்னல் கதவைச் சாத்திவிட்டு வந்தாள். இருவரும் உறங்கிவிட்டார்கள். அப்போது வைகறை புலரும் வேளை. பறவைகள் கீதம் இசைக்கத் தொடங்கின.

ஜூலியன் அரண்மனையின் பிரகாரத்தைத் தாண்டி, அதிவேகமாக வனத்தினுள்ளே நடந்துகொண்டிருந்தான். மிருதுவான புல்லும், மணம் சுமந்துவரும் இளங்காற்றும் அவனுக்கு சுகமாக இருந்தன.

கீழே உள்ள அடர்த்தியான புல்பூண்டுகளின்மேல் மரங்களின் நிழல் படிந்திருந்தது. சில இடங்களில் நிலாவொளி பட்டு வெண்மையாகத் தோற்றுவதைக் கண்டு அங்கே ஜலம் கட்டிக் கிடக்கிறதோ என்று எண்ணி அப்பால் அடியெடுத்து வைக்கத் தயங்கினான். சில இடங்களில் நிச்சலனமான ஏரியின் நீர்ப் பரப்பு, புல்வெளியின் பசுமையோடு நிற வித்தியாசம் தெரியாமல் கலந்து ஐக்கியமாகியிருக்கும். எங்கு நோக்கினாலும் ஒரே அமைதி. சில நிமிஷங்களுக்கு முன்னால் தன் அரண்மனையைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்த பிராணிகளில் எதுவுமே அவன் கண்ணுக்கு அப்போது தட்டுப்படவில்லை.

மரக்காடு போகப் போக மிக அடர்த்தியாக இருந்தது. இருளும் அதிகப்பட்டது. சரீர பலத்தைத் தகர்த்து மயக்கத்தைக் கொடுக்கும் நெடியுடன் திடீர் திடீரென்று முரட்டுக் காற்று அடித்துக் கொண்டிருந்தது. உதிர்ந்து கிடக்கும் இலைக்

குவியல்களில் மூழ்கியும், சற்று ஆசுவாசத்துடன் மூச்சுவிட்டுக் கொள்ள ஓக்-மரங்களில் சாய்ந்தும் சமாளித்துக் கொண்டிருந் தான் ஜூலியன்.

திடீரென்று அவன் முதுகுப் பின்னால் ஒரு கருப்புருவம் துள்ளித் தாவியது. அது ஒரு காட்டுப்பன்றி. ஜூலியனுக்கு வில்லை எடுப்பதற்கே நேரமில்லை. அதை ஒரு துரதிர்ஷ்டம் என்று கருதி மனக்கஷ்டம் அடைந்தான்.

பிறகு, மரக்காட்டை விட்டு வெளியே வந்தபோது, அங்கே வேலி போல் நீண்ட ஒரு புதரை ஒட்டி ஓநாய் ஒன்று ஓடு வதைப் பார்த்தான். ஒரு அம்பை எடுத்து எய்தான். ஓநாய் உடனே நின்று அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு பழையபடி யும் தன் போக்கில் சென்றது. ஜூலியனுக்கும் தனக்கும் உள்ள தூரம் கூடாமலும் குறையாமலும் இருக்கும்படியாக அவன் நெருங்க நெருங்க ஓட்டமுமில்லாமல் நடையுமில்லாமல் நிதானமான வேகத்துடன் ஓநாய் போய்க்கொண்டிருந்தது. ஜூலியன் குறி பார்த்து அடிக்க எத்தனிக்கும்போது அது அதிவேகமாக ஓடத் தொடங்கியது.

இதேவிதமாக எல்லைகாண முடியாத சமவெளிப்பிரதேசத் தையும், பிறகு மணல் குன்றுகளையும் கடந்து வந்தான் ஜூலி யன். கடைசியில் ஒரு பீடபூமிப் பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்து கீழே பார்த்தால், விசாலமான காட்டுப் பிரதேசம் தெரியும்.

பீடபூமியில் சமாதிகளின் இடிபாடுகளுக்கிடையில் அங் கொன்றும் இங்கொன்றுமாகக் பலகைக் கற்கள் சிதறிக் கிடந் தன. செத்துப் போனவர்களின் எலும்புகளின் மீது தட்டுத் தடு மாறிக்கொண்டே நடந்தான். பல இடங்களில், புழுவரித்த சிலுவைக் கட்டைகள் துக்கம் பீடித்தது போலச் சாய்ந்து கொண்டிருந்தன. கல்லறைகளின் நிழல் மறைவிலிருந்து காட்டு நாய்கள் வெளிக்கிளம்பி வந்தன. பயங்கரமாகவும் படபடவென்று மூச்சு வாங்கிக்கொண்டும் வந்து தாவிக் குதித்தன; கற்களின் மேல் அவை நடந்துவரும்போது 'கட், கட்' என்று சப்தம் கேட்டது. ஜூலியன் பக்கத்தில் நின்று தங்கள் பற்களின் ஈறெல்லாம் தெரியும்படியாக வாயைப் பிளந்து கொண்டு அவனை மோப்பம் பிடித்தன. ஜூலியன் வாளை உருவினான். உடனே எல்லாம் நாலா திசையிலும் சிதறி ஓடின. புழுதிப் படலத்தின் மறைவிலே எல்லாம் மறைந்து விட்டன.

ஒரு பணி நேரத்துக்குப்பிறகு, இரண்டு குன்றுகளுக்கு இடையே உள்ள ஒரு சந்தில் வெறி பிடித்த மூர்க்கத்தனமான ஒரு காட்டுக் காளையைப் பார்த்தான். அது தன் கொம்புகளால் பணலைப் பிறண்டிக் கொண்டிருந்தது. அதன் தாடையில்வேல் கம்பால் குத்தினன் ஜூலியன். அந்த மாட்டின் உடம்பு வெண் கலத்தால் செய்யப்பட்டதோ என்று கருதும்படியாக, ஜூலி யனுடைய வேல்கம்பு முறிந்து சில்லுச் சில்லாகக் கீழே விழுந் தது. ஜூலியன் கண்களைமூடி, மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டு நின்றான். திரும்பவும் அவன் கண்களைத் திறந்து பார்க்கும்போது மாடு அங்கே இல்லை; எங்கோ மறைந்து விட்டது.

அவமானத்தால் அவனுடைய ஆத்மா மயக்கமுற்று சுய உணர்வை இழந்தது. ஏதோ ஒரு பெரியசக்தி அவனுடைய ஆற்றலை நாசமாக்கிக் கொண்டிருந்தது. கடைசியில் வீட்டுக் குப் போக வேண்டும் என்ற எண்ணத்துடன், பழைய படியும் வனத்தின் வழியாக நடந்தான்.

காட்டில் இடை விடாமல் கொடிகள் பின்னிக் கிடந்தன. அவற்றை வாளால் கத்திரித்துக்கொண்டே நடந்தான். அப் போது திடீரென்று அவன் கால்களுக்கு ஊடாக சின்னஞ்சிறு மாமிசபக்ஷணி ஒன்று பாய்ந்து செல்லும்; ஒரு சிறுத்தை அவன் தோளைத் தாண்டிக்கொண்டு போகும்; வெண்ணிறமான மேல் படடை உள்ள ஒரு மரத்தை ஒரு பாம்பு சுற்றிக் கொண்டிருக் கும். அந்த அடர்த்தியான இலை தழைகளுக்குள் ஒரு சிறு காகம் உட்கார்ந்து ஜூலியனைக் கவனித்துக்கொண்டிருக்கும். கிளைகளிலே இங்கும் அங்குமாக 'தீப்பொறிகள்' ஏராளமாகத் தெரியும். அதைப் பார்த்தால் வானம், தன் நக்ஷத்திரங்களை எல்லாம் அந்த வனத்திலே மழையாகப் பெய்துவிட்டது போலத் தோன்றும். மிருகங்கள், காட்டுப் பூனைகள், அணில் கள், ஆந்தைகள், கிளிகள், குரங்குகள் முதலியவற்றின் கண் கள்தான் தீப்பொறிகள் மாதிரித் தோற்றம் அளித்தன.

அவற்றைப்பார்த்து அம்புகளைச் சரமாரியாக எறிந்தான். சிறகுடன் உள்ள அந்த அம்புகள் யாவும் இலைகளில் போய்க் குத்திக் கொண்டன. அப்போது அவை வண்ணத்திப் பூச்சி களைப் போலக் காட்சியளித்தன. அப்புறம் கற்களை எறிந்தான். எறிந்த கற்கள் யாவுமே எதையும் தொடாமல் கீழேவந்து விழுந்தன. ஜூலியன் தன்னைத்தானே சபித்துக்கொண்டான். எதையாவது எதிர்த்துப் போராடவேண்டும் என்று பெரிதும்

ஆசைப்பட்டான். உரத்த குரலில் வாய்க்குவந்தபடி யெல்லாம் திட்டிச் சபித்தான். கோபாவேசத்தில் அவனுடைய குரலும் அடைத்து விட்டது.

அவன் எந்தப் பிராணிகளை எல்லாம் துரத்திக்கொண்டு சென்ருனே அவை எல்லாம் திரும்பவந்து காட்சி யளித்தன. அவனைச்சுற்றி மிகவும் நெருக்கமாக வந்து நின்றன. சில தங்கள் பிட்டியைத் தரையில் ஊன்றி உட்கார்ந்து கொண்டன. சில நீட்டி நிமிர்ந்து நின்றன. கொஞ்சம்கூட ஆடி அசைய மார்க்கமின்றி அவற்றின் மத்தியில் பயத்தினல் ஒடுங்கிநின்ருன். மனதைத் திடப்படுத்தி மிகுந்த பிரயாசையின் பேரில் அவன் ஒரு எட்டு எடுத்துவைத்தான். உடனே, மரக்கிளைகளில் உட்கார்ந்திருந்த பறவைகள் தங்கள் சிறகுகளை அகல விரித்தன. தரையில் நின்று கொண்டிருந்த பிராணிகள் தங்கள் அவயவங்களை அசைத்தன. அப்புறம், அங்குள்ள எல்லாமே அவனைப் பின் தொடர்ந்து சென்றன.

காட்டு நாய்கள் முன்னல் நடந்தன. ஓநாயும் காட்டுப் பன்றியும் பின்னல் வந்தன. வலது பக்கம் காட்டுமாடு தலையை ஆட்டிக்கொண்டே நடந்தது. இடது பக்கம், புல்லில் நெளிந்து கொண்டு வந்தது பாம்பு. சிறுத்தையோ தன் முதுகை வளைத்துக்கொண்டும், பட்டுப்போன்ற தன் உள்ளங்கால்களை ஊன்றிக் கொண்டும் பக்கத்தில் நடந்து வந்தது. எந்த ஒரு பிராணிக்கும் இடைஞ்சல் ஏற்பட்டு கோபம் உண்டாகாதபடி, அவன் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மெதுவாக நடந்தான். புதர்களின் மறைவிலிருந்து முள்ளம்பன்றிகளும், நரிகளும், விஷப் பாம்புகளும், கரடிகளும் வருவதைப் பார்த்தான். அவ்வளவு தான், ஜூலியன் ஓட ஆரம்பித்தான். அந்தப் விலங்குகளும் ஓடின. பாம்பு இரைந்தது; கோரமிருகங்கள் எச்சிலை வடித்தன. பன்றி தன் கொம்புகளால் குதிகால்களைத் தடவியது. குரங்குகள் அவனைக் கிள்ளிவிட்டு, 'வலிச்சம்'காட்டின. மாமிசபக்ஷணைப் பிராணி ஒன்று அவன் பாதங்களின்மேலே உருண்டது. ஒரு கரடிவந்து அவனுடைய தொப்பியைத் தன் கால் நகத்தால் தட்டி எறிந்தது. சிறுத்தை தன்வாயில் வைத்துக் கெளவிக் கொண்டுவந்த ஒரு அம்பை மிகவும் வெறுப்போடு கீழே போட்டது.

அந்தப் பிராணிகளின் கபடம் நிறைந்த முகத்தோற்றத்தின் மறைவிலே, அபாயகரமான ஒருபரிகாசம் குடிகொண்டிருந்தது. கடைக்கண்ணல் அவனைப்பார்த்து, ஏதோ பழி

வாங்கும் திட்டம் ஒன்றைப் பற்றி அவை ஆலோசித்துக்கொண்டிருந்தது போல் தோன்றின. பூச்சிகளின் ரீங்கார இரைச்சல் அவனைச் செவிடாக்கியது. பறவைகளின் வால் அவனைத் தட்டிக்கொண்டே இருந்தது. கெட்ட சுவாசங்களால் அவன் மூச்சுத் திணறினான். இந்த நிலையில் கைகளைப் பக்கவாட்டில் விரித்துக்கொண்டு, குருடனைப் போலக் கண்களை மூடிய வண்ணம் கெஞ்சியழுவதற்குக் கூடச் சக்தியில்லாமல் நடந்து கொண்டிருந்தான்.

அப்போது ஒரு காகம் கரைந்தது. மற்ற காகங்கள் அதற்குப் பதில் சொல்லுவது போலக் கரைந்தன. பகல் நேரம் வந்துவிட்டது. ஆரஞ்சு மரங்களுக்கு அப்பால் தன் அரண்மனையின் உச்சி தெரிவதைப் பார்த்துக்கொண்டான் ஜூலியன்.

அப்புறம், ஒரு வயல் பரப்பில் மூன்று கைப் பாகங்களுக்கு அப்பால் சில சிவப்புக் கோழிகள் தானிய மணிகளின் நடுவில் சிறகடித்துக்கொண்டிருந்ததைப் பார்த்தான். தன் அங்கியைக் கழற்றி வலையைப் போல அவற்றின் மீது வீசினான். பழைய படியும் அங்கியை எடுத்துப் பார்க்கும்போது ஒரே ஒரு கோழி தான் அங்கிருந்தது. அதுவும் வெகு நேரமாகச் செத்துக் கிடந்து அழுகிப் போய் அழன்று கிடந்தது.

இந்த ஏமாற்றம் அவனுக்கு என்றுமில்லாதவாறு அதிக எரிச்சலைத் தந்தது. பிராணிகளைக் கொன்று குவிக்கவேண்டும் என்ற தாகம் அவனைப் பழையபடியும் பிடித்தது. அங்கே பிராணிகள் எவையும் தட்டுப்படவில்லை. அதற்குப் பதிலாக மனிதர்களைக் கொன்று குவிக்கக்கூட அவன் அப்போது சித்தமாக இருந்தான்.

அரண்மனையின் முற்றத்தைத் தாண்டி வந்து, முஷ்டியால் குத்தித் கதவைத் திறந்தான். ஆனால், படிகளில் கால் வைத்ததும், அவனுடைய காதல் மனையாளின் ஞாபகம் வந்து, அவன் மன நிலையை மிருதுப் படுத்தியது. அநேகமாக அவள் தூங்கிக் கொண்டிருப்பாள் என்றும், அவள் எதிர்பாராதவிதமாகவே தான் போய் அவள் முன்னால் நிற்கப் போவதாகவும் நினைத்துக் கொண்டான்.

செருப்புகளைக் கழற்றி வைத்தான். மெதுவாகப் பூட்டைத் திறந்து உள்ளே போனான்.

உதயத்தின் மங்கிய வெளிச்சத்தைப் பின்னும் மங்கலாக்கின ஜன்னலின் ஈயக் கதவுகள். நடந்து செல்லும்போது

ஓரிடத்தில் அவனுடைய கால்கள் கீழே கிடந்த துணிகளில் சிக்கிக் கொண்டன. கொஞ்ச தூரம் சென்றதும், நிறையக் கிண்ணங்கள் வைக்கப்பட்டிருந்த ஒரு மேஜையில் தட்டிக் கொண்டான். "சாப்பிடுவதற்கு ஏதோ வைத்திருக்கிறாள் என்று நினைக்கிறேன்" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். பிறகு, படுக்கையை நோக்கி நடந்தான். அறையின் கோடியில், இருட்டின் மறைவிலே, கண்ணுக்குத் தெரியாமல் கிடந்தது படுக்கை. அதன் பக்கத்தில் போய் நின்று, தன் மனையாட்டியை முத்தமிடுவதற்காகத் தலையணைக்கு மேலாகக் குனிந்தான். தலையணையின் மேல், பக்கம் பக்கமாக இரண்டு தலைகள் சாய்ந்திருந்தன. ஜூலியனுடைய உதடுகள் ஒரு தாடியை ஸ்பரிசித்தன.

உடனே பின் வாங்கினான். தான் பைத்தியமாகப் போய்க் கொண்டிருப்பதாகக் கருதினான். பழையபடியும் படுக்கையின் பக்கம் வந்தான். அவனுடைய விரல்கள் தடவிக் கொண்டே நீண்ட மயிரைப் போய்த் தீண்டியது. தான் தப்பாக நினைத்துவிடக்கூடாதே என்று, பழையபடியும் தலையணையைத் தடவித் தொட்டுப்பார்த்தான். சந்தேகமில்லை. அது தாடி மயிர்தான்! தன் மனைவியுடன் படுத்துக்கொண்டிருக்கும் ஒரு மனிதன்தான்!

மட்டுக்கு அடங்காத கோபவெறியுடன் அவர்கள் மீது தன் வாளை வீசினான். துஷ்ட மிருகத்தைப் போல கர்ஜித்துக் கொண்டு காலை உதைந்தான்; வாயில் நுரை கக்கினான். பிறகு, அப்படியே அசையாமல் நின்றான். இருதயத்தில் குத்து வாங்கிய அந்த இரண்டு பாவப்பட்ட ஜீவன்கள் கொஞ்சம்கூட ஆடவில்லை; அசையவில்லை. அவர்கள் இறுதி மூச்சை சுவாசிக்கும் இரைச்சலை அவன் கவனித்துக் கேட்டான். இரண்டும் ஒரே மாதிரியாக சுவாசித்தன. இருக்க இருக்க இரைச்சல் குறைந்துகொண்டே வந்தது. அப்போது தூரத்திலே ஒரு குரல் கேட்டது. முதலில் பலஹீனமாகவும் அப்புறம் உரத்தும் ஒரு சோகக் கூக்குரல் கேட்டது. நீடித்துக் கேட்ட அந்த ஓலம் நெருங்க நெருங்கத் தடித்து விம்மி மகா கோரமாக மாறியது. முன்னால், மிகப் பரிய ஆகிருதியுடன் கதறிய அந்தக் கருப்பு மானின் கூக்குரல்தான் அது என்று கண்டறிந்தான்

படுக்கையை விட்டுத் திரும்பி வரும்போது, கையில் ஒரு விளக்கை ஏந்திக்கொண்டு வாசல் நிலையில் தன் மனைவி நிற்பதுபோல அவன் கண்களில் பட்டது.

கொலையின் சந்தடி அவளை அந்த ஸ்தலத்துக்கு இழுத்துக் கொண்டு வந்தது. ஒரு தடவை நன்கு உற்றுப் பார்த்தாள். விஷயம் பரிபூரணமாக அவளுக்கு விளங்கிவிட்டது. கையில் கொணர்ந்த விளக்கை கீழே போட்டுவிட்டு, பயந்தடித்துக் கொண்டு ஓடிவிட்டாள்.

விளக்கைக் கையில் எடுத்துக்கொண்டான் ஜூலியன்.

மார்பகங்களில் குத்தப்பட்டு, துளை விழுந்து, தந்தையும் தாயும் தன் கண்ணெதிரே மல்லாந்து படுத்துக்கொண்டிருப் பதை ஜூலியன் பார்த்தான். இருவர் முகங்களும் பெருமித மான பார்வையுடன் ஏதோ ஒரு நித்ய ரகசியத்தைப் பேணி வைத்திருப்பவை போலக் காட்சி யளித்தன அவர்களுடைய வெண்ணிற மேனியிலும், துணிகளிலும், தரையிலும், மாடக் குழியில் தந்தத்தால் செய்து தொங்கவிடப்பட்டிருந்த கிறிஸ்து பொம்மையிலும், எல்லா இடங்களிலுமே ரத்தம் வாரித் தெளித் திருந்தது. ரத்தக் கறை பட்டிருந்த கண்ணாடி ஜன்னல் வழி யாக ஊடுருவிய சூரிய வெளிச்சம் தெளித்துக்கிடந்த செந்நிற மான குருதிக் குளங்கள் மீது பட்டு, செந்நிறத்தைப் பல மடங்கு அதிகமாக்கிக் காட்டி, அறையையே சிவப்புமயமாக் கியது.

செத்துக் கிடந்த சடலங்களின் பக்கம் போனான். தான் தப்பான காரியம் செய்துவிட்டதாகக் கருத முடியாது என் றும், இது போலவே சில சமயங்களில் ஆள் மாறாட்டத்தின் காரணமாக சில காரியங்கள் நடந்திருக்கின்றன என்றும் தனக்குத்தானே சொல்லிக்கொண்டும், தன் மனதில் அவ்வாறு நினைக்க முயற்சி செய்துகொண்டும் சென்றான். கடைசியில் பக்கத்தில் போய் தலையைக் குனிந்து கிழவரை உற்றுப் பார்த் தான். கிழவரின் பாதி மூடிய கண்களில் ஒன்று அவனைத் தீயைப் போலச் சுட்டது. அப்புறம் படுக்கையின் மறுபக்கத் துக்குச் சென்றான். அங்கே மற்றொரு சடலம் படுத்துக் கிடந்தது. அதன் கூந்தலில் தன் விரல்களை விட்டுத் துழாவி, தலையைச் சற்று மேலே தூக்கிப் பிடித்துக்கொண்டு கூர்ந்து பார்த்தான். இடது கையில் உள்ள விளக்கு அங்கு வெளிச்சம் தர, வலது கையால் அந்தத் தலையை ஆடாமல் அசையாமல் பிடித்துக்கொண்டு நின்றான். மெத்தையிலிருந்து ரத்தம் கசிந்து ஒவ்வொரு துளியாகத் தரையில் சொட்டிக்கொண்டிருந்தது.

அன்று மாலையில் தானாகவே தன் மனைவியின் முன்னால் போய் நின்றான். தனக்குப் பதில் பேசவோ, தன் பக்கத்தில்

வரவோ, திரும்பவும் தன்னைக் கண்ணால் பார்க்கவோ கூட, கூடாது என்றும், தன் கட்டளைகளை எல்லாம் அவள் அப்படி அப்படியே நிறைவேற்றி வைக்கவேண்டும் என்றும், இல்லை என்றால் என்றென்றும் நீடிக்கும்படியான தண்டனைக்கு ஆளாகவேண்டும் என்றும் இயல்பான குரலுக்கு மாறுபட்ட தொனியில், அவளுக்கு உத்தரவிட்டான்.

தான் எழுதிவைத்துள்ள விபரங்களில் கண்டபடியே பிரேத அடக்கம் செய்யவேண்டும் என்று ஒரு லிகிதத்தில் எழுதி அதைப் பிரேதங்கள் கிடக்கும் அறையில் உள்ள பிரார்த்தனைப் பீடத்தில் வைத்துவிட்டுப் போய்விட்டான். மேலும் தன் அரண்மனையை, தான் குத்தகைக்கு விட்டிருக்கும் சொத்துக்களை, தன் உடைமைகள் எல்லாவற்றையுமே அவளுக்குக் கொடுத்துவிட்டதாக அதில் எழுதியிருந்தான். தான் அப்போது அணிந்திருந்த அலங்கார உடையைக்கூட தனக்கென்று அவன் எடுத்துக்கொள்ளவில்லை. செருப்புகளையும், மாடிப்படியின் உச்சியில் வைத்துவிட்டானே ஒழிய, எடுத்துக் கொள்ளவில்லை.

மிகப் பெரிய குற்றத்தையும் செய்யும்படியாக அவனை ஆட்டி வைத்த தெய்வ சித்தத்துக்கு அவள் கீழ்ப்படிந்தாள். அவன் இப்போது உயிருடன் இல்லை என்றும், ஆகவே அவனுடைய ஆத்மாவுக்காகத் தான் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்றும் கருதினாள், அவன் மனைவி.

அரண்மனையிலிருந்து மூன்று நாள் வழி தூரத்துக்கு அப்பால் உள்ள ஒரு மடத்தின் தேவாலயத்தில், சகல மரியாதைகளுடனும் இறந்தவர்கள் அடக்கம் செய்யப்பட்டார்கள். உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை அங்கியால் மூடி முக்காடு போட்டுக் கொண்டிருந்த ஒரு பிக்ஷு பிரேத ஊர்வலத்தின் பின்னகை, ஆனால் மற்றவர்களை எல்லாம் விட்டு வெகு தூரம் தள்ளி, நடந்து வந்துகொண்டிருந்தான். யாருக்கும் அவனிடம் பேசத் துணிவு வரவில்லை.

கோவிலில் பிரார்த்தனை நடந்தது. அப்போது கோவில் வாசலின் நடு மத்தியிலே, கைகளை சிலுவையைப் போல விரித்துக்கொண்டு, குப்புறப் படுத்துக் கிடந்தான் பிக்ஷு. அவனுடைய நெற்றி மண்ணை ஒட்டிக்கொண்டு கிடந்தது.

பிரேதங்களைப் புதைத்து முடிந்ததும், அவன் மலைகளை நோக்கிச் செல்லும் சாலை வழியாகத் தன் பிரயாணத்தைத்

தொடங்கியதை எல்லோரும் பார்த்தார்கள். அநேகதடவைகள் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றான். கடைசியில், வெகுநேரத்துக்குப் பிறகு, மறைந்துவிட்டான்.

## 3

ஜூலியன் உலக அரங்கில் பிரவேசித்தான். பிச்சை எடுத்துச் சாப்பிட்டான்.

சாலைகளிலே குதிரைக்காரர்களிடம் கையேந்தி யாசகம் கேட்டான். அறுவடை செய்கிறவர்களின் பக்கம் போய் மண்டியிட்டுக் கெஞ்சினான்.

வீடுகளின் தலைவாயில்களில் போய் கம்பத்தைப்போல அசைவற்று நின்றான். அவன் முகத்தில் சோகம் ததும்பிக் கொண்டிருந்தது. அதனால் ஒருதடவை கூட அவனுக்கு யாரும் பிச்சை போட மறுக்கவில்லை.

மிகமிகப் பணிவுடன், தன்னுடைய கதையை அவன் சொல்லுவது வழக்கம். கதையைக் கேட்டபின் யாரும் அவன் எதிரில் நிற்கமாட்டார்கள். கைகளைச் சிலுவை மாதிரி வைத்துக்கொண்டு ஓடிவிடுவார்கள். அவன் ஏற்கெனவே போயிருக்கும் ஊர்களுக்குத் திரும்பவும் போய், தெரு வழியாக நடந்து சென்றால், அவனைப் பார்த்தவர்கள் பார்த்தமாத்திரத்தில் தங்கள் வீட்டுக் கதவுகளையெல்லாம் இழுத்துச் சாத்திவிடுவார்கள். அவனைப் பயமுறுத்துகிற குரல்கள் கேட்கும்; கற்கள் வந்து விழும். மிகவும் தர்மகுணம் படைத்தவர்கள் தங்கள் வீட்டு ஜன்னல்களில் ஒரு கோப்பையை வைத்துவிட்டு, அவனை பார்க்கக் கூடாது என்பதற்காக உட்புறமாக ஜன்னல்களை மூடிவிடுவார்கள்.

எந்தப்பக்கம் திரும்பினாலும் ஒரே மோதல்தான். ஆகவே, மனித உதவியை அவன் கைவிட்டான். கிழங்குகளையும், செடிகளையும், சந்தர்ப்ப வசமாகப் பழுத்துக் கிடக்கும் கனிகளையும், கடற்கரையில் தேடிப் பொறுக்கி எடுத்த சிப்பிப் புழுக்களையும் தின்று உயிர் வாழ்ந்தான்.

சில சமயங்களில் ஒரு குன்றின் உச்சியில் ஏறி ஒரு ஓரமாக உட்கார்ந்துகொள்ளுவான். கீழே கும்பலாகத் தெரியும் வீட்டுக் கூரைகளையும், ஊசியான கல் கோபுரங்களையும் பாலங்களையும், கோரிகளையும், இவற்றை வகிர்ந்து செல்லும் தெரு

வீதிகளையும் பார்த்துக்கொண்டிருப்பான். அங்கிருந்து இடைவிடாமல் ரீங்காரம்போல இரைச்சல் கேட்டுக்கொண்டே இருக்கும்.

மற்ற மனிதர்களுடன் கலந்து வாழவேண்டுமென்ற பேராவல், அவனைக் கீழே இறங்கி ஊருக்குள் வரச் செய்யும். ஆனால், மனித முகங்களின் மிருகப் பார்வையும், பற்பல தொழில்கள் நடைபெறுவதால் உண்டாகும் சந்தடியும், குதூகலமோ சந்துஷ்டியோ இல்லாமல் நிகழ்த்தும் சம்பாஷணையும் அவன் மனதை உணர்விழக்கச் செய்யும். திருவிழாக் காலங்களில் தேவாலயத்தின் பெரிய மணி அடிக்கும் சப்தத்தைக் கேட்டு சகல ஜனங்களும் விடிந்துவிட்டது என்று பேரானந்தம் அடைவார்கள். ஜனங்கள் தங்கள் தங்கள் வீடுகளிலிருந்து வெளியே வந்துகொண்டிருப்பதையும், சந்தைப்பேட்டைகளில் நடக்கும் நாட்டியத்தையும், சாலைச் சந்திப்பில் உள்ள மதுக் கடைகளையும், பிரபுக்களின் வீடுகளுக்கு முன்னால் இருக்கும் சித்திரத் தையல் போட்ட கூடார வீடுகளையும், சாயங்கால நேரம் ஆனதும் ஜன்னல் ஓரங்களில் நீண்ட மேஜைகளின் பக்கம் மடியில் குழந்தைகளை வைத்துக்கொண்டு அவர்களுடைய பாட்டன்மார் உட்கார்ந்திருப்பதையும் ஒவ்வொன்றாகப் பார்த்துக்கொண்டு வருவான் ஜூலியன். கடைசியில் துக்கம் தாங்க முடியாமல் விம்மிப் பொருமுவான். அவனுடைய தொண்டை அடைத்துக்கொள்ளும்.

புல்வெளிகளில் குதிரைக் குட்டிகளும், கூண்டுகளில் பறவைகளும், புஷ்பங்களில் வண்டுகளும் காதல் உறவாடிக் களிப்பதைப் பார்ப்பான். அவற்றின் பக்கம் நெருங்கிச் சென்றால், அவை அப்பால் ஓடிவிடும்; அல்லது பயந்துபோய் எங்காவது போய் ஒளிந்துகொள்ளும்; இல்லையெனில் அதிவேகமாகப் பறந்துவிடும்.

ஜூலியன் ஏகாந்த ஸ்தலங்களைத் தேடி அடைந்தான். ஆனால், காற்று அவன் காதுகளுக்கு மரண வேதனைகளை எடுத்துரைப்பதுபோல ஒலித்துக்கொண்டு வீசியது. மண்மேல் சிதறும், கண்ணீர் போன்ற பனித்துளிகள், அவற்றைவிட கனமான வேறு துளிகளை ஞாபகப்படுத்தின. தினந்தோறும் மாலை நேரத்தில் முகில் கூட்டத்திலே ரத்தத்தை மெழுகினான் சூரியன். அவன் தன் பெற்றோர்களைக் கொலை செய்த விஷயம் அனுதினமும் இரவு நேரத்தில் மாறி மாறிக் கனவில் வந்து காட்சியளித்துக் கொண்டிருந்தது.

இரும்பு முட்களையும், மயிரையும் கொண்டு தனக்கு ஒரு சட்டை தயார்செய்துகொண்டான். உச்சியிலே கோவில் உள்ள குன்றுகளில், மண்டியிட்டு முழங்காலை ஊன்றிக் கொண்டு ஏறினன். வளைவுகுழைவற்ற அவனுடைய சிந்தனை, கோவில்களின் ஜோதிமயத்தை மங்கலாக்கியது; மேலும் அது, அவனுடைய வேதனைமிக்க பிராயச்சித்தத்தினூடே சித்திர வதை செய்துகொண்டும் இருந்தது.

தம் இஷ்டம் போல அவனை ஆட்டிவைக்கும் கடவுளை எதிர்த்து அவன் போராடவில்லை. ஆனாலும் இம்மாதிரிக் காரியம் செய்வதைத் தவிர வேறு வழி புலப்படாமல் தவித்தான்.

அவனுக்கு அவனுடைய மூர்த்தமே பயங்கரமாகத் தோற்றியது. அந்த மூர்த்தத்தை விட்டொழித்து விடுதலை பெறுவதாக அவன் நம்பும் சமயத்திலேயே, அபாயகரமான முயற்சிகளில் இறங்கும்படி அதைப் பணயம் வைத்து ஆடிக் கொண்டும் இருந்தான். நெருப்பில் அகப்பட்டுக்கொண்ட வலிப்புக்காரர்களை அவன் காப்பாற்றினன். குழியில் விழுந்து அமிழ்ந்துகொண்டிருந்த குழந்தைகளின் உயிரை மீட்டினன். குழி அவனை மேல் பரப்புக்குப் பழையபடியும் தூக்கிவிட்டது; நெருப்பு அவனைக் காப்பாற்றிவிட்டது.

காலம் அவனுடைய வேதனையைத் தணிக்கவில்லை. நாளுக்கு நாள் தாங்க முடியாதபடி வேதனை அதிகமாகிக்கொண்டுவந்தது. கடைசியில் சாவதற்குத் துணிந்துவிட்டான், ஜூலியன்.

ஒருநாள், ஒரு சுனைக் கரையில் சாய்ந்துகொண்டு, தண்ணீரின் ஆழத்தை நிதானித்துக் கொண்டிருந்தபோது, மிகவும் பரிதாபகரமான தோற்றத்துடன் தனக்கு எதிரில் மெலிந்து தள்ளாடிக் கொண்டிருக்கும் ஒரு கிழவனைப் பார்த்தான். கிழவனுடைய நிலையைக் கண்டதும் அவனால் அடக்க முடியாதவாறு கண்ணீர் பொங்கியது. கிழவனும் அழுதான். கிழவனுடைய முகச் சாயலிலே உள்ள வேறொரு முகம், தெளிவில்லாத நிலையில் அரைகுறையாக ஜூலியனுக்கு ஞாபகம் வந்தது. உடனே ஒரு கணம் வாய்விட்டு அலறினன். ஞாபகம் வந்தது அவனுடைய தந்தையின் முகம்தான். பிறகு தற்கொலை செய்துகொள்ளும் எண்ணம் அவனைவிட்டுப் போய்விட்டது.

நினைவுப் பாரத்தைச் சுமந்துகொண்டு அவன் தேச தேசாந்தரங்களெல்லாம் சுற்றினன். பிறகு ஒரு ஆற்றின் பக்கம் வந்து சேர்ந்தான். கடக்க முடியாதவாறு அபாயம் நிறைந்த ஆறு அது.

ஏனென்றால் அது மிகவும் வேகமான நீரோட்டம் உடையது. மேலும், அதன் கரைகளில் சதுப்பும் சேறும் விரிந்து பரந்து கிடந்தது. அதைக் கடக்க வெகு காலமாக யாரும் துணிந்தது கிடையாது.

பழைய படகொன்று பின் பக்கமெல்லாம் புதைந்து போய், அங்கே கிடந்தது. அதனுடைய முன் பாகம் நாணல் புதரில் சிக்கிக்கொண்டிருந்தது. ஜூலியன் அதை நன்ருகத் துழாவிப் பார்த்தான். அங்கே இரண்டு துடுப்புகளும் கிடந்தன. உடனே, மற்றவர்களின் சேவைக்காகத் தன் வாழ்க்கையைப் பயன் படுத்த வேண்டும் என்ற எண்ணம் அவனுள் உருவானது.

ஜனங்கள் ஆற்று நீரின் விளிம்புவரை நடந்து செல்லுவதற்கேற்ப, கரையில் ஒரு பாதையை உண்டாக்கினன். பெரிய பெரிய கற்களை எல்லாம் அசைத்து எடுத்து முதுகில் வைத்துச் சுமந்து கொண்டுவந்து சதுப்பு நிலத்தில் போட்டான். இந்த வேலையைச் செய்து செய்து தன் நகங்களை எல்லாம் நொறுக்கிக் கொண்டான்; பல தடவைகள் மரணத்தின் வாசலில் நுழைந்து நுழைந்து மீண்டான்.

பிறகு அங்கே சிதைந்து கிடக்கும் சாமான்களைக்கொண்டு படகைப் பழுது பார்த்தான். களிமண்ணையும், அடிமரங்களையும் வைத்து தனக்கு ஒரு குடிசையும் கட்டிக்கொண்டான்.

ஆற்றைக்கடந்து பிரயாணம் நடைபெற்று வருகிறது என்பதை அறிந்த மாத்திரத்தில், பிரயாணிகள் வர ஆரம்பித்தார்கள். அவர்கள் எதிர்க் கரையில் நின்று கொடிவீசி அழைப்பார்கள். ஜூலியன் உடனே தோணியை எடுத்துக்கொண்டு போவான். மிகவும் பாரமான தோணி அது. ஆனலும், தோணி பிடிக்காமல் மூட்டை முடிச்சுகளை ஏற்றுவார்கள். அதில் ஏறும் கனமான மிருகங்களைப்பற்றியோ சொல்ல வேண்டியதே இல்லை. அவை பயந்துபோய் கால் கைகளை உதறும்; குழப்பத்தை அதிகப்படுத்தும். தன் கஷ்டங்களுக்குக் கூலியாக அவன் எதுவும் கேட்பது கிடையாது. சிலர் தங்கள் கட்டுச்சோற்றுப் பொட்டணத்திலிருந்து ஏதோ கொஞ்சம் சாப்பாட்டை எடுத்துக் கொடுப்பார்கள். அல்லது தங்களுக்கு இனி தேவையில்லை என்று கருதும் கிழிந்துபோன பழைய உடைகளைக் கொடுப்பார்கள். மிருகங்களோ அவனைச் சபித்துக்கொண்டு உருமும்; ஜூலியன் அந்த மிருகங்களைக் கௌரவமாகக் கடிந்து கொள்ளுவான். உடனே

அவை அவனை அவமானத்துக்காளாக்கிப் பழி வாங்கும். ஆனால் அந்த மிருகங்களை ஆசீர்வாதம் செய்வதோடு திருப்தியடைந்து விடுவான் ஜூலியன்.

அவனுடைய குடிசையில் இருந்தவை எல்லாம் ஒரு சிறு மேஜை, ஒரு ஸ்டூல், உதிர்ந்த இலைகளால் ஆன ஒரு படுக்கை, தண்ணீர் குடிக்கும் மூன்று மண் பாத்திரங்கள் ஆகியவைதான். சுவரில் உள்ள இரண்டு பெரிய பொந்துகள்தான் ஜன்னல்கள். குடிசையின் ஒருபாரிசத்தில் கண்ணுக் கெட்டிய தூரம் தரிசுநிலங்களும், இங்கொன்றும் அங்கொன்றுமாகத் தண்ணீர்க் குட்டைகளும் இருந்தன. முன்புறமாக, அந்தப் பெரிய நதியில் பச்சை நிறமான ஜலம் உருண்டு ஓடிக் கொண்டிருந்தது.

வசந்த காலம் வந்ததும், சதுப்பு நிலத்தில் அழுகல் நாற்றம் அடித்தது. அதற்குப் பிறகு பேய்க் காற்று அடிக்கத் தொடங்கியது; புழுதிப் படலங்கள் சூறுவளியாகச் சுழற்றி அடித்தன; புழுதி படியாத இடமே கிடையாது. அது தண்ணீரை மண்டியாக்கி விட்டது. வாயில் வந்து சிதறியதால் பற்களை மெல்லும்போது 'நறநற' வென்று அறைபட்டது. அதன் பின் மேகக்கூட்டங்களைப் போல வந்து சேர்ந்தன கொசுக்கள். பகலிலும் சரி, இரவிலும் சரி, அவை பாடிக் கொண்டிருப்பதையோ, அல்லது கடித்துக்கொண்டிருப்பதையோ நிறுத்தவில்லை. இதன் பிறகு குரூரமான பனியடிக்கத் தொடங்கியது. பனியினால் எல்லாமே கல்லாக இறுகிப் போயின. மாமிசச் சாப்பாட்டை எண்ணி அசுரப்பசி கொள்ளும்படி செய்து விட்டது அந்தப் பனி.

சில மாதங்கள் யாருமே அங்கு வரவில்லை; ஜூலியன் எந்த மனிதனையும் சந்திக்காமலே இருந்து வந்தான். அப்போது அடிக்கடி கண்களை மூடி தன் பிள்ளைப் பிராயத்து நினைவுகளை எல்லாம் ஞாபகப் படுத்திப் பார்ப்பான்—கோட்டை அரண்மனையின் முற்றம் காட்சி யளிக்கும்; அங்கே படிக்கட்டின் மேல் வேட்டை நாய்கள் கட்டிக் கிடக்கும்; ஆயுத சாலையின் பணியாட்கள் காட்சி யளிப்பார்கள். திராக்ஷைக் கொடி பின்னிய லதாகுஞ்சத்தில், கம்பளி உடை தரித்த ஒரு வயது சென்ற மனிதனுக்கும், கொம்புகளைப் போல அலங்காரம் செய்யப்பட்ட உடையைத் தலையில் அணிந்திருக்கும் ஒரு ஸ்திரீக்கும் நடுவே அழகிய கேசத்துடன் ஒரு இளைஞன் காட்சி யளிப்பான். திடீரென்று இந்தக் காட்சிகள் எல்லாம் மறைந்துவிடும்; பிறகு செத்துப்போன இரண்டு

உடல்கள் தோற்றம் அளிக்கும். ஜூலியன் உடனே தன் படுக்கையில் குப்புற விழுந்து அழுவான். அழுதுகொண்டே, "ஐயோ! என் அப்பா! என் அம்மா! அம்மா!" என்று மாறி மாறிப் புலம்புவான். அப்புறம் அவன் அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருப்பான். அப்போதும் சோகக் காட்சிகள் அவன் மனக்கண் முன் நடமாடிக் கொண்டிருக்கும்.

ஒரு நாள் இரவு அவன் தூங்க ஆரம்பித்த சமயத்தில் யாரோ அழைப்பதுபோல அவனுக்குக் கேட்டது. விஷயம் என்ன என்று நன்றாகக் கவனித்துக் கேட்டான். அப்பொழுது இரைச்சலிட்டுக்கொண்டு மோதும் அலை ஓசையைத் தவிர வேறொன்றும் கேட்பதாகத் தோன்றவில்லை.

ஆனால்.........

குரல் மறுபடியும் கேட்கத் தொடங்கியது:

"ஜூலியன்!"

ஆற்றின் மறு கரையிலிருந்து வந்தது குரல். அவ்வளவு அகலமான ஆற்றைக் கடந்து எப்படி அந்தக் குரல் கேட்க முடியும் என்று திகைத்தான்.

மூன்றாவது தடவையும் குரல் கேட்டது:

"ஜூலியன்!"

அந்தக் குரல், உரத்துக் கேட்கும்போது, தேவாலய மணியோசையைப் போல் கேட்டது.

லாந்தர் விளக்கை ஏற்றினான். எடுத்துக்கொண்டு குடிசைக்கு வெளியே வந்தான். அன்றிரவு, ஒரே சண்டமாருதப் புயல் உக்ரமாக அடித்துக் கொண்டிருந்தது. இருட்டோ, மையிருட்டு. துள்ளிக் குதிக்கும் அலைகளின் வெண்ணிறம் தான் ஏதோ இங்கும் அங்கும் இருட்டைக் கிழித்துக் கொண்டிருந்தது.

ஒரு நிமிஷம் தயங்கினான். உடனே, கரையோடு சேர்த்துக் கட்டியிருந்த தோணிக் கயிறுகளை அவிழ்த்தான். தண்ணீரும் திடீரென்று அமைதி பெற்று அடங்கியிருந்தது. ஓடம் அதன்மேல் நழுவிக்கொண்டு சென்று, மறு கரையைப் போய்த் தொட்டது. அங்கே ஒரு மனிதன் காத்துக்கொண்டிருந்தான்.

சொர சொரப்பான முரட்டுடையைத் தரித்துக்கொண்டிருந்தான் அந்த மனிதன். அவன் முகம் வார்த்தெடுத்த சுண்

ரும்புச் சாந்தின் உருவம்போல் இருந்தது. எரிகின்ற கரித் துண்டுகளைவிட சிவந்திருந்தன கண்கள். அவன் பக்கத்திலே விளக்கைக்கொண்டு வந்து வைத்துப் பார்த்தான் ஜூலியன். அவனுடைய உடம்பெல்லாம் மகா கோரமான குஷ்டரோகம். என்றாலும் அவனிடம் ராஜ கம்பீரமான ஒரு அம்சம் குடி கொண்டிருந்தது.

குஷ்டரோகி தோணியில் ஏறினான். அவனுடைய பாரத்தையும்கூடத் தாங்க முடியாமல் தோணி மூழ்கத் தொடங்கியது அதிசயமாகத்தான் இருந்தது. ஒரு தடவை சுண்டி இழுத்தான் ஜூலியன். பழையபடியும் தோணி மேலே வந்தது. உடனே அவன் துடுப்புகளை அசைக்கத் தொடங்கினான்.

ஒவ்வொரு தடவையும் தோணி பாய்ந்து செல்லும்போது, அலைகள் தோணியின் முன்புறத்தை மோதித் தாக்கும். மையை விடக் கருப்பாக இருக்கும் தண்ணீர் பக்கவாட்டில் மூர்த்தன்யமாக வந்து நெருக்கும். நீர்ப்பரப்பின் மேட்டிலும் மடுவிலும் மிதப்பதும் மூழ்குவதுமாக இருந்தது தோணி; மேலும், காற்றினால் இங்கும் அங்கும் அலைபட்டது.

ஜூலியன் கால்களைப் பலமாக ஊன்றினான்; முன் நோக்கிச் சாய்ந்து, கைகளை நீட்டி உடம்பை நெளித்து உதறினான்; அப்போதைய நிலையைச் சமாளிப்பதற்கு அவ்விதமாக அதிக பலத்தைத் திரட்டினான். வால்வாலாக உதிர்ந்து விழும் உறைந்த பனிக்கட்டி அவன் கைகளை சாட்டைபோல் அடித்தது. அவன் முதுகில் வெள்ளமாகப் பொழிந்தது மழை. முரட்டுக் காற்று மூச்சைத் திணற அடித்தது. அப்படியே அசந்து போய் நின்றான். தோணி ஒருபுறமாக ஒதுங்கிச் சென்றது. இது ஒரு முக்கியமான காரியம் என்றும், தான் கீழ்ப்படிய வேண்டிய ஒரு கட்டளை என்றும் உணர்ந்து, பழையபடியும் துடுப்புகளைப் போட்டான். புயல் காற்றின் பேரிரைச்சலின் நடுவே, துடுப்புக்களுக்கு ஆதாரமாக நின்ற முளைகள் நெரிந்து கொண்டிருப்பது கேட்டது.

அவன் கண் முன் சிறு லாந்தர் எரிந்து கொண்டிருந்தது. பறவைகள் சிறகடித்துக் கொண்டே, விளக்கை மறைத்து மறைத்துப் பறந்து கொண்டிருந்தன. ஆனால், அவன் பார்வையோ தோணியின் பின் பக்கத்தில் கம்பத்தைப்போல அசைவற்று நிற்கும் குஷ்டரோகியின் மீதுதான் கவிந்திருந்தது.

இந்த நிலையிலேயே மிகமிக நீண்ட நேரம் கழிந்தது!

குடிசைக்குள் வந்து சேர்ந்ததும் ஜூலியன் கதவை அடைத்தான். வந்தவனை ஒரு ஸ்டூலில் உட்கார வைத்தான். அவனைப் போர்த்தியிருந்த துணி இடுப்புக்கு மேலாக நழுவிச் சரிந்தது. அவனுடைய புஜங்கள், மார்பு, மெலிந்த கரங்கள்—எல்லாம் சட்டை உரிந்து, பெரிய பெரிய புண்களாக இருந்தன. அவன் நெற்றியில் மிகப் பெரிய கீறல்கள். எலும்புக் கூட்டுக்கு இருப்பது போல, மூக்கு இருக்க வேண்டிய இடத்தில் ஒரு துவாரம் இருந்தது. நீலம் பாரித்த அவன் உதடுகளின் வழியாக வந்த சுவாசம், பனிமூட்டம் போலக் கனத்தும் துர்நாற்றமாகவும் இருந்தது.

"எனக்குப் பசியாக இருக்கிறது" என்றான் குஷ்டரோகி.

தன்னிடமிருந்த பன்றி மாமிசத்தின் உப்புக் கண்டத்தையும், கருப்பு ரொட்டித் துண்டு ஒன்றையும் எடுத்துக் கொடுத்தான் ஜூலியன்.

அவன் அதைச் சாப்பிட்டு முடித்தான். சாப்பிடும்போது அவன் அங்கங்கள் பட்ட மேஜையிலும், கிண்ணத்திலும், கத்திப் பிடியிலும், அவன் உடம்பிலிருந்தது போல் புண்ணும் கறையும் விழுந்திருந்தன.

அப்புறம் அவன் சொன்னான்:

"எனக்குத் தாகமாக இருக்கிறது."

ஜூலியன் வாளியை எடுத்துக் கொண்டு வந்தான். அதைப் போய் அவன் எடுத்தபோது அதிலிருந்து சுகந்தமான ஒரு வாசனை வந்தது. அந்த நறுமணத்தால் அவன் உள்ளமும் நாசியும் விரிந்தன. வாளியில் இருந்தது ஒயின்! என்னே தெய்வத்தின் திருவருள்! குஷ்டரோகி கையை நீட்டி ஒயினை வாங்கினான். ஒரே மடக்கில் ஒரு வாளி ஒயினையும் குடித்து விட்டான்.

பிறகு அவன் சொன்னான்:

"எனக்குக் குளிராக இருக்கிறது."

ஜூலியன் காய்ந்துபோன நாணல் புல்லைக் குடிசையின் நடுவில் கொண்டு வந்துபோட்டு மெழுகு வத்தியினால் கொளுத்தினான்.

குளிர் காய்வதற்காக நெருப்பின் பக்கம் வந்து குந்தினான் குஷ்டரோகி. அவனுடைய ஒவ்வொரு அங்கமும் 'வெட வெட' என்று நடுங்கிக் கொண்டிருந்தது; இருக்க இருக்க பலஹீனமாகிக்கொண்டிருந்தன அவன் கண்கள். அவற்றின் பிரகாசமும்

மறைந்தது. சரீரத்தில் உள்ள புண்களில் ஊன் வடியத் தொடங்கியது. சாவுக் குரலில் "உன்னுடைய படுக்கை!" என்று முனகினான் ரோகி.

ஜுலியன் அவனைத் கைத்தாங்கலாகப் படுக்கைக்கு அழைத்துச் சென்றான். அவனைத் தன்னுடைய தோணியின் பாய்மரத் துணியாலும் போர்த்தினான்.

குஷ்டரோகி அழுதான். அவனுடைய உதட்டுக் கோணங்கள் விரிந்து, பற்கள் வெளியே தெரிந்தன. அதிவேகமாகக் கடைசி மூச்சு நெருங்கிக் கொண்டிருப்பதுபோல அவன் சுவாசித்தான். அப்போது, மார்பு விம்மிக்கொண்டிருந்தது; வயிறு முதுகெலும்பைத் தொடும் படியாகக் குழிந்தது.

அப்புறம் கண்களை மூடிக்கொண்டான்.

"என் எலும்புக் குருத்துக்குள் பனிக்கட்டி பாய்ந்தது போலக் குளிருகிறது. சற்று என்பக்கம் நெருங்கி வா" என்றான்.

ஜுலியன் பாய்மரத்துணியை ஒதுக்கிவிட்டு, அவன் பக்கத்தில் இலைச் சருகுப் படுக்கையில் படுத்தான்.

குஷ்டரோகி தன் முகத்தைத் திருப்பிச் சொன்னான்.

"உன் உடைகளை அவிழ்த்துவிடு. உன் சரீரத்தின் சூடு என் மேல் படட்டும்."

ஜுலியன் தன் ஆடைகளைக் களைந்தான். பிறந்த தினத்தன்று அவன் எந்தக் கோலத்தில் இருந்தானோ அதே கோலத்திலேயே, நிர்வாணமாகவே, படுக்கையில்போய் பழையபடியும் படுத்தான். தன் தொடையில் குஷ்டரோகியின் சருமம் ஒட்டிக் கொண்டிருந்ததை உணர்ந்தான். ரோகியினுடைய தோல் பாம்பின் உடம்பைப்போல ஜில்லிட்டுப் போயிருந்தது; முட்களைப்போல சொர சொரப்பாகவும் இருந்தது.

குஷ்டரோகியைத் தேற்ற முயன்றான் ஜுலியன். குஷ்டரோகியோ நெடுமூச்சு வாங்கிக்கொண்டே சொன்னான்: "ஐயோ! நான் செத்துக் கொண்டிருக்கிறேனே!...இன்னும் நெருங்கிவா! எனக்கு வெதுவெதுப்பு கொடு! உன் கைகளினால் மட்டும் அல்ல, உன் முழு உடம்பினாலேயே என்னை அணைப்பாயாக!"

அவனுடைய வாயோடு வாயும், மார்போடு மார்புமாகப் பொருத்திப் படுத்துக் கொண்டிருந்தான் ஜுலியன்.

அப்புறம் குஷ்டரோகி அவனைத் தன் கரங்களால் இறுகப் பற்றினன். திடீரென்று அவனுடைய கண்கள் நக்ஷத்திரங்களைப்போலப் பிரகாசம் அடைந்தன. அவனுடைய கேசம் சூரியக் கதிர்கள்போல நீண்டது. அவனுடைய சுவாசம், ரோஜாவின் நறுமணத்தைத் தந்தது. கணப்பிலிருந்து மேகப் படலம்போல் சுகந்தமான ஒரு வாசனை வந்தது. அலைகள் கீதம் பாடின. இதற்கிடையில், மயக்கமுற்றுக் கிடக்கும் ஜூலியனுடைய உள்ளத்தில் பேரின்பமும், அதிமானுஷ்யமான பேரானந்தமும் வெள்ளத்தைப்போலப் பிரவகித்தன. அவனைக் கால்களால் பற்றியிருந்த அந்த மனிதன் மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருந்தான். அவனுடைய காலும் தலையும் குடிசையின் இருமருங்கிலும் உள்ள சுவர்களைத் தீண்டின; கூரை, மேலே பறந்துவிட்டது; வானுலகம் திறந்தது. ஜூலியன் நீலவானத்தை நோக்கி மேலே போய்க்கொண்டிருந்தான். அவனை சுவர்க்கத்துக்குச் சுமந்து சென்றூர் ஏசுநாதர். அப்பொழுது இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கிய வண்ணமிருந்தனர்.

இதுதான் தர்மரட்சகனுகிய அர்ச். ஜூலியனுடைய கதை. இந்தக்கதை, ஏறக்குறைய இதே மாதிரித்தான் என் பழைய வீட்டின் பக்கமாக இருக்கும் தேவாலயத்தின் ஜன்னலுக்கு மேலே காணப்படுகிறது.

# பஞ்சலட்சணம்

சிதம்பர ரகுநாதன்

தமிழில் இலக்கிய விமர்சனம் பண்ணுகிறவர்கள் எல்லோரும் இலக்கியத்தில் புதுமை நோக்கும், மறுமலர்ச்சியும் இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய பாரம்பரையின் சீமந்த புத்திரனை சுப்பிரமண்ய பாரதியாரோடுதான் தொடங்கியது எனக் கருதுகிறார்கள். இலக்கண வித்தை பண்ணும் பண்டிதர் குழாத்தின் உடும்புப் பிடியிலிருந்து தமிழை விடுவித்து, தமிழ்ப் பாட்டுக்களை சாதாரணத் தமிழ் அறிவு படைத்த ரசிகர்களும் உணர்ந்து அனுபவிக்கும்படியாகப் பண்ணிய பெருமை பதினெட்டாம் நூற்றாண்டின் பிரபந்தப் புலவர்களோடேயே தொடங்கிவிட்டது. கூளப்ப நாயக்கன் விறலிவிடு தூது பாடிய சுப்பிர தீபக் கவிராயர், குற்றாலக் குறவஞ்சி பாடிய திரிகூட ராசப்பக் கவிராயர் முதலிய பலர் இந்தத் திருப்பணியை மேற்கொண்டு, பிரபந்தங்கள் இயற்றினார். ஆனால், அவர்கள் பாடியதெல்லாம், இலக்கணம் வகுத்த பாதையிலே பாட்டு எப்படிச்

சென்றதோ, அதுபோலவே அவர்களது கருத்தும் சென்றுவிட்டது. காலவகையோடு ஒட்டி, பழையன கழித்து, புதியன புகுத்தி புலமையை உண்டாக்கியவர்கள் இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய கர்த்தாக்கள்தான் என்றும் விமர்சகர்கள் கருதினார்கள். ஆனால், இந்த அபிப்பிராயத்தைச் சமீபத்தில் நான் மாற்றிக்கொள்ளவேண்டியதாயிற்று. கருத்திலே புதுமையும், நடையிலே எளிமையும் ஒருங்கே அமையப்பெற்ற இலக்கியப் பணியை இருபதாம் நூற்றாண்டுக்கு முன்னதாகவே ஒரு புலவர் தொடங்கி வைத்திருக்கிறார். அவர்தான் வில்லியப்ப பிள்ளை. அவர் இயற்றிய புதுமை இலக்கியம் பஞ்சலட்சணத் திருமுக விலாசம் என்பதாகும். அந்நூலை அறிமுகப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

புதுமை இலக்கியம் என்று நான் குறிப்பிடும்போது, தற்காலத்தில் அந்தத் தொடருக்குள்ள விளக்க வியாக்கியானங்களும் ஞாபகத்துக்கு வரவே செய்கின்றன. காலவகைக்கு ஏற்றாற்போல், நிகழ்கால சரித்திர திருஷ்டியோடு, எதிர்கால சரித்திரத்தை நிர்ணயிக்கும் முறையில், மக்களுக்குப் பயன்படும் தன்மையில் இலக்கியம் சிருஷ்டிக்கவேண்டும் என்று இன்றைய முற்போக்காளர்கள் கூறுகிறார்கள். அந்த நோக்கத்தோடு பார்த்தால், தமிழில் இலக்கியம் பண்ணிய பெரும்புலவர்கள் கூட, காலவகைக்கு ஏற்றவாறு, இலக்கிய சிருஷ்டி செய்ததாகச் சொல்ல முடியாது. சரித்திர சம்பவங்களைப் பின்னணியாகக் கொண்டு இயற்றிய ஜெயங்கொண்டானின் கலிங்கத்துப் பரணி, நக்கீரனின் நெடுநல் வாடை, திருமங்கை மன்னனின் சில பாசுரங்கள் ஆகியவை இலக்கியங்கள் என்ற பெருமையைத் தவிர, பொதுமக்களுக்கு வாழ்க்கை நலம் தருவதற்கான எந்தக் கருத்துக்களையும் தரவில்லை. என்றாலும் சரித்திரக் கண்கொண்ட இலக்கிய விமர்சகர்களுக்கு, இந்நூல்கள் ஆராய்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சியை நிர்ணயிப்பதற்கும் பெரிதும் பயன்படும். ஆனால், இந்நூல்களில் மக்களின் தேவையைப் பிரதிபலிக்கும் கருத்துக்களை எதிர்பார்ப்பதும் தவறு. ஏனெனில் அந்தக் காலத்து சரித்திர கதியும், அரசியல் கருத்தும், இலக்கிய நோக்கமும் இந்தக்காலத்து வரம்புகளுக்கு எந்த விதத்திலும் உடன்பாடு ஆற்றவை. இதுபோலவே பதினெட்டாம் நூற்றாண்டின் கிலப் பிரபுத்துவக் காலத்தில் வாழ்ந்த புலவர்களும், தங்கள் முன்னோர் வழியில்தான் தமது கருத்துக்களையும் கையாண்டார்கள். அவர்கள் எளிய இனிய தமிழில் நூல்கள் இயற்றியபோதிலும், தங்கள் கும்பிக் கொதிப்பை

ஆற்றுவதற்காக, குறுநிலக் கிழவர்களான ஜமீன்தார்கள் மீது உலா, மடல், தூது முதலியனவற்றைப் பாடி வைத்தார்கள். இதன் காரணமாக, அவர்கள்கூட, பாட்டுடைத் தலைவரின் நப்பாசை இஷ்ட பூர்த்திக்காகவே தமது கவிப் பொருளை அமைத்துக் கொண்டார்கள்.

இந்தக் கட்டுரைத் தலைவனான வில்லியப்ப பிள்ளையும் இந்தப் பிரபந்தப் புலவர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்தான்; இவரும் ஒரு ஜமீன்தாரிடம் பிரதிபலன் கருதித்தான் தமது நூலை எழுதினார் என்று பலரும் கருதலாம். என்றாலும், தமது நூலின் கருத்தை, ஜமீன்தாரின் ஆசாபாசங்களைப் பூர்த்திசெய்யும் கருவியாக அமைக்காமல், அவரது காலத்தில் நடந்த பஞ்சத்தையும், அதன் பலாபலன்களையும் தமது கருத்தாகக் கையாண்டிருக்கிறார். இன்றைய இலக்கியக் கண்ணோட்டத்தின்படி பார்த்தால், அது ஒன்றுதான் அவர் பெறக்கூடிய பெருமையாகும். மேலும், அந்தக்காலத்தில் நிலப் பிரபுத்வம் காலூன்றி நின்றது; தேசிய உணர்ச்சியோ, ஏகாதிபத்திய வெறுப்போ கிடையாது; சமூக சரித்திர ஞானம் கிடையாது. அநேகமாக, எல்லோருமே ராஜ வாழ்த்துப் பாடிவந்த காலம். இந்த நிலைமைக்கு மாறுபட்டு அவர் ஏன் பாடவில்லை என்று கேட்பதும் தவறு. சுருக்கமாகச் சொன்னால், பாரதி காலத்தில் இருந்த சூழ்நிலையும், இலக்கிய ஞானமும் பாரதியை முற்போக்குக் கவிஞனாக்கின; அதுபோலவே வில்லியப்ப பிள்ளையின் காலத்திலிருந்த சூழ்நிலையும், அரசியல் ஞானமும் அவரை அந்த அளவுக்கு முற்போக்குக் கவிஞராக்கின என்பதைத்தான் குறிப்பிட விரும்புகிறேன். எனவே தான், பஞ்சலட்சணத்தை நான் புதுமை இலக்கியம் என்று குறிப்பிட்டேன்; பாரதிக்கு முன்பாகவே இன்றைய இலக்கிய விமர்சகர்கள் குறிப்பிடும் மறுமலர்ச்சி ஏற்பட்டுவிட்டது என்றும் தீர்மானித்தேன்.

நூலைப்பற்றியும், நூலாசிரியரைப்பற்றியும் அகச்சான்று, புறச் சான்றுகள் மூலம் பின்வரும் விவரங்களை நாம் அறிந்துகொள்ள ஏதுவாகின்றது. வில்லியப்ப பிள்ளை 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், அதன் பின்னர் சில காலமும் வாழ்ந்த புலவர். உ. வே. சாமிநாதய்யர் பதிப்பித்த திருப்பூவண நாதர் உலா என்னும் நூலுக்கு, வில்லியப்ப பிள்ளையும் ஒரு புலவர் மூலம் ஒரு ஏட்டுப் பிரதி தந்துதவியாகவும், அது ஒன்றே பரிபூர்ணமான ஏடு என்றும் உ. வே. சா. குறிப்பிட்

ுள்ளார். நூலுக்கு பிரமனூர் மீனுட்சி சுந்தரத் தேவர் இயற்றிய சாற்றுக் கவியால், ("வருமுகப் பாரியன் அய்யம் பெருமாட்கோர் மாமகவாய் வந்தே...") வில்லியப்ப பிள்ளை பிரமனூர் அய்யம் பெருமாள் பிள்ளையின் குமாரர் எனவும் அறிகிறோம். பிரமனூர் என்னும் ஊர் இராமநாதபுரச் சீமையில் சிவகங்கைக்கு அருகிலுள்ள சிற்றூர். அவ்வூரில் நூலாசிரியர் மிராசுக் கணக்கு உத்தியோகம் வகித்ததோடு, சிவகங்கை ஜமீன் புலவராகவும் விளங்கியிருக்கிருர். எனவே அப்போது சிவகங்கை ஜமீன்தாராக விளங்கிய துரைச்சிங்கத் தேவரை பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு பாடியிருக்கிருர். 1876-ம் ஆண்டுக்குச் சரியான தமிழ் வருஷம் தாதுவில் நிகழ்ந்த பஞ்சத்தைத் தான் இவர் தம் கவிப் பொருளாகக் கொண்டிருக்கிருர். (பஞ். ல. : 138-140) என்ருலும், அவர் பஞ்சலட்சணத்தை சுமார் 23 ஆண்டுகளுக்குப் பின்னர், அதாவது 1899-ம் ஆண்டுக்குச் சரியான தமிழ் வருஷம் விகாரியில், தை மாதம் 26-ம் தேதியன்று ("உலவிய விகாரியில், தைமதி, இருபத்தாறு இரவில்...வில்லியப்பன் திருமுக விலாச மதை வழுத்த..."—மதுரை நீ. இராமலிங்கம் பிள்ளை எழுதிய சிறப்புச் செய்யுள்) அரங்கேற்றியிருக்கிருர். மேலும், நூலாசிரியர் வியாபார மோசடிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது ஜவுளிக் கடைக்காரர்களில் முத்துக்கிருஷ்ண துரை, அருணசலம், அய்யம்பெருமாள், வெண்ணிமலை, காத்தையா என்னும் சிலரையும், தட்டார்களைப் பற்றிய விவரத்தில், துரைக் கணபதி ஆசாரி, ஆறுமுகம், ராமசாமியாசாரி என்னும் சிலரையும் நம்பிக்கை மோசம் செய்யாத நாணயஸ்தர்கள் எனக் குறிப்பிடுகிருர். எனவே இவர்களெல்லாம் ஆசிரியருக்குத் தெரிந்தவர்களாகவோ, வேண்டியவர்களாகவோ இருக்கக் கூடும் என்றும் அறிகிறோம். நூலுக்கு சதாவதானி சரவணப் பெருமாட் கவிராயர், சிலேடைப்புலி பிச்சுவய்யர் முதலியோர் சாற்றுக் கவிகள் அளித்திருக்கின்றனர்.

சுமார் 4600 வரிகள் கொண்ட இந்நூல் முழுவதும் கலிவெண்பாவினுல் ஆனது. இந்நூலுக்கு அதன் முக்கிய கதாம்சத்தை அடிப்படையாகக்கொண்டு, 'உலக ரகசிய வெளிப்படை' என்ற பெயரும் வழக்கில் இருந்துவருகிறது. 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்'. பஞ்சம்வந்த காரணத்தால், மக்களின் நாணயமும் ஒழுக்கமும் எப்படித் தலைமாறிப்போய் விடுகின்றன என்பதைத்தான் இந்நூலில் ஆசிரியர் பெரிதும் பேசியிருக்கிருர். அந்தத் தன்மையிலேயே ஆசிரியர் எடுத்துக் கொண்ட கருத்து புதுமையாகத் தோற்றமளிக்கிறது. தாது

வருஷம் பிறக்கிறது. அத்துடன் கிரகக் கோள்கள் நிலை புரண்டு போனதால், மழையில்லை. பூமி வாய் திறக்கிறது. மாடு கன்றுகள் வருந்துகின்றன. ஜனங்கள் மழையைவேண்டி, தெய்வத்தை வேண்டுகிறார்கள். கையிலிருந்த விதை தானியமும் விதைக்கப்பட்டு நாசமாகிறது. வாங்குவாரில்லாமல், வாங்கும் சக்தி குறைந்து போனதால், பொருள்கள் மலிவாகின்றன. இதனால், ஜனங்கள் உடைமைகளையும் உரிமைகளையும் விற்று ஜீவிக்கிறார்கள். கண்டவற்றைத் தின்று வருந்துகிறார்கள். இளைத்துத் துரும்பாகிறார்கள். சர்க்கார் கஞ்சித்தொட்டி வைக்கிறார்கள். பிழைப்புக்காக, கண்மாய் மராமத்து வேலையைத் தொடங்குகிறார்கள். ஏழை பாழைகள் உழைக்கச் செல்கிறார்கள். குனிந்து வேலைசெய்ய விரும்பாதவர்கள் ஏமாற்றி எத்து சித்து வேலைசெய்து பிழைக்க முனைகிறார்கள்; பணக்காரர்கள் ஏழைகளைச் சுரண்டுகிறார்கள். காசுக் கடைக்காரர், ஜவுளிக் கடைக்காரர், பொற்கொல்லர், வேசியர் இவர்களின் மோசடித் தனம், பிழைக்க வழியற்றுப் பொய்வேடமிட்டு, வைத்தியன், சாமியார், கோடங்கி, சோதிடன், புலவன் முதலிய அவதார மெடுப்பவர்களின் ஈனத்தனம், லேவாதேவிக்கடன் மோசடி, குடும்பச் சண்டைகள், மாமியார் மருமகள் சண்டை—எல்லாம் சகஜமாகின்றன. கடைசியில் மக்கள் வேறு வழியின்றி சோமசுந்தரக் கடவுளிடம் முறையிடுகிறார்கள். சோமசுந்தரர், கடவுளர்களின் ஏலாத்தனத்தையெல்லாம் எடுத்துக்கூறி, கடைசியில் பாட்டுடைத் தலைவனை துரைச் சிங்கத் தேவருக்கு ஒரு திருமுகம் அளிக்கிறார். அந்தத் திருமுக விலாசத்தைப் பாடிய புலவருக்கும் மற்ற ஜனங்களுக்கும் வெகுமதிகள் அளித்து ஜமீன்தார் வறுமையைப் போக்குகிறார். அத்துடன் தேவகிருபையால் மழையும் பொழிந்து பூமி செழிக்கிறது.—இதுதான் பஞ்சலட்சணத் திருமுக விலாசத்தின் கதாம்சம்.

நூலிலுள்ள பிரதான ரச உணர்ச்சி ஹாஸ்யமே யாகும். துன்பமயமான கதாம்சத்தில் ஹாஸ்யத்தைப் புகுத்துவது சரியா என்று சிலர் கேட்கலாம். இலக்கியத்தில் அது ஒருவகை. குறிப்பாகச் சொல்லப்போனால், அந்தக்கலை அவ்வளவு லகுவில் கை வந்துவிடாத சரக்கு என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில் வில்லியப்பபிள்ளை உண்டாக்கும் ஹாஸ்ய உணர்ச்சி அர்த்தமற்ற அவுட்டுச் சிரிப்பு விகடக் கொத்தல்ல. அது நையாண்டிச் சிரிப்பு. இதைத்தான் ஆங்கிலத்தில் Satire என்று சொல்லுவார்கள். அதாவது ஆசிரியர் சமூகத்தின் ஊழல்களை இன்னதென ஆராய்ந்து, அதைக் குத்தலான முறையில்

கண்டிப்பதுவே நையாண்டியாகும். இந்த நையாண்டியில் ஆசிரியர் தமது வெறுப் புணர்ச்சியைக் காட்டிக்கொண்டால், அவர் எடுத்துக்கொண்ட கருமம் பயனற்றதாகப் போய்விடும். எனவே அந்தக் கருமத்தில் பரிபூரண அனுதாபத்தோடு, பரிவு உணர்ச்சியோடுதான் அதை எழுதவேண்டும். இதை ஆங்கில விமர்சகர்கள் Benevolent Satire (பரிவு நிறைந்த நையாண்டி) என்கிறார்கள். இந்த மாதிரியான நையாண்டியை மேல்நாட்டில் பலர் செய்திருக்கிறார்கள். சார்லஸ் டிக்கன்ஸ் எழுதிய பிக்விக் பேப்பர்ஸ், அனதோல் பிரான்ஸ் எழுதிய பெங்வின் ஐலண்ட் முதலிய நூல்கள் இந்த ரகத்தைச் சாரும். மேலும், இந்த சேவையில் முழு மூச்சாக உழைத்தவர்கள் ஸ்விப்ட், அடிசன், தாக்கரே முதலியவர்களாவர். ஆனால் நம் நாட்டில் இம்மாதிரியான நையாண்டி இலக்கியம் எதுவுமே தோன்றவில்லை. அந்த சேவையில் பஞ்சலட்சணம்தான் முதல் நூலாக விளங்குகிறது. ஹாஸ்ய ரசத்திலும் பஞ்சலட்சணத்தின் பக்கம் எந்தத் தமிழ் நூலும் நிற்காது என்பது என் அபிப்பிராயம். இதற்கடுத்ததாகச் சொல்ல வேண்டுமானால், தேசிகவிநாயகம் பிள்ளை எழுதிய “நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்” என்னும் நூலைத்தான் குறிப்பிடலாம். இவ்விரு நூல்களும் தமிழ் இலக்கியத்திலேயே ஒரு புதுமையை உண்டாக்கி விட்டிருக்கின்றன.

இனி ஆசிரியர் எவ்விதமாகத் தமது ரச உணர்ச்சியை வெளியிடுகிறார் என்பதை சில உதாரணங்கள் மூலம் பார்க்கலாம். மழையில்லை என்று அறிந்ததும் மக்கள் சோசியரை நாடி, கிரக நிலையில் தோஷம் ஏற்பட்டுவிட்டதா என்று கேட்கிறார்கள். சோசியர் நவக்கிரக தோஷம் கழிந்ததென்றும், இனி மழை பொழியு மென்றும் சொல்லிவிட்டார். ஜனங்கள் அதை நம்பி வானைப் பார்த்தவாறு இருக்கிறார்கள். சோசியமும் பொய்க்கவில்லை. எப்படி? அதில்தான் ஆசிரியரின் கற்பனைத் திறமும், ஹாஸ்யமும் வெளிப்படுகிறது.

ஆசரித்துக்கேட்க, அவர் ‘அஞ்சேல் நவக்ரகத்தின்
தோஷமும் இன்றோடே தொலைந்தது காண்—காசினிக்கு

நாளை முதல் யோகம் நடக்குது; இனி அஞ்சாறு
வேளைக் குள்ளாக மிகுந்த மழை—கோளமெங்கும்

பூர்த்தியுடன் பெய்யும்; இது பொய்யாது. பொய்த்திடில் இச்
சாஸ்திரத்தைக் கைதொடேன் சத்தியம்’ என்று—ஆர்த்த [1] கணி

1 கணி - கணிதம்; இங்கு பஞ்சாங்கம்.

ஓர்ந்த இவர் சொன்ன உறுதியினால், வானிலை அண்
ணாந்து உயரப் பார்த்ததுவே நாட்டமாய்ச்—சோர்ந்து

கடற்கரை மேகங் கிளம்பல், காற்றடித்து மின்னல்
தொடக்கு மழைக் குறிகள் தோன்றுது—ஒடுக்கமுற்று

நெஞ்சம் அயர் காலையில், நீள் வான் முகட்டினில் ஓர்
பஞ்சனைய மேகம் பரவியே—தொஞ்சு

பசையில்லார் உள்ள மெனப் பற்றின்றி, ஊழற்
கொசுகு பறந்த குணம் போல்—பொசு பொசென்று

தூசி படியாமல், விழும் தூறல் கண்டு, 'பஞ்சாங்கப்
பூசுரர்கள் சொற்றதும் பொய் இலை!.........

என்று மக்கள் ஏமாந்ததைச் சிரிப்போடு எடுத்துக் காட்டுகிறார். இந்தச் சிரிப்பில் மக்களின் பாமரத் தன்மையைப்பற்றிய பரிகாசம்மட்டும் தொனிக்கவில்லை; கதியற்றுத் தவிக்கும் மக்களுக்கு ஒரு சின்னஞ்சிறு நம்பிக்கை என்னென்ன கஷ்டங்களைத்தந்து விடுகிறது என்றும் பார்க்கிறோம். பஞ்சாங்கத்தை நம்பி, கொசுகு பறந்ததைப்போல் விழுந்த தூறலைக் கண்டு கையிலிருந்த விதைத் தானியத்தையும் விதைத்து வருந்தும் சங்கடத்தை ஆசிரியர் பின்னால் வருணிக்கிறார். மக்கள் பஞ்சத்தால் வருந்தியதை,

—வெற்றிமதன்

கோடிய வில்பூட்டி, குறித்து மலர்ச் [1] சாயகத்தை
ஈடுகட்டி, கூடிய மட்டும் எய்ததிலும்—ஆடவர்கள்

மங்கையரைத் தேடுதற்கும், மங்கையர்கள் ஆடவரின்
சங்கமத்தை நாடுதற்கும் சத்து விட்டு—பொங்கியெழும்

காமைய நாயக்கர் கன குதிப்பெல்லாம் ஒடுங்கி
ஆமையப்பர் போலாய் அடங்கினரே—மாமகிழ்வாய்க்

கொண்டை கட்டி, பூமுடித்த கோதை நல்லார் கூந்தலிலும்
திண் திறல் ஆண்பாலார் சிகையினிலும்-பண்டுதொட்டு அங்கு

எண்ணெய்ப் பிறப்பொழிந்து அங்கு ஈரோடு பேன் மலிந்து
வண்ணச் சடை பிடித்து மல்கினவே—பண் அளியும்

சேல்கெண்டை போலும் சிறந்த கண்ணில் பீளை கட்டி
நால் கண்டைப் போல் எழுந்த நோக்கமதை—மேற்கண்டு அங்கு

ஈயும் கொசுகும் எறும்பும் இடை நீங்காமல்
பேய் போல் அரிச்சுப் பிடுங்கினவே.........

துஷ்டமத யானைத் துதிக்கை யெனத் திரண்டு,
கட்டழகு வாய்ந்த கழல் இரண்டும்—சட்டைவிட்டு

---

1 சாயகம்—அம்பு.

முட்டிக் கால் தட்டி, முழங்கால் கடுப் பெடுத்து
பட்டடைத் தூண் போலாய்ப் பருத்ததே
அரை மணித் [1]தியாலம் அதில் ஐங்காதம் சுற்றி
வருது ரிதமுள் ளோர் வருந்தி
வீசுமொரு கோலூன்றி, வீடிருந்து வாசல்வரக்
காசி ரமேஸ்வரம் போல் காணுமே—

என்று வருணித்து அந்த மக்களின் கோலத்தைக் கண்டு நம்மில் சிரிப்பை எழுப்பும் அதே சமயம், தொடர்ந்து வரும் அடிகளில் நமது பரிபூரண அனுதாபத்தையும் சம்பாதித்துவிடுகிறார்.

வெம்பசியினால் குழந்தை வீறிட்டு அழுக, அன்னை
தம்பரிவினோடு அணைத்துத் தாலாட்டி—கும்பமுலை
வாயில் வைக்க, பீர்சுரந்து வாராதால், அச்சிசுவும்
தாய் முகத்தைப் பார்த்துத் தவித்ததே!

என்றும் கூறிவிடுகிறார்.

பணவரட்சி ஏற்பட்டதால், ஊரிலுள்ள வேசையர்பாடும் திண்டாட்டமாகி விட்டது என்பதைக் குறிப்பிடும்போது நாசூக்கான ஹாஸ்ய உணர்ச்சியுடன் குத்திக் காட்டுகிறார்.

—தொற்று, விஜ

சரத் தொழில் புரிந்து சந்ததமும் தேடியுண்ட
சோரஸ்திரி கடனைத் தூய்ப்பவர்கள்—ஆருமிலா
ஆதலினால் அன்றோ அரிய [2]வடமீன் நிகர்ப்ப
மேதகைய கற்புடைமை மேவினரால்

என்று கூறி, அவர்களது 'கற்புடைமை'யை அருந்ததிக்கு ஒப்பிட்டுக் கூறி ஹாஸ்யத்தைத் தூண்டிவிடுகிறார்.

வெறும் பேச்சும் போலிக் கௌரவமும் கொண்டு, மேனி மினுக்கித் திரிந்தவர்களின் அற்ப வாழ்க்கையின் சீர்குலைவையும் ஆசிரியர் அருமையான முறையில் சுட்டிக் காட்டுகிறார். அதாவது, வேறு விதியின்றி எப்போதும் கஷ்டமுறும் ஏழை ஜனங்களின் மீது இரக்க சிந்தையும், அதே சமயம் போலிக் கௌரவத்தைப் போற்றி வளர்க்கும் நபர்களிடம் வெறுப்பையும் ஆசிரியர் வெளியிட்டுக்கொள்கிறார்.

சீனியிட்டுக் காய்ச்சிய பால் தித்திப்பாயில்லையென
மேல்நலம் பாராட்டி வந்த மேலோர்கள்—தானொடுங்கி
வெப்புசுடு கூழருந்தி, மேல் மீசை தாடிகளில்
அப்பி-என்ன சொல்வேன் அலங்கோலம்!—திப்பியமா

---

1 தியாலம்—நேரம் 2 வடமீன்: அருந்ததி: தம்மைத் தேடி வருவாரில்லாமையால் வேசையர்கள் கற்பரசிகளாயிருந்தனராம்.

நல்ல பலகார வர்க்கம் காமருந்தோம் என்று சொல்லி,
செல்லச் செருக்கிநின்ற சீருடையோர்—செல்லரித்த

தூவல் புளி விதைக்கும், சோளத் தவிட்டினுக்கும்
ஆவல் கொண்டும், இட்டார் அலமலந்தார்—தேவரன்ன

[1]தென் புலத்தார் தன் திவசம் செய்யாது கண்டு, இனத்தார்
நன்குற நிந்திப்பர் என்று நாணுளராய்—முன் பகலே

வேற்றூர் சென்று ஆங்குதிதி மேன்மையாய்ச் செய்தனென்று
சாற்றிப் புகுந்தவர்தான் அனந்தம்!......

என்று கூறுவதன்மூலம் மத்தியதர வர்க்கத்தின் போலிக் கௌரவத்தைச் சரியானபடி குத்திக்காட்டுகிறார் ஆசிரியர். மேலும் அன்னவர்கள் சுடுகஞ்சிக்கும் பரிதபிக்கும் தன்மையை, மிகவும் அருமையான முறையில்,

—காற்றறைந்த

பஞ்சுபோலாகி, பரிந்துழலும்போது சுடு
கஞ்சியப்பர் வந்து கலந்தனரே—கஞ்சியப்பர்

வெஞ்சினமிலார் எனவும், மேல் வெறுப்பிலார் எனவும்
செஞ்சுருதியின் சொல்திறம் காட்டி—கொஞ்சியவர்

நீவும் கலந்தனிலே நீச்சான தண்ணீரில்
வாவிப் புகுந்தே மறைந்திடுவார்—தாவிமெல்லக்

கண்டுபிடிக்கக் கருத்துற்று, ஒரு கரத்தால்
மண்டியிட்டுச் சுற்றி வளைத்தாலும்—முண்டி, வல

சாரியிட சாரியில் மச்சான் முறை கொண்டாடியும் தெண்
நீர்உகள் சேலென்ன நெடி தொளிப்பார்—நேருறவே

துன்றலையின் நீடு சுழியூடு எழுந்து மெல்லத்
தன் தலையை நீட்டி உள்ளில் தாழ்ந்திடுவார்

என்று ஒரு சோற்றுப் பருக்கையை அந்தக் கஞ்சியில் தேடிப் பிடிக்கும் திருவிளையாடலை சிலேடை நயத்தோடும் ஹாஸ்ய நயத்தோடும் காட்டிச் சிரிப்பூட்டுகிறார்.

பின்னால், அரசாங்கத்தார் கண்மாய் ரிப்பேர் செய்யும் காலத்தில், ஏழைகள் பாடு ஒரு வழியாய்த் தீர்ந்ததென்றும், மற்றவர்கள்தான் ஏமாற்று வழிகளில் இறங்கினரென்றும் குறிப்பிடுகிறார்.

—பார்மீதில்

யாதோர் கதியுமில்லா எண்ணிறந்த ஏழைகளே
தீதோய்ந்தார். மற்றவரென் செய்குவார்?

---

1 தென் புலத்தார்—பிதுர்க்கள்

என்று கேட்டுவிட்டு, வியாபாரத் தொழிலில் ஈடுபட்ட அனை வருடைய இல்லுமுல்லுத் தனத்தையும் தெளிவு படுத்துகிறார். காசுக் கடைக்காரரின் கஞ்சத்தனம், நகை விற்க வருபவர்களி டம் நட்பாடி அவர்களைச் சுரண்டும் தந்திரம், சாமியார் வேடம் பூண்டு, ஊரை ஏமாற்றும் பிழைப்பு முதலியவற்றை யெல்லாம் அக்கக்காக அலசி ஆராய்ந்து வெளியிடுகிறார். அவரது வர்ணனைகளையும், ஒவ்வொரு பாத்திரத்தையும் அறி முகப்படுத்தும் பண்பையும் பார்த்தால், இவர் சகல தொழில் முறை ரகசியங்களிலும், சோதிடம், வைத்தியம் முதலிய சாஸ் திரங்களிலும் ஓரளவிலோ அல்லது பரிபூரணமாகவே ஞானம் நிறையப் பெற்றவர் போலவே தோன்றுகிறது. மேலும், ஒவ் வொரு பாத்திரத்தின் தன்மையையும் நடையுடை பாவனைகளை யும் வருணிக்கும் முறைமையால் ஆசிரியரது தீக்ஷண்யமான கிரஹிப்புத் தன்மை, வாழ்க்கையில் பழகும் பல பாத்திரங் களின் நடவடிக்கைகளை அணுவுக்கணு தெரிந்து உருவாக்கும் தன்மை இரண்டும் பரிபூரணமாக நிரம்பித் ததும்புகின்றன என்றே சொல்ல வேண்டும். இவருக்கு முன்னிருந்த பதி னெட்டாம் நூற்றாண்டுப் பிரபந்தப் புலவர்களும் பாத்திர சிருஷ்டியில் நிபுணர்கள்தான். என்றாலும், இவரைப்போன்ற தீக்ஷண்யக் கண்ணோட்டம் அவர்களுக்கு இல்லை யென்று தான் சொல்ல வேண்டும். உதாரணமாக, சாமியாரைப் பற்றிக் கூறும்போது,

> மாத்திரைக் கோலேந்தி இறுமாப்புடன் அண்ணாந்து நடந்(து)
> ஏத்துறும் வெண்ணீற்றினை ஏராளமாய்—[1]காத்திரம் மீது
>
> எல்லை யறப் பூசி நயந்து என்னத்தையோ போட்டு
> மெல்லுவன் போல் வாயை மிணுமிணுத்து

வருவதாகக் கூறுவதும், கோடங்கியைக் குறிப்பிடும்போது,

> காணிக்கைக்கு ஏதேனும் காசோ நெல்தானியமோ
> பாணிப்பீர் என்ன பசப்புதலாய்—பேணி இவன்
>
> மற்றும் உடுக்கை மெல்ல வாழ்த்தி எடுத்து, அதனைச்
> சற்றே தொனி இளம்பத் தட்டியே

என்று குறிப்பிடுவதும், பொய்ப் புலவனின் நடையை வருணிக்கும் போது,

> காதில் தரிப்பு கடுக்கன் ஒளி இலங்க
> சோதி முலாம் பூசித் துலக்கிய ஓர்—மோதிரத்தைக்

---

1 காத்திரம்—உடம்பு

கைவிரலில் பூண்டு, சனவல்லவாட்டுடனே
ஒய்யாரமான உடை உடுத்தி......

கண்ணாடி பார்த்து, கவின் திலகம் தீட்டி, மகிழ்ந்(து)
அண்ணாந்து காலே அகட்டி நடந்து—தொண்ணூர்ந்த

கையில் குடைபிடித்து, கால்சோடு மாட்டி, ஒரு
பையல் கற்றுச் சொல்லி தன் பின்பற்றி வர

உலாவரும் காட்சியை விளக்கும் போதும், வைத்தியன் நாடி பிடித்துப் பார்க்கும் காட்சியை,

—மெல்ல அவன்

மென்கரத்தைப் பற்றி, விரல் எட்டி வாங்கி இவன்
தன் கரத்தினுலும் தடவியே—பின் குறித்த

நாடித்தலத்தில் நடுமூவிரல் பதித்து
நாடி அண்ணாந்து, நடு முகட்டை—லேடிப்

புருவம் எழப் பார்த்து, மெலப் புன் சிரிப்புத் தோன்ற
சிரம் அசைத்து, சற்றே சிந்தித்து—தரும் இடக்கைத்

தாதுவையும் பார்த்த பின்பு தன் விரல் கீழ்ச் சுண்டி அதில்
ஏதுவைக் கண்டான் போல் இயம்புவான்

என்றெல்லாம் நின்று நிதானித்து ஒவ்வொருத்தனின் அங்க அசைவுகளையும் பாவங்களையும் கூட அருமையாக விளக்கும் ஆற்றல் இவரைப் போல் வேறு எந்தப் புலவரிடத்திலும் காண முடியவில்லை.

ஆசிரியர் கையாண்டி முறைமையில் தமது கருத்துக்களை எடுத்துக்காட்டி, சொல்லுக்குச் சொல் பொடிவைத்துப் பேசும் ஹாஸ்ய முறையையும் கையாண்டு வெற்றி பெற்றிருக்கிருர். இந்த முறையை ஆங்கிலத்தில் Irony என்று குறிப்பிடுவார்கள். உதாரணமாக, சாமியார் வேடம் பூண்டு வருபவன் தனது சுய விளம்பரத்தைச் சொல்லுகிற விவரத்தைப் பார்க்கலாம்.

சாவா அமிர்தரச சஞ்சீ வினியுட்னும்
மூவா அநேக முறை பலவும்—பாவகமாய்ச்
செய்து முடித்துளது; தேர்ந்த ரசவாதமதில்
கை கண்டது இந்தக் கடுங் கழுதை— மெய் சோர்ந்து
பிள்ளையிலே யென்று வந்த பேதை மடவார் பலர்க்கும்
பிள்ளைகொடுத்ததிந்தப் பேய்மாலம்—உள்ள படி
மைவசியத் தால் உலக மன்னவர்கள் காரியத்தைக்
கை கூடச் செய்ததும் இக்கட்டையே—வெய்யவழி

கூனதிர்ச்சி மூங்கை குருடுபல நோய்களையும்
ஞானதிருஷ்டியாலும் நாம் புரியும்—வான்முகிலை

ஐயென்றுருக்கி அகன் காசினி செழிக்கப்
பெய்யென்னில் பெய்யும் பெருமழையே......

...............—மீறுசெல்வம்

உற்றவரைப் பிச்சை எடுத்துண்ண விடும்; கையில் நிதி
அற்றவரை லக்ஷப் பிரபுஆக்குமே

என்று தன்னை அஃறிணைப் பொருளாகப் பாவித்து—அதாவது ஜடமாகப்பாவித்து, அந்தப் பஞ்சத்துக்காண்டி பேசுகிறன். ஆனல், அதே வேளையில் சாமியார் வெறும் மாய் மாலக்காரன் என்று அறிந்த வாசகருக்கு அவன் தன்னை கழுதை, பேய் மாலம், கட்டை என்றெல்லாம் இழித்து கூறும்போது, நமக்கு அவனது உண்மை நிலையே அது தானே என்ற உண்மை நினை வூறி, ஹாஸ்யத்தை உண்டு பண்ணுகிறது. இதுபோலவே, அவன் தன்னை ரசவாத வித்தை கற்றவன், மழையைப் பெய் யச் செய்யும் சக்தியுடையவன், செல்வத்தை வரவும் போகவும் செய்யும் சித்து உடையவன் என்றெல்லாம் சொல்லிக்கொள் ளும்போது, அந்த வித்தைகளால், அன்று நாட்டிலே நிலவும் பஞ்ச நிலையையே போக்கிக் கொள்ள முடியுமே, அவனும் இப்படிப் பிச்சையெடுக்க வேண்டாமே என்று நாமெல்லாம் எண்ணக்கூடும். அந்த எண்ணத்தை வற்புறுத்தி, அந்தச் சாமி யாரின் போலித்தன்மையை மறை முகமாக குத்திக் காட்டுவது தான் மேற் கூறிய Irony என்னும் நகைச் சுவை வகையாகும்.

இது போலவே, பொய் வேடமிட்டு வரும் புலவன் தனது தற்குறித் தன்மையைத் தன்னை யறியாமலே வெளியிடுகிறன் என்ற உண்மையை,

கல்விப்ரசங்கக் கவிராஜர் நாம்; நமது
நல் வித்தை கண்டு அயனும் நாணுவான்—பல்கலைநூல்

ஆசிரியர் நம்மை அதிகப் பிரசங்கியெனப்
பேசஉலகெங்கும் பெயர் பெற்ருேம்—ஆசறுசீர்

விஞ்சைத் தமிழில் இவர் மெத்தப் படித்தவர் என்று
ஓஞ்சிப் புலவர் நமக் கோட்டமே!

என்று புலவன் கூற்ருக வெளியிடும்போது, அவன் 'அதிகப் பிர சங்கி,' 'மெத்தப் படித்தவன்' என்ற சொற்கள் மூலம் பெரு மை தேடும் அதே சமயத்தில், அந்தச் சொற்களின் உண்மை

யான பொருளை—அதாவது வழக்கில் வஞ்சப் புகழ்ச்சியாக வழங்கும் அச்சொற்களை நாம் உணர்ந்துகொள்கிறோம். எனவே நமக்கு நகைச் சுவை தட்டுப்படுகிறது.

மேலும் தெய்வத்தைப் பயன் படுத்தி ஏமாற்றுக் காரர்களும், கடை முதலாளிகளும் எப்படி ஏழைகளைச் சுரண்டுகிறார்கள் என்பதை, கோடங்கியின் மூலமும், ஜவுளிக் கடைக்காரர் மூலமும், கடன் மோசடி செய்யும நபர் மூலமும் பிரமாதமாக எடுத்துக் காட்டுகிறார்.

இனி இவருடைய கவிதையின் தன்மையை ஆராய்ந்து பார்க்கும்போது, இவரது பாஷையில் வேகமும், எளிமையும், நிறைந்து விளங்குகிறது என்பது தெளிவு. இதற்கு மேற்கண்ட உதாரணங்களே சரியான சான்ருக விளங்கும். என்ருலும், இவரது பாடலில் சில இடங்களில் சொற்ருெடர் பாட்டின் சீரோடு இணைந்து முறிவின்றிச் செல்லவில்லை. சில இடங்களில் வார்த்தைகளை எதுகை மோனைகளுக்காக முன்னும பின்னும் பிரித்துப்போடும் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகியிருக்கிருர். அதனுல் தான் பாட்டின் வேகம் இவருக்கு முந்திய புலவர்களான சுப்பிர தீபம், சரவணப் பெருமாள் முதலியவரைப்போல் அசுர வேகம் கொண்டதாக விளங்காமல் சிறிது குறைபடுகிறது. என்ருலும், இவரது பாட்டின் வேகமும் பல இடங்களில் மகா உச்சிதமான வேகத்தோடு இயங்கததான் செல்கிறது. உதாரணமாக கடன் வாங்கி ஏமாற்றியவனுக்கு வாரண்டு வந்த காலத்து, அவன் வாரண்டுச் சேவகனை வீட்டுக்கு அழைத்துச் சென்று அவனுக்குப் பலகார வர்க்கம் பண்டபாத்திரம் எல்லாம் வாங்கிக் கொடுப்பதாக ஏமாற்றிவிடுகிருன். அந்தக் கடன்காரனுல்தான் ஏமாற்றப்பட்டோம என்று உணர்ந்ததும், அந்த வாரண்டுச் சேவகன்.

வஞ்சிப்பான் என்று இஞ்சமாத்ரமறிந்தால் இவனை
மிஞ்சிப் பறக்கவிடுவேனே - கொஞ்சி உல(கு)

ஏத்து கொடையாளியைப்போல் என்னென்னமோ பயல்தான்
பூத்தானம் காட்டிப் புளுகினனே - தூத்தேரி !
நல்ல விருந்தாம் ! வீட்டில் நால் நாழிப்பாலுளதாம் !
அல்லவு நெய்ச்சாடி அளவில்லையாம் ! - வெல்லமிட்ட
கூட்டுக் கறியாம் ! குளக்கறியாம் ! நற்பாகைப்
போட்டுச் சமைத்த புளிக்கறியாம் ! - ஊட்டுகின்ற
பச்சடியாம்! நெய்யாம் ! பருப்பாம் ! அதிரசமாம் !
இச்சடியாம் ! வச்சடிச்சிக் கிண்ணுவனும் ! - பட்சணமாம் !

நல்திரட்டுப் பாலாம்! என் நாயகிக்குப் பட்டு உடையாம்!
உற்ற எனக்கோர் உருமாலாம் -சொற்றகொடைக்

கன்னவதாரக் கடும் புலியாம்! யாவர் தடை
சொன்னாலும் வாரிச் சொரிவானாம்!

என்றெல்லாம் திட்டுகிறான். இந்த வேகமான பேச்சில் ஆசிரியரின் பாஷை வேகமும் தென்படுகிறது.

எல்லாவற்றையும் விட ஆசிரியர் இந்நூலில் தமிழுக்கே புதியதான புரட்சிகரமான ஒரு புதுமையையும் உண்டாக்கியிருக்கிறார். சாதாரணமாக, தமிழில் கடவுளர்களை நிந்தித்துப் பாடிய பாடல்களெல்லாம் புலவர்களால் நிந்தாஸ்துதியாகப் பாடப் பெற்ற பாடல்கள்தான் ஆனால், இந்நூலாசிரியரோ அந்த நிந்தாஸ்துதி முறைமையை மாற்றி, சோமசுந்தரக் கடவுளை தம்மைப் பற்றியும் தம் குமாரக் கடவுள்கள், மைத்துனக் கடவுள்கள் முதலியவரைப் பற்றியும் நிந்தனையாகப் பேசுகிறார். இது உண்மையிலே ஒரு புதுமை.

இறுதியாக, வில்லியப்பபிள்ளை தமது கதாம்சத்தை எப்படிக் கையாளுகிறார் என்பதற்கு உதாரணமாக, புலவன் சரித்திரத்தைச் சுருக்கமாகப் பார்க்கலாம். கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழிபோல், ஒருவன் பொய்ப் புலமை வேடமிட்டு ஒரு வள்ளல் பெருமானை நாடி வருகிறான். காதிலே விளக்கிப் போட்ட கடுக்கன், கையிலே கில்ட் கொடுத்த மோதிரம், பிற்றலை மறைத்த தலைப்பாகை முதலிய சம்பிரமங்களோடு, ஒரு கற்றுச் சொல்லி பின்னே கைகட்டிவர நடந்து வருகிறான்.

தாரித்ர முள்ளவனைச் சம்பன குபேரன் என்றும்
பாரித்து முன் புலவோர் பாடியதைப்—பாரா

மனப்பாடம் செய்து அந்த மால் பொன்னுச்சாமி
தனிப்பாடலில் சிலது சந்தத்து—இனிப்பான

செய்யுள் பலகற்று, செறுக்கி இறுமாந்து
மெய்யணு விலாமல் மிகப் புளுகி

வள்ளலிடம் வந்து தன் பிரதாபத்தைப் பொய்யும் புனை சுருட்டுமாக அளந்து கொட்டுகிறான். மேலும் அவன் பலர்மீது தான் வசை பாடியதாகவும், அறம் பாடியதாகவும் கூறி, சிவகெங்கை மகாராஜன்,

சித்தம் மகிழ்ந்து அஞ்சாறு சீவிதக் கிராமங்கள் விட்டு
மெத்த மரியாதை தந்தான் மேன்மையாய்

என்றும் கதை அளக்கிறான். அதன்பின்வள்ளலின் பெருமையை உணர்ந்து தான் கவிபாடி வந்ததாகக் கூறுகிறான். இதைக் கண்ட அந்த வள்ளல் பெருமான் தம் மனசுக் குள்ளாக வேறு விதமான நினைப்போடிருந்தாலும்,

நாடி வந்தீர் இப்போழ்து நல்ல சமய மில்லை
ஆடி கழித்து ஆவணி அஞ்சாம் செய்தி—ஓடி

அகத்தியமாய் வாரும் உமக்கு அச்சணமே செம்பொன்
தகட்டங்கி சால்வைகளும் தாரேன்

என்று சொல்லுகிறான். இதைக் கேட்ட விடாக் கண்டனை புலவன் காலத்தால் செய்த நன்றியின் பெருமையை யெல்லாம் எடுத்துக்கூறி, இடத்தைவிட்டு நகராமல் சாதிக்கிறான். வள்ளல் பெருமானே விடாக் கண்டனை புலவனைக்கண்டு, மனம் வருந்தி

—ஏது நம்மைச்

சும்மா விடான் புலவன்! தொந்தரவுக் கென் புரிவோம்?
நம்மாலே ஒன்றும் நடவாதே!

என்று உணர்ந்து தன் மனைவியிடம்போய் மிகவும் பயந்து நயந்து கவிராயர் வந்த செய்தியை உரைத்து "பாவாய்! உன் பேரை, நல்லாய், முந்திவைத்து என்பேரை முகனை வைத்துப்"ப் பாடி வந்திருக்கிறார் என்றெல்லாம் எடுத்துரைக்கிறான். புலவருக்கு ஏதாவது கொடுக்கா விட்டால் வசை பாடவும் கூடும் என்று சொல்கிறான். இதைக் கேட்ட இந்த மாது நல்லாள்,

'நீட்ட முடக் கறியாய்! நீகெட்ட கேட்டுக்குப்
பாட்டொன்றோ என்ன பகுமானம்?—வீட்டு

வருத்தம் அறியாத நெடுமாடே! உனக்கு
கருத்தில் அணு வுண்டோ கவலை?—பருத்ததன்றிப்

புத்தியில்லா நீ வெளியே போபோ என விரைந்து அங்கு
எத்தனையோ பேசி எயிறு அதுக்கி—நத்தியுன்பின்

போக்கற்று வந்த புலவன் எங்கே எங்கே' என்று
ஆக்ரமித்துப் பேசி அதட்டினாள்.

இதைக் கேட்ட புலவர் எங்கே அந்த நீலி வந்து விடுவாளோ, வந்தால், தன் தாபம் தீருமட்டும் தாக்குவாளே என்றபயத்தால்

சந்தேகமாய்ப் புலவர் தானோட்டம் கொள்வதற்கு
முந்தி உஷாராய் முழித்திருந்தார்.

ஆனால் அப்போதே ஓட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவில்லை. வள்ளல் பிரான் தம்மனைவியை இருந்து முகந்திருத்தி நன்னயமாய்ப் பேசி ஒருமட்டுக்கும் வழிக்குக் கொண்டு வருகிறான். அதைக் கேட்டு அந்தத் தருமலட்சுமி,

...இவன் சொற்கு
இணங்கி, உளம் சற்றே இளகிப்—பிணங்குதலாய்ச்

சாலநெடுநேரம் தனித்து, அதி விசார முற்று,
காலணா ஈந்தாள் கடுகடுப்பாய் !

இந்தக் காலணாத் தொகையை நற்சம்பத்து என்று கருதி, வள்ளல், புலவனிடம் வந்து

கைத்தலத்தைப் பற்றி உள்ளங்கையில் வைத்துத் தன் கையால்
பொத்தி இனிதாகப் புகலுவான்.

தினைத்துணை நன்றியானாலும் பனைத்துணையாகக்கொள்ளவேண்டும் என்று கூற, புலவன் அந்த சன்மானத்தைக் கண்ணுற்று முதலில் கையாண்டியாக, "இருந்திருந்து இந்தப் பெரிய தானத்தை நீர் செய்யலாமா?" என்று ஆரம்பிக்கிறான்.

—போங்காணும்!

கிட்டிபடப் போகுது காண்; சேலையினால் மூடியதைத்
திட்டிசுற்றி ஆங்கே செலுத்திவிடும்—கட்டி எம்மூர்

செல்லும் வழிமார்க்கம் திருடர் பயமுண்டு கண்டீர்
நல்ல துணைகூட்டி நமை அனுப்பும்

என்றெல்லாம் கிண்டலாய்ப் பேசி விட்டு, பின்னால் கோபம் மூண்டு, தன் கற்றுச் சொல்லியைப் பார்த்து,

வசைபாடுவோம் பயலே ! வாடா கொண்டாடா !
இசையும் எழுத்தாணி எடடா ! - பசையற்ற

மூடனுட பேரை முதல் எழுதடா! முதலில்
கீடென்ற எழுத்தைக் கிறுக்கடா !

என்றெல்லாம் ஆரவாரிக்கிறான். இதைக் கண்ட வீட்டுக்காரனுக்கும் கோபம் மூண்டு விடுகிறது. உடனே அவனும் புலவனைப் பார்த்து "உன் வசை என்னை என்னடா பண்ணி விடும்?" என்றுபேசி,

பல்லைப் பிளந்து கவிபாடியிசைத்தாலும் இனிச்
சல்லிக் காசொன்றும் தரமாட்டேன்

... ... ... ... —ஆமா நீ

கொண்டிடும் அவா அடங்க கோத்த தடிக்கம்பு 'ப்ர
சண்டு'செய்வேன் செய்வேன் தடையில்லை - கண்டாய் இத்

தக்க மரியாதையோடு தப்புவதே மெத்த நலம்
கெக்கலித்து நின்றால் கெடுதி வரும்!

என்றெல்லாம் எதிர்த்து நிற்கிறான். புலவன் இதைக் கேட்டு, அங்கிருந்து நகராமல் இருப்பதைக் கண்டு அவனுக்குக் கோபம் மூண்டெழுகிறது. உடனே,

மோதுபுலிபோல் சினந்து முன்னே நெருங்கிவர,
பீதியுடனே புலவர் பின்வாங்க, - வாதொடு அவன்

தாவிப்பிடிக்க, இவன் தப்பித்து லாகு கொண்டு,
கூவி இருகால் கதியைக் கூடினனே.

புலவன் ஓடிவிட்டான். ஆனால், அந்தக் கற்றுச் சொல்லி! அவன் அப்பாவி! அதைச் சொல்லும்போது, நூலாசிரியர்

எசமானாய் வந்தவர்பாடு இவ்விதம் ஆனாலோ
சிசுவெனும் கற்றுச்சொல்லி என்செய்வான்? - விசயன்விடு

அஸ்திரமும் பின்னிட்டு அடங்க, அவன் கால் கதியை
விஸ்தரித்துச் சொல்லவும் தான் வேண்டுமோ?

என்று கூறிக் கதையை முடிக்கிறார்.

இதுபோன்று ஒவ்வொரு கதாம்சத்திலும் வில்லியப்ப பிள்ளை பரிவுணர்ச்சி கலந்த ஹாஸ்ய ரசத்தை அள்ளி வழங்கியிருக்கிறார். தமிழில் வெளிவந்த எந்த நூலும், இத்தனை தூரம் ஹாஸ்ய ரசம் பொருந்தியதாக, பஞ்சலட்சணத்துக்கு முன்னும் அமையவில்லை; பின்னும் அமையவில்லை. அவ்வளவு புகழுக்கு முற்றிலும் தகுதியும் பெருமையும் வாய்ந்த நூல் பஞ்சலட்சணம். ஆனால், இந்த அருமையான நூல் சுமார் நூறு வருட காலத்துக்குள்ளாகவே, வெளிவந்திருந்தும் பல இலக்கிய ரசிகர்களின் கவனத்துக்கோ, கண்ணுக்கோ கூடப் படாமல் புறக்கணிக்கப்பட்டது நமது துரதிருஷ்டமேயாகும். இந்த அருமையான நூலை யாவரும் படித்து அனுபவிக்கத் தக்கவாறு, தக்க குறிப்புகளுடன், அழகிய முறையில் வெளியிட வேண்டியது தமிழ் நாட்டுக்கு இன்றியமையாத கடமை.

---

* Present (பிரசண்ட்)—வெகுமானம்; இசைச்சொல்.

---

# வல்ல நாட்டுக் கள்வன்

ப. ஸ்ரீனிவாசன்

"ஏலே, ஆருலே அவன் மரத்திலே!"

பதில் இல்லை. மரத்திலே இருந்தவனுக்குக் காது கேட்க வில்லைபோலும்.

"ஏ..., ஆருலே அவன்?" என்று ஒரு வசவையும் சேர்த்து பண்ணையார் சிவசங்கரன் பிள்ளை ஆவேசத்துடன் கத்தினர்.

வயல்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு, பசியோடு தாம்பிர பரணிக்குக் குளிக்கப் புறப்பட்டார். வழியில் தமது தென்னந் தோப்பில் சல சலப்புக் கேட்டு இவ்வாறு கூச்சலிட்டுக் கொண்டிருந்தார். மரத்தின் கொண்டையில் சாய வேட்டிக் காரன் ஒருவன் இருப்பது தெரிந்தது. ஆனல் ஆசாமி யார் என்று அடையாளம் தெரியவில்லை.

"நானும் கேட்டுக்கிட்டே யிருக்கேன்! அந்தப் பயலைப் பாறேன்!" என்று சொல்லிக் கீழே கிடந்த ஒரு கூழாங் கல்

ளைப் பொறுக்கி அவர் உயரே விட்டெறிந்தார். அது மட்டையில் பட்டு மண்ணுக்குத் திரும்பியது. இளநீரைக் குடித்து விட்டு ஒரு தென்னங் கூந்தலை மரத்திலே இருந்தவன் கீழே போட்டான்.

பிறகு ஓலைக்குள்ளிருந்து அந்த ஆள் வெளியே தலை நீட்டினான். வெய்யிலை மறைக்க கண்மேல் குடை பிடித்துப் பண்ணையார் கூர்ந்து பார்த்தார்.

கோழிவால் அரிவாளை முதுகுப்புறம் அரையில் சொருகி, இடது கையில் தேங்காய்க் குலையுடனும் வலது கையால் மரத்தை அணைத்துக்கொண்டும் அந்த ஆள் சாவதானமாகக் கீழே இறங்கினான்.

“ஓ, நீங்கதானா!” என்று பண்ணையார் சொல்லிக் கொண்டார். ஆசாமி மருதையாதான். “அடே மூதி! ஆக்கங்கெட்ட அருள் மாறின மூதி! இந்த முறப்பநாட்டு ஊரிலே உன்னைத் தவிர வேறு ஆரு செய்வான், இந்தத் தொழில்!”

சில்லறைக் களவுகளில் மருதையா பேர் போனவன்தான் தேங்காய், மாங்காய், வைக்கோல், ஆட்டுக்கிடாய் முதலியவற்றைத் திருடுவது அவனது சகஜமான வழக்கந்தான்.

மருதையா கீழே இறங்கியதும், தேங்காய்க் குலையைப் போட்டு விட்டு, முண்டாசை அவிழ்த்து அரையில் கட்டிக் கொண்டு மரத்தோடு மரமாய் நின்றான். மரத்தில்பாதி உயரத்துக்கு, நாலு மரத்தின் கனத்துடன், கிருதா மீசையும் செம்பட்டைத் தலையுமாக அவன் நின்றான்.

“ஏலே, களவாணிப்பயலே! சுடலை மாடன் ஆட்டமா நிக்கியே...’ என்று சிவசங்கரன்பிள்ளை ஆரம்பித்தார்.

“எஸமான்! தெரியாத்தனமாய்ச் செஞ்சிட்டேன். அடியேன், நாய்க்குட்டியைப் பொறுத்துக்கிடணும்,” என்று தனக்கு இயற்கையற்ற பணிவுடன் மருதையா சொன்னான்.

“ஏலே கருக்கு மட்டையாலே உன் முதுகுத் தொலியை உரிச்சாங்களே! இன்னும் சொரணை வரல்லையா? ஆட்டைக் கடிச்சு மாட்டைக்கடிச்சு நம்மையே பதம்பார்க்க வந்திட்டையே! அட மூதி, எமிலே இந்த எச்சிப் பொளைப்பு?”

கருக்குமட்டைப் பேச்சைக் கேட்டவுடனேயே மருதையா இலைகுலையாய் நடுங்கினான். காவல்கார கருப்பையாத் தேவர்

முன்பு ரத்தவிளாறுகப் பல முறை அடித்ததை நினைத்துப் பார்த்ததும் அவன் உடல் துடித்தது.

"எஸமான்! இந்த ஒரு தடவையும்!... ஏதோ தண்ணித்தாகமா இருந்திச்சு, நாலுகாய் பிடுங்கினேன் எ ஸ ம ா ன்! இனிமே இந்தத் திசைக்கே வரமாட்டேன்! எஸமான், இந்த ஒரு தடவையும்!" என்றுகூறி மருதையா கையெடுத்துக் கும்பிட்டான்.

"என்னலே ஒரு தடவையும்? இனி உன்னை அடிச்சுப் பிரயோசனம் இல்லே. ஊருக்குள்ளே போய், கருப்பையாவுக்கு ஆளனுப்பி, உன் குதியங்கால் நரம்பை உருவினால் தான் நீ அடங்குவே" என்று பண்ணையார் சாவதானமாய்ச் சொன்னார்

ஆற்று மணலில் யாரோ மூன்றுபேர் வருவதை மருதையா பார்த்தான். பண்ணையார் மன்னித்தாலும் மன்னிக்காவிட்டாலும், அப்போதைக்கு எப்படியாவது தப்பி ஓடினால் போதும் என்று அவனுக்குத் தோன்றியது.

பண்ணையார் அடுக்கிக் கொண்டே போனார். "உனக்கு எங்கலே சொரணை இருக்கப் போவுது! ஒருவனுக்கும் ஒருத்திக்கும் பெறந்திருந்தா இல்ல..."

"ஹாங்!" ஓடுவதற்குக் காலெடுத்து வைத்த மருதையா சட்டென்று நின்று நிமிர்ந்தான். அவன் கண்களில் ரத்தம் சொட்டியது. மீசை துடித்தது.

"என்ன சொன்னாய்! கொண்டையங்கோட்டை மறவனையா இந்த வார்த்தை கேட்டாய்?" அரிவாளை உருவினான். ஒரே வீச்சு! அம்மன் கோவில் கொடையில் வெட்டப்பட்ட கிடாயைப்போலத் தலை வேறு உடல் வேறாகப் பண்ணையார் விழுந்தார்

"ஹூம். பண்ணையாராமில்ல: இவரு பாவட்டாதானே பறக்கு!" சிவசங்கரன் பிள்ளையின் தலையைத் தூக்கி தோப்புக் கிணற்றுக்குள் வீசிவிட்டு மருதையா கிழக்கு நோக்கி விர்ரென்று நடந்தான். மருத மரங்களின் கிளையைத் தொட்டுக் கொண்டு கரை நிறைந்து ஓடிய தாம்பிரபரணியில் இறங்கி, அக்கரைக்குப் போய், நாணல் புதர்களில் புகுந்து அவன் மறைந்து விட்டான்.

## 2

முறப்ப நாட்டுப் பண்ணையார் கொலையுண்ட செய்தி அந்த வட்டாரத்தையே ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது.

அன்று மாலை ஸ்ரீவைகுண்டத்திலிருந்து சர்க்கிள் சுந்தரேச முதலியாரும், சப்இன்ஸ்பெக்டர் இப்ராஹிமும் ஒரு லாரி நிறைய கான்ஸ்டபிள்களுடன் ஸ்தலத்துக்கு விரைந்து வந்தனர்.

மருதையாவின் அண்ணன் மாடசாமி, தம்பதிகள், மாமன் மார் முதலிய பந்துக்களை எல்லாம் போலீஸார் கண் மூக்குத் தெரியாமல் அடித்தனர். மருதையாவின் தாய் மாரியாத்தா மனைவி செல்லத்தாயி முதலிய பெண்களைக்கூட லாத்திக்கம்பால் சர்க்கிள் அடித்தார். எல்லோரையும் சப்இன்ஸ்பெக்டர் வாயில் வந்தபடி ஏசினர்.

பாடுபட்டு விவசாயம் செய்து மானமாய் வயிறு வளர்த்து வந்த அந்தக் குடும்பம், மருதையா ஒருவனின் செய்கையால் மானங் குலைந்து நின்றது. அப்போது மருதையா அங்கிருந்தால் மாடசாமி அவனைக் குத்திக் கொன்றிருப்பான்.

போலீஸார் ஊரை வளைத்துச் சோதனை போட்டனர். மருதையாவை எங்கேயும் காணவில்லை. மருதையாவின் தூர பந்துக்கள் வாழும் மருதூர், சென்னெல் பட்டி, மணக்கரை, ஆதிச்ச நல்லூர், வேளூர் முதலிய இடங்களுக்கும் சோதனை போட சில கான்ஸ்டபிள்கள் அனுப்பப்பட்டனர்.

மருதையா மீது கொலை வழக்கைப் பதிவு செய்து விட்டுப் போலீஸார் முறப்ப நாட்டிலிருந்து புறப்பட்டனர். வெறுங் கையுடன் போகவேண்டாம் என்று மாடசாமியையும் அவர்கள் லாரியில் ஏற்றிச் சென்றனர்.

## 3

தாலுகா முழுவதிலும் மருதையாவைப் போலீஸார் தேடிக்கொண்டிருந்தனர். ஆனால் அவனோ வல்ல நாட்டு மலையில் தஞ்சம் புகுந்து விட்டான்.

முறப்ப நாட்டிலிருந்து சுமார் மூன்று மைலுக்கு அப்பால், தாம்பிரபரணிக்குக் கிழக்கே வல்ல நாடு இருக்கிறது. வல்ல நாட்டு ஊரிலிருந்து மலைக்கு இன்னொருமூன்றுமைல் இருக்கும்.

அந்த மலையை இரண்டு பாகமாகப் பிளந்துகொண்டு, தூத்துக்குடி—திருநெல்வேலி ரஸ்தா செல்லுகிறது.

கொலைஞர்கள், திருடர்கள், பட்டாளத்திற்கு டிமிக்கி கொடுத்தவர்கள் முதலியோர் வழக்கமாக ஒளிந்துகொள்ளும் இடம் அந்த மலைதான். உடை மாமும், மாமபோன்ற இலந்தைச் செடிகளும், சாதி தெரியாத பலவித காட்டு மரங்களும், முட்புதர்களும் அடர்ந்த அந்தமலையில் புகுந்து, குகையில் உள்ள கேடிகளைப் பிடிப்பது இயலாத காரியம். யாரையும் போலீஸார் பிடித்ததில்லை. திருடர்கள் தாங்களாக ஊருக்குள் இறங்கி வந்து அகப்பட்டால்தான் உண்டு.

அந்த மலையில் முயல், நரி, மான், ஓநாய்கள் முதலிய சில்லறை மிருகங்கள்தான் ஏராளம். மலையின் உட்புறத்தே புலி சிங்கம் இருப்பதாக ஊரில் பேசுவார்களே தவிர யாரும் கண்ணால் கண்டதில்லை.

மருதையா மலைக்குப் போய்ச் சேர்ந்தபோது சூரியன் மலைவாயிலில் விழுந்து விட்டான்.

இறைக்க இறைக்க ஓடிவந்த மருதையாவை நரிகள் ஊளையிட்டு வரவேற்றன. முள்ளிலும் புதரிலும் விழுந்தடித்து ஓடி, மலைமீது வெகு உயரத்துக்கு மருதையா ஏறிவிட்டான். வெளி உலகத்திலிருந்து முற்றிலும் மறைவாக இருந்த குகை ஒன்றில் புகுந்து, சிறிது நேரம் கழிந்த பிறகுதான் அவனுக்குச் சுவாசம் நிதானமாக வந்தது.

ஆனைப் பலமுள்ள அவன் இதுவரை உடலை வளைத்து வேலை செய்ததே இல்லை. சிவன் கோயில் மண்டபத்தில் சீட்டு விளையாடுவதும் ஊரை மேய்வதும்தான் அவனது அன்றாடவேலை. எத்தனையோ அப்பாவிகளை அடித்து நொறுக்கி யிருக்கிறான்; என்றாலும் இதற்கு முன் கொலையே செய்ததில்லை. அதனால் அவன் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது.

" அவரு அந்த வார்த்தையை ஏன் கேட்டார்?...எனக்கும் இந்த வெறி வேண்டாம்...! ஆனால் எவன்தான் அந்தச் சொல்லைப் பொறுப்பான்?" என்றெல்லாம் அவன் தனக்குள் தர்க்கித்துக் கொண்டான்.

தன்னுடைய செய்கையின் விளைவுகள் பற்றி அவன் நீண்ட நேரம் யோசித்தான். ஒரு கட்டுப் பீடியை ஊதித்தள்ளிய பிறகும் விளைத்ததையே நினைந்து நினைத்து அவன் சிந்தனை செக்கு

மாடு போல் சுற்றி வந்தது. ஆனால் இனிமேல் ஒவ்வொரு விநாடியும் உயிருக்குக் கண்டம்தான் என்ற எண்ணம் மாத்திரம் அவன் உள்ளத்தில் பதிந்துவிட்டது.

வெகு நேரத்திற்குப் பிறகு அவன் குகைக்கு வெளியே வந்து பார்த்தான். விடிவதற்கு நாலு சாமம்தான் இருந்தது. நரிகள் ஓயாமல் ஊளையிட்டுக்கொண்டிருந்தன.

''ஹூம்! ஈசன் விட்டவழி ஆகட்டும்.'' அவன் குகைக்குள் மீண்டும் புகுந்தான். குகை வாசலில் இரு சிறு பாறைகளை ஒன்றன் மீது ஒன்றாய் வைத்துவிட்டு, அரிவாளை விலாப்பக்கத்தில் போட்டுக்கொண்டு அவன் படுத்தான்.

விடிந்து வெகுநேரம் கழிந்த பிறகுதான் அவனுக்குக் கண் விழித்தது. முதல் நாள் வெறியாட்டத்தில் மரத்துப் போயிருந்த பசி, அவனது குகைபோன்ற வயிற்றில் சிங்கம் போல கிளர்ந்து எழுந்தது.

பாறையைப் புரட்டித் தள்ளி விட்டு அவன் வெளியே வந்தான். சுள்ளென்று வெய்யில் உறைத்தது. ''அடேயப்பா! உச்சிக்காலம் ஆயிருச்சே! சே! என்ன உறக்கம் மிருவம் மாதிரி!''

தென்னந் தோப்புச் சம்பவம் நினைவுக்கு வந்ததும் அவன் ஒரு புதரில் போய் மறைந்துகொண்டான். ஆனால் பசி வெளியே உந்தித் தள்ளியது.

இலந்தை மரங்களில் பழமே இல்லை; காய்கள்தான் அங்கொன்று இங்கொன்றாகக் காணப்பட்டன. நாலைந்து காய்களைப் பிடுங்கி வாயில் குலுக்கிக்கொண்டு அவன் குதப்பினான். ''சீ என்ன புளிப்பு! காடிக் கள்ளு மாதிரி!'' துப்பி விட்டான்.

''யாராவது மாடு மேய்க்க வந்திருக்காஹ பார்ப்போம்'' என்று நினைத்து, அவன் புதர்களின் பின்னால் பதுங்கிப் பதுங்கி கீழே இறங்கினான்.

மலையடிவாரத்தில் இருந்த குட்டத்தில் தண்ணீர் குடித்துவிட்டு காட்டு மரங்களின் நிழலில் செம்மறி ஆடுகள் கிடைகிடையாய்ப் படுத்திருந்தன. ஒரு மரத்தில் தூக்குச் சட்டியொன்று தொங்கியது. ஆட்டுக்காரப் பையன் சற்றுத் தொலைவில் விறகு ஒடித்துக்கொண்டிருந்தான்.

மருதையா மெதுவாகத் தூக்குச் சட்டியை அவிழ்த்துக்கொண்டு குட்டத்தை நோக்கி ஓடினான். திறந்து பார்த்தால்

சட்டி வெறுஞ்சட்டியாக இருந்தது. "அதுக்குள்ளே திண்ணுட்டானு! அட பாவிப்பயலே!" தூக்குச் சட்டியில் தண்ணீர் நிரப்பிக்கொண்டு ஆட்டு மந்தைக்கு அவன் திரும்பினுன்.

புதரின் பின் சிறிது நேரம் பம்மிக் கிடந்தபின் அவன் திடீரெனக் கழுகுபோல் பாய்ந்து, ஒரு ஆட்டைத் தூக்கிக்கொண்டு குகையை நோக்கி ஓடினுன்.

அரிவாளால் அந்த ஆட்டைத் துண்டு துண்டாக வெட்டி, சருகு சத்தையைக் கொளுத்தி அதில் மாமிசத்தை வாட்டினுன். ஒவ்வொரு துண்டமாக முழுக் கிடாயையும் தின்றபிறகுதான் அவன் வயிற்றில் அமைதி நிலவியது.

மறுநாளும் அவன் ஆட்டு மந்தையைத் தேடிக்கொண்டு போனுன். ஆனல் காத வழி தூரத்திற்கு ஒரு ஆட்டுக்குட்டியைக்கூட காணும். "கிடா களவு போனது பய மவனுக்கு தெரிஞ்சுடுத்துப் போலே" என்று அவன் நினைத்தான்.

பகலெல்லாம் குகைக்குள் பசியோடு படுத்துக் கிடந்துவிட்டு, அவன் நள்ளிரவுக்குப் பின் புறப்பட்டு, காட்டுப் பாதையாய் வல்ல நாட்டை நோக்கி நடந்தான்.

## 4

**வல்லநாட்டுக்கு** மருதையா போய்ச் சேர்ந்தபோது இரவு மணி மூன்று அல்லது மூன்றரை இருக்கும்.

ஊரின் தென் கோடியில் ரோட்டின்மேல் இருந்த பரமசிவ ஓதுவாரின் பலகாரக் கடைக்கு அவன் நேராகச் சென்றுன். ஓதுவாரின் வீடும் அதுதான்.

கதவு அடைத்திருந்தது. சுவரில் இருந்த சிறு ஒற்றை ஜன்னல் வழியாக மருதையா எட்டிப் பார்த்தான். உள்ளே அகல்விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. அடுப்பின் முன் உட்கார்ந்து ஓதுவார் இட்டிலி வார்த்துக்கொண்டிருந்தார். பக்கத்திலிருந்த ஆட்டுரலில் ஒரு இளம் பெண், ஓதுவார் மகள் காந்திமதி, வடைக்கு அரைத்துக்கொண்டிருந்தாள்.

மருதையா மெதுவாகக் கதவைத் தட்டினுன். "யாரது? இட்டிலி ஆயிடுச்சு, இன்னும் சட்டினி அரைக்கலே," என்று சொல்லிக்கொண்டே ஓதுவார் எழுந்துவந்து கதவைத் திறந்தார்.

மருதையா சட்டென்று உள்ளே பாய்ந்து கதவைத் தாளிட்டான். காந்திமதி "ஐயோ..." என்று கிரீச்சிட்டாள்.

"ஹூம்! மூச்!" என்று மருதையா விழிகளை உருட்டி உறுமினான். காந்திமதி உரலாய் உட்கார்ந்து போனாள்.

"வேய், ஓதுவாரே! ஏன் வேய் பயப்படுதீரு? உம்மை நான் என்ன செய்யப் போறேன்!" என்று மருதையா அபயம் கொடுத்தான்.

"பயமா? எனக்கா? நம்ப தம்பி கிட்டே என்ன பயம்! உட்காரு தம்பி! ஏது அகாலத்திலே?" என்று ஓதுவார் சம்பிரதாயமாகப் பேசினார்.

"அது ஸர்தான். இப்போ ஏதாவது தின்னக் கொடும்."

வார்த்திருந்த முதலேட்டு இட்டிலி ஆறையும் அவன் முன் ஓதுவார் கொண்டு வைத்து, மிளகாய்ப் பொடி, எண்ணெயும் போட்டார்.

ஒரு வாய்க்கு ஒரு இட்டிலியாக விழுங்கி, ஒரு செம்புத் தண்ணீரையும் ஒரு மடக்காகக் குடித்துவிட்டு மருதையா பயங்கரமாக ஏப்பம் விட்டான். "ஓதுவாரே உம்மை ஒரு நாளும் மறக்கமாட்டேன்!" என்று அவன் கூறினான்.

"அதுக்கென்ன தம்பி! தம்பிக்கு எண்ணைக்காவது பலகாரம் இல்லையின்னுருக்கேனா?" என்றார் ஓதுவார். வல்லநாட்டுக்கு வந்தபோதெல்லாம் அவர் கடையில் சாப்பிட்டுவிட்டு, காசுக்கு மலைப்பக்கம் கையைக் காட்டிவிட்டுப் போவது மருதையாவின் வழக்கம்தான்.

"வே, ஓதுவாரே! கொலை விசயமாய் ஏதாவது பேச்சு நடமாடுதோ?"

"கொலை" என்றவுடனேயே, கழுத்தில் கிடந்த உருத்திராட்சம் ஓதுவாரின் குரல்வளையை இறுக்கியது.

"தம்பி, போலீஸ்காரன்கள் வந்து உங்க வீட்டிலே இருந்த எல்லாரையும் அடிச்சாங்களாம். உங்க தாயாரைக்கூடச் சர்க்கிள் தொட்டு அடிச்சாராம். மாடசாமியைச் செயிலுக்குக் கொண்டு போயிட்டாங்க. உன்னைப் புடிக்க முக்கு முக்காய் ஆள் போயிருக்காம். ஊரெல்லாம் உன் பேச்சுத்தான் தம்பி! விளக்கு வைக்கு முன்னாலேயே ஊர் அடங்கிப் போகுது" என்று ஓதுவார் தமக்குத் தெரிந்ததை யெல்லாம் மருதையாவிடம் ஒளிக்காமல் ஒப்புவித்தார்.

"ஹூம்! ஆத்தாளைத் தொட்டானு, அந்தப் பய! சரி இருக்கட்டும்."

"தம்பி, பதட்டத்திலே ஏதாவது செஞ்சு அகப்பட்டுக்கிடாதே," என்ருர் ஓதுவார்.

மருதையா சில நிமிஷங்கள் மௌனமாய் இருந்தான். பிறகு, "ஓதுவாரே! நீர் ஒரு உபகாரம் செய்யணும்! தினசரி அந்தி மயங்கும் வேளையில் எனக்குச் சோறு அனுப்புவீரா? இன்னும் இரண்டு நாளில் உமக்கு இருநூறு ரூபாய் கொண்டாந்து தரேன்," என்று அவன் சொன்னுன்.

ரூபாய் இல்லாவிட்டாலும், மிரட்டலுக்குப் பயந்தே ஓதுவார் ஒப்புக் கொண்டிருக்கக் கூடியவர்தான். "சரி தம்பி! எங்கே அனுப்ப?" என்று அவர் கேட்டார்.

"ரோட்டுக்கு தெற்கே, காட்டு வழியாய் மலைக்கு ஒரு ஒத்தையடிப்பாதை போவுது இல்லே, அந்தப் பாதை முடிகிற இடத்திலே ஒரு கருவ மரம் இருக்கு. அந்தக் கருவ மரத்துக்கு வடக்கே இருக்கிற பெரிய பொதரிலே சோற்றுப் பொட்டணத்தைக் கொண்டு வந்து வச்சிரும். என்ன செய்வீரா?"

"ஆகட்டும் தம்பி."

"ரெண்டாம் பேருக்குத் தெரியவேண்டாம். மூச்சு விட்டீரின்னு உம்ம வம்சத்தையே பூண்டோடே தொடச்சிடுவேன்............ரெண்டு வேளைக்குக் காணும்படியாய் நெறையவே கொண்டாரும்."

"கட்டாயம் கொண்டாரேன் தம்பி. உன்னைக் காட்டிக் கொடுக்கவே மாட்டேன். கைலாச நாதர் மேலே ஆணை!" என்று ஓதுவார் சத்தியம் செய்தார்.

"சரி, நான் வரேன்!.........என் தங்கச்சி, இப்படிப் பயப்படுதே? உங்களுக்கு நான் ஒரு கெடுதியும் பண்ணமாட்டேன். உண்ட வீட்டிலே கெண்டி தூக்கற பய நானில்லை. உங்க பாட்டிலே பயப்படாம இருங்க............சரி நான் வரேன்," என்று சொல்லிவிட்டு மருதையா வெளியே சென்ருன்.

ஓதுவார் கடைக்கும் தெற்கே இருந்த குறக்குடியில் அவன் புகுந்து, பழைய கேடி வன்னியனைப் போய்ப் பார்த்தான். கிடைப்பதில் பங்கு தருவதாகச் சொல்லி வன்னியனிடம் கல் வெடிகளையும் ஒரு துப்பாக்கியையும் வாங்கிக் கொண்டு, மலைக்குத் திரும்பினுன். அந்தத் துப்பாக்கியில் தோட்டா இல்லை.

# 5

மறுநாள் மாலை ஆறுமணி இருக்கும். கருக்கல் வேளை. தூத்துக்குடியிலிருந்து திருநெல்வேலிக்குப் போகும் பஸ், 'கா புரா' என்ற சப்தத்துடன் மலை யேற்றத்தில் ஏறிக்கொண்டிருந்தது. மரத்தின் ஓரமாக மருதையா நின்றுகொண்டிருந்தான்.

பஸ் அருகில் வந்ததும், அவன் ரஸ்தா அருகில் போய் நின்று, மேல்துண்டை அவிழ்த்துக் கொடிபோல ஆட்டிக் கொண்டு, "ஐயா, ஒரு ஆள் இடமிருக்கா?" என்று கத்தினான்.

டிரைவர் பிரேக்கைப் போட்டுக்கொண்டே, "இது யாரப்பா காட்டான்! ரோட்டை மறிக்கயே, மேலே ஏறினால் என்னவாகும்? சரி ஏறித் தொலை" என்றான்.

'டபார்' என்று வெடிச்சத்தம் கிளம்பியது. மருதையாவின் கல் வெடிதான். பஸ்ஸில் இருந்தவர்களுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

வெடியைப் போட்ட க்ஷணமே வெற்றுத் துப்பாக்கியை டிரைவரை நோக்கி நீட்டி, "டேய் இறங்கு கீழே!" என்று பல்லைக் கடித்து கொண்டு மருதையா சொன்னான். ஒரு வினாடி தயங்கிவிட்டு டிரைவர் பூனைபோலக் கீழே இறங்கினான்.

"எல்லாரையும் கீழே இறக்கு!" பஸ்ஸில் இருந்த ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் இறங்கினர்.

"நான்தான் மருதையா......எல்லாரும் பஸ்ஸுக்குப் பின்னைக் காட்டி வரிசையாய் நில்லுங்க. விலகி விலகி நில்லு. கைரெண்டையும். மேலே தூக்கு! திரும்பிப் பார்த்தால் சுட்டு மலத்திப்போடுவேன். உங்களைச் சுத்தி என் 'காங்கி' நிக்கிது. சாக்கிரதை!"

பிரயாணிகளின் வரிசைமீது ஒரு கண்ணை வைத்துக் கொண்டே பஸ்ஸில் ஏறி மருதையா துழாவினான். மூட்டை முடிச்சுகளைக் குதறி எறிந்துவிட்டு, நாலு டிரங்குகளுடன் அவன் கீழே இறங்கினான்.

"டிரங்குப் பெட்டிச் சாவி வரட்டும்!"

திரும்பிப் பார்க்காமலே நாலுபேர் சாவிகளை எடுத்து வீசி விட்டு மறுபடியும் கைகளைத் தூக்கினர்.

இரண்டு பெட்டிகளில் மணிப்பர்ஸுகளும், ஒன்றில் நகைகளும் இருந்தன. இன்னொன்றில் துணிதான் இருந்தது.

வரிசையில் நின்றவர்களை ஒவ்வொருவராக மருதையா கூப்பிட்டான். எல்லோரையும் ஒவ்வொருவராகச் 'சட், சட்' டென்று சோதனை போட்டு பஸ்ஸில் ஏறச் சொன்னான். மணிப்பர்ஸுகளும் உதிரி நாணயங்களும் ஒரு சிறு குவியலாகச் சேர்ந்துவிட்டன. பெண்கள் தாங்களாகவே நகைகளை எல்லாம், திருகாணிகூட விடாமல் கழற்றிக் கொடுத்துவிட்டனர் முறப்பநாடு காவல்காரக் கருப்பையாத் தேவரின் மனைவிமாத்திரம் நகையைக் கழற்றவில்லை. அவளை ஒன்றும் செய்யாமல் பஸ்ஸில் மரியாதையாக மருதையா ஏற்றிவிட்டான். ஒரு நொடியில் எல்லோரும் ஏறிவிட்டனர். காரியம் முடிந்துவிட்டது. "சரி ரைட்! ஏ, டிரைவர் திரும்பிப் பார்க்காமல் வண்டியை விடு. ரைட்!" என்று மருதையா உத்தரவிட்டான். பஸ் கிளம்பிச் சென்றது.

பணத்தையும் நகைகளையும் மேல் துண்டில் கட்டிக் கொண்டு, மலைக் காட்டிற்குள் மருதையா சிட்டாய்ப் பறந்துவிட்டான்.

சம்பவம் நடந்த இடத்துக்குப் போலீஸார் விரைந்துவந்து, அங்குமிங்கும் தீவிரமாய்த் தேடிப் பார்த்துவிட்டு, சம்பவம் நடந்த ஸ்தலத்திலேயே விடியவிடிய காத்து நின்றது மருதையாவுக்குத் தெரியாது. மருதையா போன இடமும் அவர்களுக்குத் தெரியவில்லை.

அன்றைய சம்பவத்திற்குப் பிறகு, மருதையாவைப் பிடித்துக் கொடுப்போருக்கு ஐநூறு ரூபாய் சன்மானம் அளிப்பதாக ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு அறிவித்தார். அவனை முட்டுக்குக் கீழ் சுடுவதற்குப் போலீஸாருக்கு அனுமதி அளிக்கப்பட்டது. மலைப் பகுதியில் ரஸ்தாவில் ஆயுதபாணிகளான போலீஸார் இரவு பகலாய் ரோந்து சுற்றினர்.

பஸ் கொள்ளையில் மருதையாவுக்கு எழுநூறு ரூபாயும் ஏராளமான நகைகளும் கிடைத்தன. நகைகளைக் குகையின் ஒரு மூலையில் அவன் போட்டுவைத்தான்.

மறுநாள் மாலை புதரடியில் ஓதுவாரை அவன் சந்தித்து, இருநூறு ரூபாய் கொடுத்தான். "இதை அளிச்சு தங்கச்சிக்கு ஏதாவது வேறு நகைசெய்து போடும்!" என்று சொல்லி மூன்றுவடம் தங்கச்சங்கிலி ஒன்றையும் கொடுத்தான். இன்னமும் நகை, பணம் தருவதாக அவன் வாக்களித்தான்.

அன்றாடங் காய்ச்சியாக வாழ்ந்து வந்த பரமசிவ ஓதுவாருக்கு இது குபேர சம்பத்தாகத் தோன்றியது. மருதையாவின் தயவு நீடித்திருந்தால், தாயில்லாப் பெண் காந்திமதியை நல்ல இடத்தில் கட்டிக்கொடுத்து, தாமும் செயலாக வாழலாம் என்று அவர் இன்பக் கனவு கண்டார். சுசி ருசியான பல காரங்களை அவர் நாள் தவறாமல் மருதையாவுக்கு அனுப்பிவந்தார்.

வழிப்பறிச் சம்பவத்திற்கு இரண்டு நாளைக்குப் பிறகு மருதையா இன்னொரு சாகஸச் செயலைப் புரிந்தான். மலையைச் சுற்றி சர்க்கிளும் போலீஸாரும் வலம் வந்துகொண்டிருக்கையில் மருதையா காட்டுப் பாதையில் நேராக ஸ்ரீவைகுண்டத்துக்கே போய்ச் சேர்ந்தான்.

தோளில் துப்பாக்கியுடன் அவன் பட்டப் பகலில் சர்க்கிள் வீட்டில் புகுந்து, அவரது மனைவியின் காதுகளில் இருந்த வைரக் கம்மல்களைக் காதோடு அறுத்துக்கொண்டு போய்விட்டான். அதோடு, நடு பஜாரில் நடந்துசென்று, நாலு பெரிய கடைகளில் கள்ளிப் பெட்டியில் இருந்த பணத்தையெல்லாம் முந்தியில் கட்டிக்கொண்டு மறைந்துவிட்டான். இவ்வளவையும் செய்வதற்கு அவனுக்கு நாலு கல்வெடிகள்தான் செலவாயின

ஜில்லா சூப்ரெண்டும், மருதையாவைக் கண்டவுடன் சுட்டுத் தள்ளுமாறு உத்திரவிட்டார்.

## 6

**ம**ருதையாவின் பெயர் சொன்னால் திருநெல்வேலி ஜில்லா முழுவதுமே நடுநடுங்கிக்கொண்டிருந்தது. ஒவ்வொரு ஊரிலும், ஒவ்வொரு தெருவிலும், ஒவ்வொரு வீட்டிலும் மருதையாவின் நிழல் பாவியது. பெரும் பணக்காரர்கள் வீட்டுக் காவலை அதிகரித்ததுடன் ரிவால்வர் லைசென்ஸும் வாங்கிக் கொண்டனர். மருதையாவின் தீரச் செயல்கள் பற்றி ஜனங்கள் ஒன்றுக்குப் பத்தாய் கதை கதையாய்ப் பேசிக்கொண்டிருந்தனர்.

வெளி உலகம் அவனை நினைத்துப் பயந்து நடுங்கிக்கொண்டிருந்த போதிலும், ஸ்ரீ வைகுண்டம் விஜயத்திற்குப் பிறகு மருதையா மலையைவிட்டு வெளியேறவே இல்லை.

ஓதுவார் கொணர்ந்த உணவைச் சாப்பிட்டுக்கொண்டு அவன் குகையிலேயே முடங்கிக் கிடந்தான்.

"போலீஸ்காரன்கள் கண்ணி வச்சிருக்கானுங்க. இனிமே வெளியிலே தலை காட்டினால் தலை போயிரும். ஏதோ முடிஞ்ச மட்டிலும் இங்கேயே காலந்தள்ளுவோம். பெறகு எங்கேயாவது தூரா தொலைக்கு ஓடிரலாம். இடையிலே யாராவது பிடிக்க வந்தால் அவனையும் கொன்னு நானும் சாக வேண்டியது தான்" என்று அவன் திட்டம் போட்டிருந்தான்.

ஒவ்வொருநாளும் அவன் உடம்பு மெலியலாயிற்று. தாடி வளர்ந்து மீசையை அமுக்கிவிட்டது. மலையில் மிருகங்களோடு மிருகமாய் அவன் வாழ்ந்துவந்தான்.

ஐந்து மாத காலமாக ஒரு நாள்கூடத் தவறாமல் ஓதுவார் உணவு கொண்டுவந்து புதராடியில் வைத்தார். அவரை ஓரிரண்டு நாள்தான் மருதையா நேரில் சந்தித்து ஊர் நடப்புகளை விசாரித்தான். சோற்றைத் தின்றுவிட்டு, பாத்திரத்தை திருப்பிக் கொண்டுபோய் புதரடியில் வைக்கையில், அதில் சில நகைத் துண்டுகளையும் அப்போதைக்கப்போது அவன் போட்டு வைத்தான். இதனால் ஓதுவாரின் விஸ்வாசம் வளர்ந்து வந்தது.

## 7

ஒவ்வொருநாளும் அந்திமயங்கும் நேரத்தில் தவறாமல் வந்து கொண்டிருந்த ஓதுவார், அன்று மாத்திரம் இருட்டி வெகு நேரம் ஆனபிறகும் வந்து சேரவில்லை.

மருதையாவைக் கவலை பிடித்துக்கொண்டது. 'ஓதுவார் ஏன் வரக்காணோம்! போலீஸுக்குத் தெரிஞ்சு அவரைப் பிடிச்சிட்டாங்களோ? இல்லை, அவரே பயந்திருப்பாரோ?" என்றெல்லாம் அவன் நினைத்தான். மலைச்சரிவில் ஒரு புதரின் பின்னிருந்து, ஒற்றையடிப் பாதையை அவன் எட்டி எட்டிப் பார்த்தான். பகல்போல வீசிக்கொண்டிருந்த நிலவொளியில் பாதை வெறிச்சென்று கிடந்தது.

"ஹூம், இது என் ராச்சியம்!" புதரடியிலேயே உட்கார்ந்து, அவன் ஒற்றையடிப் பாதையைப் பசியோடு பார்த்துக்கொண்டிருந்தான்.

சுமார் இரண்டு மணி நேரம் கழிந்திருக்கும். அந்தப் பாதையில் ஓர் உருவம் பறந்து வந்துகொண்டிருந்தது.

"இது ஓதுவார் நடை இல்லையே!" இடுப்பிலிருந்த அரிவாளை எடுத்து இடது கையில் பிடித்து, மடியிலிருந்த ஒரு கல் வெடியை வலது கையில் வைத்துக்கொண்டு அவன் தயாராக எழுந்து நின்றான்.

அந்த உருவம் அருகில் வந்துவிட்டது. "பூ! இவ்வளவுதானா! தங்கச்சி காந்திமதியில்லா வந்திருக்கு!"

"யாரு, தங்கச்சியா? சுகந்தானே?" என்று அவன் கேட்டான்.

சோற்றுச் சட்டியை மாத்தடியில் வைத்துவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தவண்ணம், "ஆமாம் அண்ணே!" என்றாள் காந்திமதி.

"ஐயோ, அப்புராணி! நீ என் தங்கச்சி இப்படிக் கஸ்டப்படறே! உங்க ஐயாவுக்கு உடம்புக்குச் சொகமில்லையா?" என்று மருதையா அனுதாபத்துடன் கேட்டான்.

"இண்ணைக்கு வியாழக்கிழமையில்லே, அவரு பாளையங்கோட்டைச் சந்தைக்குப் போயிருக்காரு. ராவைக்குள்ளே திரும்பிவிடுவேன் இன்னவரு, இன்னம் வரக்காணோம். அண்ணனுக்குப் பசியா யிருக்குமேன்னு நானே எடுத்துக்கிட்டு ஓடியாந்தேன்."

"ஆமாம், தங்கச்சி! பசிதான்! குடலைக் கவ்வுது!" என்று சொல்லிச் சாப்பாட்டுப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு புதர் மறைவுக்கு மருதையா சென்றான். இரண்டுவேளைச் சாப்பாட்டையும் ஒரே மூச்சில் இழுத்துவிட்டு, "இப்பத்தான் உசிறு வந்திச்சு," என்று கூறிக்கொண்டே அவன் வெளியே வந்தான்.

"இந்தா தங்கச்சி!" என்று காந்திமதியிடம் காலிப் பாத்திரத்தை அவன் கொடுத்தான்.

சந்தன மரத்தில் கடைந்தெடுத்த சிலைபோல, புத்தழகுடன் நின்ற காந்திமதியின் மாம்பழ முகத்தை அவன் அப்போதுதான் எறிட்டுப் பார்த்தான். முந்தின விநாடிவரை இல்லாத ஒரு வெறி அவன் உடம்பில் சமுத்திரம்போல பொங்கியெழுந்தது. கடித்த உதடுகளைச் சொர சொரப்பான நாக்கினால் தடவிய வண்ணம் அவளை அவன் கூர்ந்து பார்த்தான்.

அதைக்கண்டு காந்திமதி பயந்துபோனாள். "நான் போய் வாரேன் அண்ணே," என்று சொல்லி காந்திமதி நழுவப் பார்த்தாள்.

"ஏய், எங்கே போறே! வா இப்படி" என்று காகரப்பான குரலில் அவன் இறுமினன்.

"அண்ணே, நீங்க நல்லா இருப்பீங்க. கையெடுத்துக் கும்பிடுறேன் அண்ணே......!"

மருதையா பதிலே பேசவில்லை. மானைக்கவ்விச் செல்லும் சிங்கத்தைப்போல அவன் காந்திமதியை இரும்புக் கரத்தால் இழுத்துக்கொண்டு குகைக்குச் சென்றான்.

இரவு மூன்று மணி இருக்கும். அலங்கோலமான நிலையில் அவள் குகையிலிருந்து வெளியே வந்தாள். சுற்றிலும் நரிகள் ஊளையிட்டன. ஆந்தைகள் கோரமாகக் கத்தின.

குகையிலிருந்து சிறிது தூரம் மருதையாவும் அவள் பின்னல் வந்தான். "சரி நீ போ!" என்று சொல்லிவிட்டு அவன் அங்கேயே நின்று கொண்டான்.

கேவிக் கேவி அழுது கொண்டே காந்திமதி தள்ளாடி நடந்து சென்றாள். அழுது அழுது அந்த நிர்க்கதியான பெண்ணின் நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது.

அவள் மலையிலிருந்து இறங்கி, ஒற்றையடிப் பாதையில் சிறிதுதூரம் செல்வதற்குள் எதிரே பரமசிவ ஓதுவார் பாய்ந்து பாய்ந்து ஓடிவந்தார்.

"கார்கிடைக்கவில்லை......மூட்டையைத் தூக்கிக்கிட்டு நடந்து வந்தேன்......நேரமாயிடுச்சே. நீயே கொண்டு கொடுத்திட்டியா......சரி, நல்லதாப்போச்சு!......தம்பி கோவிச்சுக்கிட்டானே?" என்று மூச்சு வாங்கிக்கொண்டே அவர் பேசினர்.

காந்திமதி 'ஓ' வென்று அலறி அழுதாள்.

விஷயத்தை அறிந்ததும் பரமசிவத்திற்கு இடி விழுந்தாற்போல் ஆகிவிட்டது. "கொலைகாரப் பாவி, என் குழந்தையைக் கெடுத்திட்டானே" என்று அவர் புலம்பினர். மருதையாவை எதிர்க்கச் சக்தியில்லையே என்பதை நினைத்ததும் அவரும் அழ ஆரம்பித்தார்.

சிறிது நேரம் சென்றபிறகுதான் அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. குகைக்குச் செல்லும் பாதையைக் காட்டும்படி காந்திமதியிடம் அவர் கேட்டார்.

"உன்னைத் தூக்கில் எத்தினல்தாண்டா தூங்குவேன்!" என்று வர்மம் கூறிக்கொண்டு இரவோடு இரவாய் அவர் ஸ்ரீவைகுண்டத்துக்குப் பிரயாணமானர்.

மூலிகை தேட தாம் மலைக்குப் போயிருந்தபோது மருதை யாவின் குகையைக் கண்டு கொண்டதாகச் சர்க்கிள் இன்ஸ் பெக்டரிடம் பரமசிவ ஓதுவார் சொன்னார்.

சர்க்கிள் சந்தோஷத்தால் துள்ளிக் குதித்து விட்டார். "ஓதுவாரே, நீர் அந்த இடத்தை மாத்திரம் காட்டினால்போதும்; ஐநூறு ரூபாய் இனம் உமக்குத்தான். நானும் எவ்வளவு நாளாய்ப் பதிபோட்டுப் பார்க்கிறேன், அந்தப் பயலைப்பிடிக்க!" என்று அவர் சொன்னார்.

இரண்டு லாரிகள் ஆயுதபாணிகளான கான்ஸ்டபிள்களை ஏற்றிக் கொண்டு, ஓதுவாருடன் வல்ல நாட்டுக்குச் சர்க்கிள் புறப்பட்டார்.

அவர்கள் வல்ல நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தபோது நன்றாக விடிந்து விட்டது. ரஸ்தா ஓரத்தில் லாரிகளை நிறுத்திவிட்டு, மலைச் சாரலில் போலீஸார் ஏறினர். கோஷ்டி கோஷ்டியாக நாலுபக்கத்திலும் ஆட்களை சர்க்கிள் பிரித்து விட்டார். ஓதுவார் வழிகாட்ட சர்க்கிளும் சப் இன்ஸ்பெக்டரும் கையில் ரிவால்வர் களுடன் பின்னால் சென்றனர். எல்லோரும் புதர் மறைவில் பதுங்கிப் பதுங்கி ஜாக்கிரதையாக மலை மீது ஏறினர்.

சிறிது தூரம் சென்றபின் ஆரவாரம் கேட்டது.

போலீஸார் காதைத் தீட்டிக்கொண்டு மெதுவாக மேலே ஏறினர். மேலே போகப்போக சப்தம் பயங்கரமாகக் கேட்டது. நரிகளின் ஊளையுடன் வேறு ஏதோ கோரமான ஒலிகள் கேட்டன.

"என்ன இது! பகலில்கூட நரி ஊளையிடுதே!" என்றார் சர்க்கிள்.

"அந்தா மேலே பாருங்க!" என்று சப் இன்ஸ் பெக்டர் கத்தினார்.

சுமார் ஐம்பது கெஜத்திற்கு அப்பால், ஒரு உடைமரத்தைச்சுற்றி ஆளுயரக் கழுகுகள் பயங்கரமாகக் கத்திக்கொண்டு பாய்ந்து பாய்ந்து தாக்கின. மரத்தின் கீழே நூற்றுக்கணக்கான நரிகள் கூட்டமாய் நின்று ஊளையிட்டுக்கொண்டிருந்தன. காவி வேஷ்டி உடுத்திய ஒரு உருவம் மரக்கிளையில் தொங்கிக்கொண்டிருந்தது.

# கம்பன்: ஆராய்ச்சிப் பதிப்பு

எஸ். வையாபுரிப் பிள்ளை

## முன்னுரை

இம்பர் அமுதென் றிராமா யணமளித்த
கம்பன் கழலிணையே காப்பு.

சொல்லினால் இயன்ற திருக்கோயில்களும், கல்லினால் இயன்ற திருக்கோயில்களும் ஒன்றோடொன்று அடிக்கடி உவமிக்கப்படுகின்றன. இதற்கு ஒரு காரணம் உண்டு. கவிஞன் ஓரளவு சிற்பியாய் அமைகிறான். அவ்வாறே சிற்பியும் ஓரளவு கவிஞனாய் விடுகிறான். சிற்பி கவிஞனானதற்குத் தாஜ் மஹால் என்ற காதல்-மாளிகையை உதாரணமாகக் கூறலாம். கவிஞன் சிற்பியானதற்குக் கம்பனது பெருங்காப்பியத்தை உதாரணமாகக் கொள்ளலாம். இக்காவியத்தின் பல உறுப்புக்களும் தனித்தனியே அழகு வாய்ந்தன. ஒன்றோடொன்று பொருத்தமுற்றன. முழுவதும் சேர்ந்து ஒருமை என்ற உணர்ச்சியை நம்மனத்துள் தோன்றச் செய்வன. கலை

பற்றிய அளவில் ஒன்று என்னும் உணர்ச்சியே மிகுந்து நிற்கிறது. சிற்றுறுப்புகளும், இவ்வுறுப்புக்களுக்குப் பொருத்தமாக இருத்தலோடு ஒருமை உணர்ச்சிக்குப் பயன்படுகின்றன. இக்காரணங்களாலேயே பாரதி,

வல்லவன் ஆக்கிய சித்திரம் போலும்
　　வண்மைக் கவிஞர் கனவினைப் போலும்
நல்ல தொழில் உணர்ந் தார்செயல் என்றே
　　நாடு முழுதும் புகழ்ச்சிகள் கூறக்
கல்லையும் மண்ணையும் பொன்னையும் சேர்த்துக்
　　காமர் மணிகள் சிலசில கோத்துச்
சொல்லை இசைத்துப் பிறர்செயு மாறே
　　சுந்தர மாமொரு காப்பியம் செய்தார்

என்று பாடியுள்ளார்.

இவ் உவமானத்திற்கு ஆதாரமான ஒற்றுமை வேருெரு விஷயத்திலும் காணப்படுகிறது. நமது மூதாதையரது பக்தியையும், சிற்பத் திறத்தையும் விளக்கி நின்ற இத் திருக்கோயில்களை நாம் இன்று பாழடைய விட்டு வருகிறோம். இவைகள் ஜீர்ணமாய் அழிவுபட நிற்கும் நிலையை நாம் சிறிதும் உணர்ச்சியற்றுப் பார்த்து நிற்கிறோம். இந்த ஜீர்ண நிலையையே கம்பனது இலக்கியத் திருக்கோயிலும் அடைந்துள்ளது. ஒரு சிறு வேறுபாடு உண்டு. நாட்டுப் புறங்களிலே உள்ள மக்கள் தங்கள் ஊர்களையும் கோயில்களையும் பாழடைய விட்டு, நகரவாசிகளாய், பட்டணவாசிகளாய், வெளியேறிச் செல்கின்றனர். இதனால் கோயில்களிற் சிறப்புடன் போற்றப்பட்டு வாழ்ந்த தெய்வங்களும் மக்களில்லா ஊரில் வாழமாட்டோம் என்று, அருள் விளக்கமின்றி மறைந்து வருகின்றன. ஆனால், கம்பனது காவியத் திருக்கோயிலில் வாழ்ந்த கவிதைத் தெய்வமோ எனின், தனது பண்டைத் தெய்விக ஒளியோடு இன்றும் சிறந்து விளங்குகிறது; மறைந்துவிடவில்லை.

நகரங்களிலும், நாட்டுப்புறங்களிலும் உள்ள திருக்கோயிலைப் பழுது பார்த்துப் பரிபாலிப்பதற்கும், கோயில் சார்பாக நிகழும் பணிகள் பலவும் முட்டின்றி நடைபெறுவதற்கும், அறநிலையப் பாதுகாப்பு மன்றம் நிறுவப்பட்டுள்ளது. முற்காலத்தில் கோயிலதிகாரிகள் ஆற்றிவந்த பணிகளுள் இலக்கியம் முதலிய கல்வித் துறைகளைப் பேணிப் போற்றுதலும் ஒன்றும். இம்மரபினைப் பின்பற்றி, அறநிலையப் பாதுகாப்புத் தலைவர் அவர்களே இன்று நாம் ஆற்றக் கருதும் இலக்கியத் திருப்பணித்

தொடக்கத்திற்கும் தலைமை தாங்குவது பெரிதும் பொருத்த மாம்.

ஆனால், கோயில் பழுது பார்க்கப்பட வேண்டும் என்று அவர்களிடம் தெரிவித்தால் எவ்வகையான குற்றங் குறைகள் உள்ளன என்று கேட்பார்கள் அல்லவா? 'எத்தனையோ பதிப்புக்கள் வெளிவந்துள்ளனவே! வேறொரு புதிய பதிப்பு எதற்கு?' என்ற கேள்வியைப் பல அறிஞர்களும் கேட்டு வருகிறார்கள். இக் கேள்வியையும் இவர்களிடம் எதிர்பார்க்கலாமல்லவா? இக்கேள்விகளுக்கு விடை யிறுக்கு முகத்தாற் சில சொல்லி, எவ்வாறு பணியாற்ற வேண்டும் என்பதனையும் விவரிக்க எண்ணுகிறேன்.

## 1

கம்பன் உலக மகாகவிகளுள் ஒருவன் என்று கருதத் தக்கவன். அவன் இயற்றிய இராமாவதாரம் வால்மீகி முனிவரின் இராமாயணத்தோடு ஒத்த பெருமையுடையது. பல இடங்களில் அம்முனிவரை விடச் சிறந்த கவித்துவம் கம்பனிடத்தில் காணப்படுகிறது என்பர் வ. வே. சு. ஐயர். இவனது அரிய பேரிலக்கியத்திற்கு இன்றுவரை சிறந்த பதிப்பில்லாதது மிக மிக வருந்தத் தக்கதாகும்.

இப் பெருங்கவிஞன் இயற்றிய ஆறு காண்டங்களுள் சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளையும், தி. த. கனகசுந்தரம் பிள்ளையும் பதிப்பித்த பாலகாண்டம் ஒன்றே சுத்தப் பதிப்பாக வெளிவந்திருக்கிறது. ஆனால், இதுவும் ஆராய்ச்சிப் பதிப்பன்று. பிரதிகளிலுள்ள பாடங்களை ஆராய்ந்து, இன்னது தான் உண்மைப் பாடம் என்று வரையறுத்து, ஆராய்ச்சியாளருக்குப் பயன்படும்படியாகப் பாடபேதங்கள் முதலியவற்றைத் தருவதில் இப்பதிப்பு, சிறிதும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. செவ்விய முறையைப் பின்பற்றிய ஆராய்ச்சிப் பதிப்பு இனித் தான் வெளிவரவேண்டும். இதுவரை வெளிவந்துள்ள பதிப்புக்களெல்லாம் பல அம்சங்களில் குறைபாடு உடையன. உதாரணமாக, சென்னைக் கலாக்ஷேத்திரத்தினின்று சமீபத்தில் வெளியிடப்பெற்ற பாலகாண்டப் பகுதியைச் சொல்லலாம். இது காலஞ்சென்ற டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் எழுதி வைத்திருந்த குறிப்புக்களையும், அவர்கள் தொகுத்து வைத்துள்ள ஏட்டுப் பிரதிகளையும் உதவியாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்ற

தெனச் சொல்லப்படுகிறது. இந்தப் பதிப்பில், தொடக்கத்தி லேயே, தனியன் என்ற பகுதியில் சேர்க்கப்படவேண்டிய பல செய்யுட்கள் கம்பன் இயற்றிய பாயிரத்துள்ளனவாக அமைத்துப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக,

தருகை நீண்ட தயரதன் தான்தரும்
இருகை வேழத் திராவகன் தன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகுழல் காப்பதே

என்ற செய்யுள் பாயிரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. நான் பரிசோதித்த 23 ஏட்டுப் பிரதிகளில் ஒன்றிலேனும் இச்செய்யுள் தனியனிற் கூடக் காணப்பெறவில்லை. மழவை மகாலிங்கையர் கி. பி. 1845-ல் வெளியிட்ட பாலகாண்டப் பகுதியிலும், காஞ்சீபுரம் சபாபதி முதலியார், கோமளபுரம் இராஜகோபாலப் பிள்ளை இவ்விருவரது உதவியையும் பெற்று, கிருஷ்ணசாமி முதலியார் கி. பி. 1861-ல் வெளியிட்ட பாலகாண்ட உரைப்பதிப்பிலும் இச்செய்யுள் காணப் பெறவில்லை. எனவே, ஏட்டுப் பிரதிகள் பலவற்றிலும் – அனைத்திலும் என்று கூடச் சொல்லலாம் – முதன் முதல் வெளிவந்த அச்சுப் பிரதிகள் பலவற்றிலும் காணப்பெறாத இந்தச் செய்யுள் சமீப காலத்தில் அச்சியற்றியவர்களோ பிறரோ எழுதிச் சேர்த்தது என்றே துணியத்தக்கது. இவ்வளவு பிற்காலத்ததாகிய செய்யுள் கூடப் பாயிரத்தில் கம்பன் பாடியதாகக் கொடுக்கப் பெற்றிருப்பது மிகவும் வியப்பிற்கிடமாயுள்ளது. தமிழ் நூற்பதிப்பாசிரியர்களுள் தலைசிறந்தவராகிய டாக்டர் சாமிநாதய்யரவர்கள் பெயர்த்தொடர்பு கொண்டு இத்தகைய பதிப்பு வெளிவந்திருப்பது தமிழ்மக்கள் அனைவருக்கும் மிக்க வருத்தத்தை உண்டு பண்ணத்தக்கதாம். ஆனால் ஒன்று; பதிப்பாசிரியரைக் குறை கூறுவதாகக் கருதக்கூடாது. ஒருவரே தனிப்படச் செய்யக் கூடிய காரியமன்று. வித்வான் ம. வே. துரைசாமி அய்யர், வித்வான் கி. வா. ஜகந்நாதன் போன்றவர்களது உதவி கிடைத்திருந்தால் நலமாயிருக்கும். இவ்வகையான பதிப்பு நல்ல பதிப்பு என்ற வரிசையில் வைத்து எண்ணத்தக்கதாகுமா?

தனியன்களுள் வேறொரு செய்யுள் கம்பராமாயணத்தின் காலத்தைக் குறித்து வருதல் அனைவரும் அறிந்தது. அது வருமாறு:

எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின் மேல்
சடையன் வாழ்வு

கண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே
    கம்ப நாடன்
பண்ணிய இராம காதை பங்குனி
    உத்த ரத்தில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங்
    கேற்றி னானே

இச்செய்யுள் குறிக்கும் காலம் உண்மையாதல் சாலாது என்பது தமிழிலக்கிய சரிதம் உணர்ந்தார் அனைவர்க்கும் உடன்பாடாம். இதனை ஏட்டுப் பிரதிகள் கொண்டு ஆராய்ந்து துணியவேண்டுவது மிக அவசியமாம். இச்செய்யுளின் பழமையும் நாம் ஊன்றி ஆராயத்தக்கது. கொல்லம் 753-ம் ஆண்டில், அதாவது கி. பி. 1578-ல் எழுதகப்பெற்ற ஓர் பழைய ஏட்டுப்பிரதியில் இச்செய்யுள் காணப்பெறவில்லை. இக்காலத்திற்கு முந்திய ஏட்டுப் பிரதிகளில் இச்செய்யுள் காணப்படுகின்றதா என்று நோக்கி உண்மையைத் தெளிவித்தல் பதிப்பாசிரியர் கடனாகும். இது தமிழ்நாட்டிலும் ஈழம் முதலிய பிறநாடுகளிலும் கிடைக்கும் பிரதிகள் அனைத்தையும் ஒப்பு நோக்கி தெளிவிக்கப் படவேண்டிய ஒரு விஷயமாகும். எக்காலத்தில் எந்தப் பிரதேசத்துப் பிரதியில் இது முதல் முதற் சேர்க்கப்பட்டது என்பதை ஆராய்தல் அவசியமாகும். இவ்வகைப்பட்ட பல ஆராய்ச்சிகளுடன் கூடிய பதிப்பு, கம்பன் கண்ட தமிழுலகை நமக்கு உணர்த்தி, அங்கே விளங்கிய மொழிநிலை, இலக்கிய நிலை, சமுதாய நிலை, அரசியல் நிலை முதலியவற்றை நாம் தெரிந்துகொள்வதற்கு இன்றியமையாத ஒரு கருவியல்லவா?

பிறிதொரு தனியன் காண்டம், படலம், செய்யுள் முதலியவற்றின் அளவை நமக்குத் தெரிவிக்கிறது. அது வருமாறு:

கரைபொரு காண்ட மேழு;
    கதைகளா யிரத்தெண் ணூறு
உரைதரு விருத்தம் பன்னீ
    ராயிரத் தொருபத் தாறு;
பரவமர் பத்து நாலு;
    படலநூற் றிருபத் தெட்டு;
வரமுறு கம்பன் சொன்ன
    வண்ணமும் எண்பத் தேழே.

எண்பற்றிய அளவில் இச்செய்யுளிற் காணும் பாடபேதங்கள் ஒருபுறமிருக்க, படலங்களின் அளவும் எண்ணும் அச்சுப்பிரதிகளிலும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. உதாரணமாக, சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளை பதிப்பில், பாலகாண்டத்தில்யாயி

ரம் நீக்கி 22 படலங்கள் உள்ளன. ஆழ்வார்திருநகரிப் பதிப்பு ஒன்றில் பாயிரம் நீக்கி 30 படலங்கள் உள்ளன. இவற்றுள் கம்பன் வகுத்த படலங்கள் இத்தனை என்று துணியப்படவேண்டும். இவ்வகை ஆராய்ச்சியிலும் மிகப்பழைய ஏட்டுப்பிரதிகளையும், மிகப்பழைய பதிப்புக்களையும் நாம் ஒப்புநோக்கி, எவ்வாறு படல வேறுபாடு முதலியன நேர்ந்தன என்று விசாரணை செய்து வரையறுக்க வேண்டுவது கம்பனைக் கற்கும் அறிஞர் குழாம் மேற்கொள்ள வேண்டுவதாகும். எனது நண்பர் பெரியன் வெ. நா. ஸ்ரீனிவாசய்யங்கார் தமது பாலகாண்டப் பதிப்பில் இராமாயணத் திருவிருத்தங்களை எண்ணிக் கணக்கிட்டுத் தந்துள்ளனர். இராமாயணப் பதிப்பாளர்கள் இங்ஙனமே படலம் முதலிய பிற பொருள்கள் பற்றியும் ஆராய்ந்து முடிவு செய்யக் கடமைப்பட்டுள்ளார்கள். இங்ஙனம் முடிவு செய்த பதிப்பு வெளிவரவேண்டுவதும் அத்தியாவசிய மல்லவா?

படலத்தின் பெயர்கூடப் பிழையாகப் பதிப்பிக்கப்பட்டு வந்துள்ளது. உதாரணம் அயோத்தியா காண்டத்தில் பள்ளியடைப் படலம் என்று காணுவது, பள்ளி படைப் படலம் என்று இருத்தல் வேண்டும். பள்ளி படுத்தல் என்பது ஈமத்தில் ஏற்றிப் பிரேத ஸம்ஸ்காரம் செய்வதற்கு வழங்கிய ஒரு மரபுத் தொடர். 'பள்ளி படுத்தார்களே' என்பது சிந்தாமணி (292). படலப் பெயர்களைச் சரியாகத் தராதது பெரிய குறைபாடு அல்லவா?

மேற்குறித்த செய்யுட்கள் மூன்றும் தனியனுக உள்ளவை. நூலகத்திலே வரும் செய்யுட்களில் சில கம்பன் இயற்றியவை தாமா என்பது ஆராய்ச்சிக்கு இடமாயுள்ளது. உதாரணமாக,

ஆச லம்புரி ஐம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பும் நெறியின் புறம்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்

என்ற செய்யுளை எடுத்துக்கொள்வோம். இச்செய்யுளின் ஈற்றடி பல பிரதிகளில்,

கோச லம்புனை நாட்டணி கூறுவாம்

என்று எழுதப் பெற்றுப் பின்னர்,

கோச லம்புனை யாற்றணி கூறுவாம்

எனத் திருத்தப்பட்டுள்ளது. ஆகவே, இது நாட்டணியைக் கூறுவதற்கு என முதலில் சேர்க்கப் பெற்றதாதல் வேண்டும்.

இக்கருத்திற்கேற்க, ஒரு பிரதியில் இச்செய்யுள் ஆற்றுப்படலத்தின் இறுதியில், நாட்டுப் படலத்தின் முன்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அடுத்துவரும் செய்யுள் வருமாறு:—

வாங்கரும் பாதம் நான்கும்
வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிகள் ஆரத்
தேவரும் பருகச் செய்தான்;
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை
அன்பெனும் நறவம் மாந்தி;
மூங்கையான் பேச லுற்றான்
என்ன, யான் மொழிய லுற்றேன்.

இங்ஙனம் நாட்டணி கூறுவதாக வரும் செய்யுட்கள் இரண்டு அடுத்தடுத்து வருவதனை நோக்கி முதற் செய்யுளை "யாற்றணி" எனத் திருத்தி ஆற்றுப்படலத்தின் தொடக்கத்தில் வைத்துவிட்டனர் எனக்கருத இடமுண்டு. அன்றியும் இச்செய்யுள் பின்வரும் 'வாங்கரும்' என்ற செய்யுளை நோக்காது இடைச் செருகலாகப் புகுத்தப்பட்ட செய்யுள் என்றும் நாம் துணியலாம். இத்துணிபு எவ்வாறாயினும், இச்செய்யுளைப்பற்றி ஆராய்ச்சி செய்வது பதிப்பாசிரியர் கடமையாகும். இங்ஙனமாகத் தனிப்பட்ட செய்யுட்களைப் பிரதிகளின் உதவிகொண்டும் கருத்தின் அமைதி கொண்டும் ஆராய்ந்து, கொள்ள வேண்டுவனவற்றைக் கொண்டு, தள்ள வேண்டுவனவற்றைத் தள்ளிப் பதிப்பிடுதல் இராமயண உணர்ச்சிக்கு மிக அவசியமல்லவா? இங்ஙனம் செய்யாதது ஒரு குறைபாடு அல்லவா?

தனிச் செய்யுட்கள் இவ்வாறாக, சில உட்கதைப் பகுதிகளும் பெரிதும் ஐயத்திற்கு இடமாயுள்ளன. உதாரணமாக:

ஏகி மன்னனைக் கண் டெதிர் கொண்டவள்
ஓகை யோடு மினிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனையவர் வைகினார்

எனவரும் மிதிலைக் காட்சிப் படலம் 83-ம் செய்யுளுக்குப்பின்

முனியும் தம்பியும் மொய்ம்முறை யால்தமக்கு
இனிய பள்ளிகள் எய்திய பின் இருட்
கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்
தனியும் தானும் அத் தையலும் ஆயினன் (139)

என்பது வரையுள்ள 56 செய்யுட்கள் ஒரு பழம் பிரதியில் இல்லை. விடுபட்ட பகுதியில் விசுவாமித்திரர் வரலாற்றைக்

கௌதம புத்திரரான சதானந்தர் கூறுகின்றார். குறித்த ஏட்டுப் பிரதி திருவிதாங்கூர் அரண்மனை நூல் நிலையத்தில் உள்ளது; இப்பொழுது தமிழ் வழக்காறற்றிருக்கும் அம்பலப்புழை அரண்மனையினின்றும் கொண்டுவரப் பெற்றது, மிகமிகப் பழைய பிரதியாகும். இப்பிரதியில் மேலைச் செய்யுட்கள் காணாமையால் கம்பன் இயற்றிய மூலத்தில், இப் பகுதி உள்ளதோ என்பது பெரிதும் ஐயுறத்தக்கதே. பாட்டுக்களும் சுவை குன்றியுள்ளன என்பதை நாம் மறக்கலாகாது. இப்பகுதியை நீக்கி விட்டால் செய்யுட் பொருளும் இனிதாகத் தொடர்ந்து செல்லுகின்றது என்பதையும் நாம் மனங்கொள்ளுதல் வேண்டும். விசுவாமித்திரர் தவஞ்செய்த வரலாறு வால்மீகி இராமாயணத்தில் தரப்பட்டிருக்கவும், கம்ப ராமாயணத்தில் அது காணப்பெறுத குறையை நோக்கிப் பிற்காலத்துப் புலவர் ஒருவரால் இப்பகுதி இடையில் செருகப்பட்டது எனத் துணிதல் தகும் எங்ஙனமாயினும், பல பிரதேசங்களிலுமுள்ள நூற்பிரதிகளை நன்கு ஆராய்ந்து, இது போன்றவை இடைச்செருகல்களா, அல்லவா என்பது துணியத்தக்கது. இங்ஙனம் ஆராய்ச்சியால் துணிபு கண்ட பதிப்பு வெளிவந்தால்தான் கம்பன் தந்துள்ள இராமாயண மூலத்தை நாம் அறிந்துகொள்ள இயலும். இங்ஙனம் செய்யாதது பெரியதொரு குறைபாடு அல்லவா?

இடைச் செருகல்களாகக் கருதத்தக்க தனிச் செய்யுட்களை மேலே கவனித்தோம். இனி, அங்ஙனம் கருதுவதற்கு இடமின்றிக் கம்பனே பாடியுள்ளவை எனக் கொள்ளற்குரிய செய்யுட்களில் நேர்ந்துள்ள பிழைகளை நோக்குவோம். இவற்றுள் ஒருவகையின முதல் முதலில் பிழையின்றிப் பதிப்பித்த செய்யுட்கள். பின்னர் அச்சுப் பிழைகள் தோன்றி உண்மைப் பாடங்கள் மறைந்து விட்டனவாம். உதாரணமாக: யுத்தகாண்டம் மாயாசனகப் படலத்தில் (8) வரும்,

இட்டதோர் இரண பீடத் தாமரை யிருக்கை நின்றும்
கட்டதோட் கானம் சுற்றக் கழலொன்று காவிற் காண
வட்டவெண் கவிகை யோங்கச் சாமரை மருங்கு வீசத்
தொட்டதோர் சுரிகை யாளன் இருந்தனன் இனைய சொன்னான்

என்ற செய்யுளைக் கூறலாம். இங்கே, 'தாமரை யிருக்கை நின்றுங் கட்டதோள்' என்பதற்குப் பொருள் யாதும் இல்லை இராஜகோபால பிள்ளை முதலியோர் பதிப்பித்த யுத்தகாண்டத்தை நோக்கினால் உண்மைப்பாடம் தெரியவரும். அவற்றிலே,

இட்டதோர் இரண பீடத் தமரரை இருக்கை நின்றும்

எனக்காணப்படுகிறது. 'தமரரை' என்பதில், ரகாத்தை மகரத்திற்குமுன் தவறுகப் பெய்ததனால் பொருள் விளங்காமற்போக இடமேற்பட்டது. முற்பதிப்புக்களை நோக்கி அச்சிடுகின்ற இடத்துங்கூட இவ்வாறு பிழை நேர்ந்துள்ளது. நமது நாட்டில் பதிப்பாசிரியர்கள் என்று கருதத்தக்கவர்கள் மிகச்சிலரேயுள்ளார்கள் என்பதை இது தெரிவிக்கிறது. ஒரு சிலர் தங்கள் பெயர்களை இரவல் கொடுப்பதே யன்றி உண்மையில் பதிப்பு வேலை செய்வதில்லை. அச்சுத்தாள்களைப் பிழையறப் பரிசோதிப்பதும் இல்லை. இங்ஙனம் பிழையறப் பரிசோதியாமை அருவருக்கத்தக்க குறைபாடு அல்லவா?

இனிப் பிறிதொரு வகையாக நேர்ந்துள்ள பிழைகளை நோக்குவோம். முதல் முதல் பதிப்பித்த பிரதியிலேயே இவ்வகைப் பிழைகள் நேர்ந்து விட்டன.

உறமே வியகா தலுனக் குடையார்
புறமே துமிலா ரொடுபூண் முலையான்
மறமே புரிவார் வசமா யினையோ
அறமே கொடியா யிதுவோ அருள்தான்

(பிராட்டி களங்காண்-10)

என வருவது ஓர் உதாரணம். பிரமாஸ்திரத்தால் இலக்குமணன் முதலியோர் உயிரிழந்து விட்டனர். இராமனும் இத்துய ராற்ருது போர்க்களததில் முடிந்து விட்டனன். இந்நிலையில் அரக்கர்கள் சீதையைக் களத்திற்குக் கொண்டுவந்து அங்கே வீழ்ந்துகிடந்த இராமன் முதலியோரை அவளுக்குக் காட்டுகின்றனர். அப்பொழுது அறத்தை நோக்கிச் சீதை புலம்புவதாக இச் செய்யுள் அமைந்துள்ளது. முதலாவது 'பூண்முலையாய்' எனத் திரிசடையை விளித்துக் கூறுவதாகக் கருதினர். இங்ஙனம் விளித்து அறத்தை நோக்கியுரைப்பதில் பொருத்தம் யாதுமில்லை. எனவே, 'பூண்முலையான்' எனத் திருத்தினர். இதற்கு, 'பூண்முலையாகிய என் காரணத்தால்' என்பது கருத்தெனக் கொண்டனர். சீதாதேவி தன்னைக் குறித்துப் 'பூண் முலையாகிய என்' என்று கூறவைக்கும் அழகே அழகு! இவ்வித ஆபாசத்தினின்றும் தப்புதற்கு, பூண்முலையார் என இராஜகோபாலப் பிள்ளை பதிப்பித்தனர். இங்ஙனமாக, வழியின்றித் திகைத்தனர் பல பதிப்பாசிரியர்களும். இப் பிழைபட்ட பாடங்கள் எவ்வாறு நேர்ந்தன? ஏட்டுப் பிரதிகளில், 'பூணகிலாய்' என்று உள்ளது. இதன்

பொருள் 'தொடர்பு கொள்ளுகின்றாயல்லை' என்பதாம். இதனைப் பிறழ உணர்ந்து, பூண் நகிலாய் எனப் பிரித்து, நகில் என்ற கடின பதத்தின் பொருளைப் பாட்டிலே பெய்து எவரோ ஒருவர் அமைத்து விட்டனர். உண்மையான பாடம் மறைந்தே போய் விட்டது. பொய்யாக அமைந்து விட்ட பாடத்திற்குப் பொருள் காணும் முயற்சியிலேயே அறிஞர்கள் நிலைத்துவிட்டனர். நான் கொடுத்துள்ள திருத்தங்களின் உதவி கொண்டு வெளியிடப் பெற்ற கோபால கிருஷ்ணமாச்சாரியார் பதிப்புத்தவிர, ஏனைப் பதிப்புக்கள் பலவற்றில் 'பூண்முலையான்' என்றே உள்ளது. இவ்வாறாக விளைந்து விட்ட பிழைகளெல்லாம் கம்பனது கருத்தை உணர்வதற்குப் பேரிடையூறுகளாயுள்ளன. இங்ஙனமாக கம்பனது மூலபாடத்தை உணராது பதிப்பித்தல் நகைத்தற்குரிய ஒரு குறைபாடு அல்லவா?

ஏடு வாசிப்பதில் தவறாகப் பாடங்களைக் கொள்ளுதலும் உண்டு. 'பொான்' என்பதும், 'பேரன்' என்பதும், 'போன' என்பதும் ஒன்று போலவே ஏடுகளில் காணப்படும். இடம் நோக்கி, செய்யுளின் ஓசை நோக்கி, பொருள் நோக்கி இன்னது தான் பாடம் என்று திட்டப் படுத்துதல் வேண்டும். மிகச் சிறந்த பண்டிதர்கள் கூட இதில் பிழை போதற்கு இடமுண்டு. நண்டிற்குக் 'களவன்' என்று ஒரு பெயருண்டு. இதற்கு வயற்களத்திலே வாழும் உயிர் என்பது பொருள். இதனைக் 'கள்வன்' என்று நெடுங்காலமாகப் படித்து, அச்சியற்றி வெளியிட்டவர்கள் மிகச்சிறந்த வித்வான்களாவர். கம்பராமாயணத்திலேயே கையடைப் படலத்தில்,

உயிரிரக்குங் கொடுங்கூற்றி னுளையச் சொன்னான்.

என்பது பலர்க்கும் ஞாபகமிருக்கலாம். இதனைச் சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளை, 'உயிரீர்க்குங் கொடுங் கூற்றின்' என்று பதிப்பித்தனர். 'இரக்கும்' என்பதிலுள்ள சுவை இப்பாடத்தில் இல்லாமை காணலாம். இங்ஙனம் சுவையற்ற பாடங்களைக் கொள்ளுதலும் ஒரு குறைபாடு அல்லவா?

வேறு சில இடங்களில் பிழையாக வாசித்து, செய்யுளோசை குறைவுபடுதல் நோக்கி அடைமொழி முதலியவற்றைப் பெய்து நிரப்பியுள்ளார்கள். நகரப்படலத்தில்(6)

தங்குமா பொருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் புலங்களைத் தவிர்க்கும்
பொங்குமா தவமும் ஞானமும் புணர்ந்தோர்

எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பொருள் என்பதனைப் பொதுப் படச் செல்வம் எனக்கொள்வோம். ஆனால், செல்வத்திற்கும் மாதவம் புரிபவர்களுக்கும் யாதோர் இயைபும் இல்லை. உண்மையான பாடம் 'தங்கு பேரருளும்' என்பது. இதனைத் தங்கு பொருளும் என வாசித்து ஓசை குறைபடுதலை நோக்கி, தங்கு மாபொருளும் எனக் கூட்டி நிரப்பிவிட்டனர். இவ்வகைப் பிழைக்கு வேறொரு சிறந்த உதாரணம் சேதுபந்தனப் படலத்தில் காணப்படுகிறது.

தாவ லோவல மென்றது தாங்கிய
மாவெ லாங்கடல் வீழ்தலும், வண்டெலாம்
காவ லாளர் விழக்களை கண்ணிலா
ஏவ லாளரின் எங்குந் திரிந்தவால்

இப்பாடத்தை வைத்துக்கொண்டு தமக்குத் தோற்றியவாறு பொருள் எழுதினரும் உளர். ஆனால், உண்மையான பாடம் வருமாறு:

தரவ லோம்வலம் என்றுயிர் தாங்கிய
மரமெ லாங்கடல் வீழ்தலும், வண்டெலாம்
கரவி லாளர் விழக்களை கண்ணிலா
இரவ லாளரின் எங்கும் இரிந்தவால்

இதனை வாசித்த அளவில் பொருள் இனிது விளங்கி, இதுவே உண்மைப் பாடம் என்பது நன்கு புலப்படுகிறது. ஈதல் இயலும் வரையே உயிர் வாழ்தல் வேண்டும் என்ற அரிய கொள்கையை ஓரறிவுயிர்களாகிய மரங்களும் பின்பற்றி யொழுகின. இது தான் முதலடியின் செவ்விய கருத்தாகும். ஆனால், பழைய பாடத்தையே மேற்கொண்டுள்ளார் எனது நண்பர் கோபால கிருஷ்ணமாச்சாரியார். இது முற்றும் திருப்தியாக இல்லாத இடங்களில் பழைய பாடங்களையே வைத்துக் கொள்ள வேண்டும் என்ற நிலையை உணர்த்துகிறது. இந்த நிலை எனக்கு உடன்பாடே. ஆனால், குறிப்பிட்ட இந்த இடத்தில் ஆச்சாரியார் கொண்டது வேண்டாததோர் ஐயப்பாடே. இவ்வாறு தவறாக வாசித்துக் கொண்டு பாடங்களை அமைத்தல் மிகமிகப் பெரியதொரு குறைபாடு அல்லவா?

பல ஆண்டுகட்கு முன்னர் யாழ்ப்பாணத்து வித்வான் சி. கணேசய்யர் செந்தமிழ் 2-ம் தொகுதி தொடங்கிப் பல தொகுதிகளில் இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரம் என்ற ஆராய்ச்சி வரிசையில் பலபல குறைபாடுகளையும் திருத்தங்களையும் வெளியிட்டுள்ளார்.

இக் குறைபாடுகளெல்லாம் நீங்கிய ஆராய்ச்சிப் பதிப்பு வெளிவந்தாலன்றி, கம்பனை உண்மையில் உணர முடியுமா? முடியாதாகவே, ஆராய்ச்சிப் பதிப்பு வேலையில் நாம் முயலுதல் மிகவும் இன்றியமையாததாகும்.

## 2

'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்று கூறுவார்கள். இந்த நியாயத்தை அநுசரித்து ஒவ்வொரு வகைக் குறைபாட்டிற்கும் ஒவ்வோர் உதாரணங் காட்டினோம். பதிப்புக்களின் அபக்குவமான நிலையை இவை நன்கு காட்டுகின்றன. இக்குறைபாடுகள் எக்காரணங்களால் நேர்ந்தன என்பது சிறிது நோக்கத்தக்கது.

முதலாவது, கம்பராமாயணம் தமிழ் உலகில் பரவிவந்த முறையே இக்குறைபாடுகளுக்கு ஒரு காரணமாய் இருந்தது. முற்காலத்தில் ஒரு சிலர் தவிரப் பொது மக்கள் ஏடு வைத்துப் படித்து வந்தவர்களல்லர். 'கற்றலிற் கேட்டலே நன்று' என்பதையே அவர்கள் கடைப்பிடித்து வந்தார்கள். ஏடுகளை வைத்துக் கற்றவர்களில் ஒருசிலர் பிரதியிலுள்ள செய்யுட்களை மனனம் பண்ணுவதிலேயே கருத்துக்கொண்டவர்களாயிருந்தனர். ஏனெனின், அவர்கள் கம்பராமாயணத்தை மக்களிடம் சொல்லி, அதனைப் பொருள் வருவாய் பெறுவதற்கு ஒரு கருவியாகக் கொண்டார்கள். இவ்வாறு பிரசங்கம் பண்ணுவது, பெரும்பாலும் இராப்பொழுதாக இருக்கும். ஏடுகளை வைத்துப் படிப்பதுதானும் இயலாத காரியம். பிரசங்கமும், இடையறவுபட்டுச் சுவை மிகவும் குன்றிவிடும். மக்கள் ஆவலோடு நீண்ட பொழுதிருந்து கேட்க முடியாது. ஆகவே, தாம் ஞாபகத்தில் வைத்திருந்த செய்யுட்களை இடையிடையே சொல்லிப் பொது மக்களைத் திருப்திப்படுத்த முயன்றனர். ஆனல், ஞாபகத்தை மாத்திரம் நம்பினல் பலவிதமான தவறுதல்களும் நேரிடுதல் இயற்கையே. இவ்வாறு நேர்ந்த தவறுதல்களுக்கு உதாரணமாக, ஒரே பொருளும் ஒரே அளவு ஓசையுமுடைய சொற்களைக் கூறலாம். வரை, மலை என்ற சொற்களில் எதுகைதவிர வேறு எந்த இடங்களிலும் ஒன்றற்கொன்று மாறிவைப்பது செய்யுள் பற்றிய அளவில் பிழையாகமாட்டாது. கம்பனிலிருந்து ஓர் உதாரணம் தருகிறேன். ஆற்றுப்படலம் 4-ம் செய்யுளின் இறுதியடி,

வள்ளி யோரின் வழங்கின மேகமே

என்பது. இதில் இறுதிச்சொல் 'வானமே' என்று சில பிரதிகளிற் காணப்படுகிறது. இரண்டிற்கும் பொருளொன்றே. ஆனால், கம்பனது மூலபாடம் யாது என்பது கேள்வி. அது இருக்கட்டும். சொற்கள் மாறுபடுவதற்குப் பிரசங்கமுறை ஒரு காரணம் என்பது இதனால் விளங்கும்.

பிரசங்கம் செய்தவர்களிற் சிலர் தக்க சொல்லுணர்ச்சி அற்றவராயிருந்தனர். ஆகவே, தமக்குத் தெரியாத சொல்லுக்குப் பதிலாகத் தெரிந்த சொல்லைப் பெய்து பாடத்தைப் பிறழச் செய்தனர். உதாரணமாக, எழுச்சிப் படலத்தில் (30),

தாள்மி டைந்தன தம்மி மிடைந்தென

என்ற உண்மைப் பாடத்திலுள்ள தம்மி என்பதற்கு மாறாகத் 'தம்மின்' என்ற சொல்லை இட்டனர். தம்மி என்ற தெலுங்குப் பதத்திற்குத் தாமரை என்பது பொருள். இது பிரசங்கித்தவர்க்குப் பிறமொழி யுணர்ச்சி யில்லாமை காரணமாகச்சொல் மாறுபாட்டம் நேர்ந்ததை உணர்த்துகிறது.

இவ்வாறு பிரசங்கித்தவர்கள் கம்பராமாயணத்தை மட்டும் சொல்லிவந்தார்கள் என்று நினைத்தல் கூடாது. பொதுமக்களை, பாமர மக்களை, இன்புறுத்துவதே அவர்கள் கடைப்பிடித்த நோக்கம். ஆகவே, இதற்குத் தக்கபடி நகைச்சுவை முதலியன தரும் பலவகையான நூதன கட்டங்களையும், உபகதைகளையும் விஸ்தாரமாக எடுத்துக் கூறிவந்தனர். இதனாலும் கம்பராமாயண மூலத்தில் இல்லாத பல கதைகளுக்கு இடமேற்பட்டு விட்டது. இங்ஙனம் ஏற்படவே, இக்கட்டங்கள் முதலியவற்றைப் பிற்காலத்தவர் செய்யுளிலும் அமைத்து மூல நூலில் சேர்த்துவிட்டனர் என்று சொல்லலாம். இதற்கு உதாரணம், கும்பகர்ணன் உறங்கிக் கிடந்ததை வர்ணிக்கும் பகுதி. இப் பகுதி ஒருசில ஏட்டுப் பிரதிகளில் காணப்படவில்லை.

இவ் வகையான இடைச்செருகல்களே யன்றி, இப் பிரசங்க முறையில் வேறொருவகை இடைச்செருகல் புகுதற்கும் இடமேற்பட்டது. பிரசங்கம் செய்துவந்தவர்களுள் ஒருசிலர் வடமொழி ஞானம் படைத்திருந்தார்கள். இவர்கள் வால்மீகி ராமாயணத்திலுள்ள கதைப் பகுதிகள் தமிழ்ப் பெருநூலில் காணப்படாதிருத்தல் தக்கதன்று எனக் கருதினர்.

தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவர் ஆனவர் தம்முளும் முந்திய

நாவி னுர்உரை யின்படி நான்தமிழ்ப்
பாவி னல்இ துணர்த்திய பண்பரோ

என்ற செய்யுளையும் புகுத்தி வால்மீகி ராமாயணத்துக் காணும் ஒருசில பகுதிகளைச் செய்யுள் வடிவில் சேர்த்து விட்டனர். இதற்கு உதாரணமாக, விசுவாமித்திரரின் வரலாறு கூறும் பகுதியைக் காட்டலாம். இதுபற்றி முன்பகுதியில் கூறியுள்ளேன்.

மேற்கூறியனவே யன்றிப் பிறிதோர் இடைச்செருகலும் தோன்றுதற்கு இப் பிரசங்க முறை காரணமாயிற்று. பிரசங்கம் கேட்கவந்த பொதுமக்கள் பெரும்பாலும் இராம சரிதத்தில் ஈடுபட்டவர்களேயன்றி, கம்ப ராமாயணத்தில் அத்தனை ஈடுபாடு உடையவர்களல்லர். ஆகவே, அவர்களுக்கெனப் பிரசங்கம் புரிந்தவர்கள் இராமனது சரித்திரத்தில் சிலசில பகுதிகளைச் சேர்த்துக் காவியத்தை வளர்ப்பாராயினர். உதாரணமாக, இராமஜாதகம் பற்றிய செய்யுட்களைக் கூறலாம். அவை வருமாறு:

மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடகம் நீதிசேர்
ஓடைமா களிறனுன் உதய ராசிகோள்
நாடின்ஐ காதசர் நால்வர் உச்சரே.

என்றனர் சாதகம் இறைவற் கேணையர்
தந்தமக் கும்தகு முறையில் தான்தெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினர்
வன்றிறற் சுரர்குரு வாழ்த்தெ டுப்பவே.

இந்தச் செய்யுட்களைப்பற்றி, சுன்னுகம் குமாரசுவாமிப்பிள்ளை பதிப்பில்,

(இந்த) இரண்டு கவிகள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன; அவை பழைய ஏடுகளில் இல்லை

என்ற குறிப்புக் காணப்படுகிறது. என்னிடமுள்ளவற்றில் பெரும்பான்மைப் பிரதிகளில் இச் செய்யுட்கள் இல்லை.

பிரசங்கம் கேட்க வந்தவர்கள் இராம சரிதத்தில் மட்டும் ஈடுபட்டவர்கள் எனக் கொள்ளுதலும் கூடாது. திருமாலினது பாத்துவத்திலும் இவர்கள் கருத்துக் கொண்டவர்களே. பெரும்பாலும் வைஷ்ணவ மதச் சார்பினரே இராமாயணம் கேட்பதில் பேராவல் கொண்டிருந்தார்கள். இன்னோரது திருப்தியின் பொருட்டும் செய்யுட்கள் சில கம்பராமாயணத்தில் சேர்க்கப்

பட்டுள்ளன. ஆகவே, இவ்வகை இடைச்செருகல் புகுதற்கும் பிரசங்க முறை காரணமாய் அமைந்தது. உதாரணமாக, கடிமணப்படலத்தில் (48),

என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே

என்று வரும் செய்யுளைக் காட்டலாம். இச் செய்யுள் பழைய பிரதிகளில் காணப்பெறவில்லை. சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை பதிப்பில் இச்செய்யுள் கொடுக்கப்படவே யில்லை.

இதுகாறும், பிரசங்க முறையில் கேட்போரது விருப்புக் காரணமாக இராமாயணத்தில் புகுத்தப்பட்ட இடைச் செருகல்களை நோக்கினோம். இனி, பிரசங்கம் புரிந்து வந்தோர் தங்களுடைய விருப்பு வெறுப்புக்களின் காரணமாய் புகுத்திய கவிதைகள் சிலவற்றைக் கவனிப்போம். இவர்களிலும் பெரும்பாலோர் வைஷ்ணவ சமயத்தினரா யிருந்தனர். ஆகவே வைஷ்ணவ சமயதத்துவங்களைக் கூறினால் பொருந்தும் என நினைத்த பகுதிகளை இவர்கள் சேர்த்துவிட்டனர். உதாரணமாக, நாகபாசப் படலத்தில் (251–261),

யாரிவ் வதிரேக மாவை யறிவார்

என்று முடியும் செய்யுட்பகுதியைக் கூறலாம். இப்பகுதி நான் பார்வையிட்ட ஒரு பழம்பிரதியில் காணப்படவில்லை. இது இடைச்செருகல் என்பது எளிதிற் புலனாகக் கூடியது. பிரதிகள் அனைத்தையும் நாம் ஆராய்வோமானால் இம்முடிபே பெறப்படும் என்று நாம் கொள்ளலாம். ஆனால், அவ்வாறு ஆராயும் வரை சந்தேகம் என்ற நிலையில் இவற்றை வைத்துக்கொள்ள வேண்டுமேயன்றி உறுதியாகத் தள்ளிவிட முடியாது. எவ்வாறாயினும் இந்த முறையிலும் இடைச்செருகல்கள் நேர இடமுண்டு என்ற அளவில் இதனைக் கொள்ளலாம்.

சைவ சமயத்தைச் சார்ந்தவர்களும் இராமாயணத்தில் ஈடுபட்டவர்களாகவே யிருந்தனர். இவர்களும் தங்கள் கொள்கைக்கு ஏற்றவாறு இராமாயணச் செய்யுட்களைத் திருத்திய இடங்கள் ஒரு சில உள்ளன. உதாரணமாக, திரு அவதாரப் படலத்தில்,

எழுந்தனர் கறைமிடற் றிறையும்

என்று தொடங்கும் செய்யுளைக் கூறலாம் இதற்குரிய பாட பேதங்கள் சைவச் சார்பைத் தெரிவிக்கின்றன.

எழுந்திலன் கறைமிடற் றிறையும்

என்பது ஒரு பாடம். இதனால், சிவபெருமானொழிய ஏனையோர் எழுந்தனர் என்று கருதினர். வேறொரு பாடம்,

எழுந்தனன் கடகளிற் றிறையும்

என்பது. இங்கே 'கடகளிற்றிறை' என்பதற்கு இந்திரன் எனப் பொருள்கொண்டு, சிவபெருமானே இந்த இடத்தில் இல்லை எனக்கருதும்படி செய்தனர். இந்த உதாரணத்தை நோக்கினால் சைவமக்களும் இராமாயணத்தில் தமக்கு வேண்டும் திருத்தங்கள் செய்து கொண்டனர் என்பது புலனாகிறது.

மேலே கூறியன பிரசங்கம் புரிந்தவர்களின் சமயங் காரணமாக நேர்ந்த இடைச் செருகல்கள். இங்ஙனம் பிரசங்கம் புரிந்தவர்கள் இலக்கண இலக்கிய உணர்ச்சி மிகுதியும் இல்லாதாராகவே இருந்தனர். ஆகவே இராமாயணப் பிரசங்கம் செய்பவர்கள் என்றால், தமிழுணர்ச்சி யற்றவர்களென்றே வித்வான்களாற் கருதப்பட்டனர். இக்கருத்து முற்றும் பிழைபாடு உடையதென்றும் கூறமுடியாது. இது நிற்க. வேறொரு காரணத்தாலும் இடைச்செருகல் நேர்ந்ததுண்டு. இலக்கிய வித்துவான்கள் கம்பனுடையசெய்யுள்தொடர்ச்சியில் ஏதோதவறுநேர்ந்துவிட்டது என்று ஊகித்து, அத்தவறு நீங்கும்படியாகச் சில இடங்களில் சில செய்யுட்களைச் சேர்த்துள்ளார்கள். உதாரணமாக, அயோத்தியா காண்டத்தில் மந்திரப் படலத்தில் தசரதன் இராமனது பட்டாபிஷேகத்தைக் குறித்து அரசர்களோடு ஆலோசித்தலைக் கூறும் பகுதியைக் கூறலாம். இப்பொழுதுள்ள பதிப்புக்களில் 79-வது செய்யுள்,

மூவெழு முறைமைஎம் குலங்கள் முற்றுறப்
பூவெழு மழுவினாற் பொருது போக்கிய
சேவகன் சேவகஞ் செகுத்த சேவகற்கு
ஆவஇவ் வுலகம்ஈ தறன்என் றூர் அரோ

என உள்ளது. அரசர்கள் இங்ஙனம் கூறினார்கள் என்று பொதுப்பட உரைப்பதில் இலக்கிய வித்வான்கள் திருப்தியடைய வில்லை. இவர்கள் கருத்தை ஆதரிப்பது போல் 80-வது செய்யுள் பின்வருமாறு உள்ளது:

வேறிலா மன்னரும் விரும்பி அன்னது
கூறினர் அநுமனங் கொண்ட கொற்றவன்

ஊறிய உவகையை ஒளிக்கும் சிந்தையான்
மாறுமோர் அளவைசால் வாய்மை கூறினன்.

இங்கே, வேறிலா என்பதன் பொருளும் அவர்களைச் சிறிது மயக்கி யிருத்தல் வேண்டும். இதற்கு, 'கருத்து வேறுபாடில்லாத' என்பது பொருள். ஆகவே, இப்பாடத்தை, 'வேறெலா மன்னரும்' எனத் திருத்தினர். இத் திருத்தத்திற்குத் தக்கபடி, இரட்டர், விதர்ப்பர், கலிங்கர், துருக்கர், குருக்கள், கலிங்கர் மிலேச்சர், சிங்களர், சேதியர், விராடர், தெலுங்கர், சேரர், சோழர், தென்னர் - இவ்வனைவரும் தனித்தனியே அரசனது கருத்தை ஆமோதித்தனர் என்ற பொருளையடக்கி 24 செய்யுட்கள் இயற்றிச் சேர்த்து விட்டனர். இவைகளில் கலிங்கரைக் குறித்து இரண்டு செய்யுட்கள் வருதலும் நோக்கத்தக்கது. இச் செய்யுட்கள் ஏட்டுப் பிரதிகள் சிலவற்றில் காணப்படுகின்றனவே யன்றி, அச்சுப் பிரதிகளிற் கூடக் காணப்பெற வில்லை.

இவ்வாருகப் பிரசங்கம் நிகழ்ந்த முறைகள், கேட்போர்களின் தகுதி, விருப்பம், பிரசங்கம நிகழ்த்தியவர்களின் தகுதி, விருப்பம் : இவை முதலிய பல காரணங்களை முன்னிட்டுக் கம்பராமாயணத்தில் இடைச்செருகல்களும் பாடபேதங்களும் நிகழ்ந்து விட்டன. பிரசங்க முறையானது கம்பனது காலத்தை மிக அடுத்தே தோன்றியிருக்க வேண்டும் என்று நாம்கருதலாம். கி. பி. 14-ம் நூற்ருண்டின்பிற்பகுதியில் கன்னட தேசத்தில் இவவகை பிரசங்கங்கள் நிகழ்த்தியவர்கள், 'கம்பராமாயணம் நாராயணர், கம்ப ராமாயண ராமப்பன்' என்ற அடைமொழிகள் சேர்த்து வழங்கப்பட்டனர். இது ஒரு சாசனத்தால் தெரிய வருகின்றது. பெரும்பாலும் தமிழ் நாட்டிலிருந்தே இவ்வழக்கம் கன்னட தேசத்திற்குப் பரவியிருத்தல் வேண்டும். கம்பன் காலத்திலேயே இவ்வகையான பிரசங்கங்கள் நிகழ்ந்தன என்று அவனைப் பற்றிய கர்ண பரம்பரை வரலாறு தெரிவிக்கின்றது. அவ்வரலாற்றில் ஒரு செய்தி மிகவும் ருசிகரமானது. எனது கருத்தையும் மிக நன்ருக வற்புறுத்துகிறது. கம்பராமாயணப் பிரசங்கம் நிகழ்ந்த இடத்திற்குக் கம்பன் ஒருமுறை சென்ருனம். அங்கு பிரசங்கித்த செய்யுட்களையும் பொருள்களையும் வெகுநேரம் கேட்டுக் கொண்டிருந்தானம். பல போலி இராமாயணச் செய்யுட்களோடு கலந்து இடையிடையே தனது கவிதைகளும் சில சில உள்ளன என்று கூறினனம். இதனல், கம்பராமாயணத்தில் வெகு காலத்திற்கு

முன்னரே இடைச்செருகல்கள் மிகுதியாக ஏற்பட்டு விட்டன என்பது விளங்கும்.

மேற்கூறியவாறு பொதுமக்களிடையே இராமாயணம் பரவுவதற்குப் பிரசங்கங்கள் காரணமாயிருப்பினும் அறிஞரிடையே அது பரவுவதற்கு நூற்பிரதிகளே காரணமாயிருந்தன. முற்காலத்தில் கல்வியைப் பேணிவந்த சில முக்கியமான நகரங்களில் ஏடுகளைப் பிரதி செய்வதையே தமது தொழிலாகக் கொண்டிருந்த சிலர் இருந்தனர். அவர்கள் முக்கியமாகப் பிரதி செய்து வந்தவை ஜனங்கள் மிகவும் போற்றிவந்த இராமாயணம், பெரிய புராணம், திருவிளையாடல், திருக்குறள் முதலியனவாம். இராமாயணத்தைப் பிரதி செய்வதில் பேருக்கம் காட்டி வந்தவர்களுள் ஆழ்வார்திருநகரியி லுள்ளாரைக் கூறலாம்.

இற்றைக்குச் சுமார் 500 ஆண்டுகட்கு முன்பு தொடங்கிச் செந்தமிழன்னையைப் போற்றி, அவளது பேரணிகலங்களைப் பாதுகாத்து, புத்தணிகலங்களைப் புனைந்து தமிழ் நாட்டிற்கும் இலக்கிய உலகிற்கும் அரிய தொண்டுகள் இயற்றி வந்த பெருமூது நகர்களுள் குருகூர் எனப் பெயர்பெற்ற இவ் ஆழ்வார் திருநகரி தலை சிறந்து விளங்குவதாகும். நம்மாழ்வாரது திருவவதாரச் சிறப்பால் பெருமை பெற்று ஒளிரும் இத் திருப்பதி, பக்தர்களெல்லாம் தரிசனம் செய்தற்குரிய திவ்யக்ஷேத்திரமாயுள்ளது. தமிழ்க்கு உரையாணி போன்றபல பெருமக்கள் வாழ்ந்து தமிழைப் போற்றி வளர்த்த பெருமையினலே, இப்பொழுது பக்தர்களேயன்றித் தமிழ் நாட்டினர் அனைவரும் சென்று தரிசித்தற்குரிய பெருந் தகுதியையும் புண்ணியத்தையும் அடைந்து விட்டது. இங்குச் செழித்த ஆராய்ச்சித் துறையாளர்களின் நன் முயற்சியின் மூலமாகவே பண்டைத் தமிழ்—இலக்கியங்கள் பலவும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. டாக்டர் உ. வே. சாமிநாதையர், மஹாவித்வான். ரா. ராகவையங்கார் முதலியோர்களுக்குப் பண்டைத் தமிழ்க் கருவூலங்கள் அகப்பட்ட புண்ணிய ஸ்தலம் இதுவேயாகும் சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்புவரை இந்நகரினர் குன்றாத ஊக்கங்கொண்டு தமிழ் கற்றுத் தமிழ்க் கருவூலங்களைப் பேணிவந்தனர். தமிழ் இலக்கிய சரித்திரம் எழுதப் புகுவார் இத் திருப்பதியின் இலக்கிய வாழ்க்கையை மறுத்துவிட முடியாது.

பண்டை இலக்கியங்களைக் கற்றுப் பெயர்த்தெழுதிப் பின் சந்ததியினருக்கு இந்நகரினர் உதவியது போலவே தமிழ்க் கலைவாணியின் மணிமகுடமாகிய கம்பராமாயணத்தையும் இவர்

கள் போற்றிவந்தார்கள். இப்பொழுது கன்னடம் பேசும் பிர தேசம் ஒன்றில் 14-ம் நூற்றாண்டில் கம்பராமாயணப் பிரவச னம் செய்துவந்த குடும்பமொன்று இருந்ததாகச் சாசனத்தால் விளங்குகிறது எனக் கூறினோம். தமிழையும், வைஷ்ணவ சம யத்தையும், ராமசரிதத்தையும் ஒருங்கே போற்றிவந்த திருக்குரு கூரினர் ராமாயணப் பிரவசனத்தில் அந்நூற்றாண்டிற்கு முன்பு தொட்டே ஈடுபட்டிருந்தனர் என்பது சொல்லாமலே அமையும். சில குடும்பத்தினர் ராமாயணப் பிரவசனத்தினாலேயே சிறப்புப் பெற்றிருந்தனர் என்பதும் விளங்குகிறது. குருகூரை அடுத் துள்ள வாசிகள் பலரும் இங்கு வந்து பிரதிகள் எழுதுவித்துப் பெற்றுக்கொள்வது வழக்கமாயிருந்தது. இவ்வூரிலுள்ள வித் வான்களை அழைத்துச்சென்று பிரதிகள் எழுதுவித்துக் கொள் ளுதலும் உண்டு. எனவே, இப் பிரதேசத்திலுள்ள பிரதிகள் வித்துவ பரம்பரையினருள் ஒரு சாராரால் பெரும்பாலும் மரபு நெறி தவறாது எழுதப்பட்டனவாம்.

இங்கே சுமார் 200-ஆண்டுகளுக்குமுன், இராமாயணம் சாத்தாதவர் என்றும், இராமாயணம் திருவேங்கடதாசர் என் றும், இராமாயணம் திருவேங்கடம் உறங்காவில்லிதாசர் என் றும் பெயர்கள் கொண்ட ஒருவர் இராமாயணத்தைப் பிரதிகள் செய்து வழங்கி வந்தனர். இவர் வாழ்ந்த காலம் கொல்லம் 896-ம் ஆண்டை அடுத்துள்ளதாகும். இவர் நீண்ட காலம் வாழ்ந்தவர் என்பது, 'பராங்குச நாடகம்' என்ற ஒரு நூலைக் கொல்லம் 960-ம் ஆண்டு இராமாயணம் சாத்தாதவரும் பார்த்து அரங்கேற்றியது எனக் கூறுவதால் அறியலாம். பின் வந்தோர் அவரது பிரதியை நோக்கி எழுதி வந்தார்கள் என்றும் தெரிகின்றது. இவ் ஆழ்வார் திருநகரிப் பதியிலுள்ளவர்கள் பெரும்பாலும் வைஷ்ணவர்கள். அந்தச் சமயத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்கள். இவர்கள் இராமாயணச் சுவடி களிற் கண்ட பாடல்கள் அனைத்தும் தங்கள் பிரதிகளிலும் இருத்தல் வேண்டும் என்று கருதினார்கள். இக் கருத்திற்கு இயையவே, பிரதிகளை யெழுதி முற்றுவித்துப் பரப்பிவந்தனர். நாற்பது எட்டுச் சுவடிகளை ஒப்புநோக்கி, அவற்றில் காணப் பட்ட மிகைச் செய்யுட்களை யெல்லாம் சேர்த்துத் தயார் செய்த பிரதி யொன்று சென்னை அடையாறு கலாக்ஷேத்திரத்திலே டாக்டர் சாமிநாதையரவர்களது நூல் நிலையத்தில் உளதெனத் தெரிகின்றது. இப்பிரதி முதலியவற்றில் இடைச் செருகல்கள் பல புகுந்திருக்க வேண்டும் என்று பொதுப்படக் கூறலாம். இன்னும் விரிவாகச் சென்று இவர்களால் ஏற்பட்ட இடைச்

செருகல்களை ஆராய்ந்து துணிவது இங்கு அவசியமின்றாம். பிரதி செய்தோர்களாலும் இடைச்செருகல் முதலியவை நேர்ந்துள்ளன என்பதொன்றே இங்கு அறியத்தக்கது.

## 3

இங்ஙனம் நேர்ந்த இடைச்செருகல்கள், குறைபாடுகள் முதலியவற்றையெல்லாம் இதுவரை இராமாயணத்தைப் பதிப்பித்த ஆசிரியர்கள் ஏன் நீக்கவில்லை என்ற கேள்வி இயல்பாக எழக்கூடியதே. பதிப்பித்த ஆசிரியர்கள் பலரும் இலக்கிய இலக்கணத்துறைகளில் மிகச்சிறந்து விளங்கியவர்களே யாவர். எனினும், அவர்கள் இராமாயணத்தைச் செப்பனிட முயலவில்லை. அவர்கள் செய்ததெல்லாம் 'காலிகித வழுஉக்களைக் களைந்து' அச்சியற்றியதுதான். இப்போது தெரிகின்றவரை முதல்முதல் வெளிவந்தது கி. பி. 1843-ல் திரு-திருவேங்கடாசல முதலியார் 14-பிரதிகளைப் பரிசோதித்து அச்சிட்ட பதிப்பேயாகும். இவரைக்குறித்த விவரம் விரிவாக இப்பொழுது நமக்குத் தெரியக்கூடவில்லை. ஆனால், இவர் ஒரு சிறந்த வித்துவானாதல் வேண்டும் என்பதுமட்டும் நாம் ஒருவாறு ஊகிக்கக் கூடியது. இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் கி. பி. 1845-ல் மழவை மகாலிங்கையர் பாலகாண்டத்தை வெளியிட்டுள்ளார். இப் பதிப்பாசிரியரது பெயர் தமிழுலகில் மிகப்பிரசித்தமானதே. தொல்காப்பிய எழுத்ததிகாரத்தை இவரே முதல் முதல் வெளியிட்டனர். 'மழவைச் சிங்கார சதகம்' என்றஒரு நூலை இவர் இயற்றியுள்ளார். சிறுவர்க்குரிய இலக்கணம் ஒன்றும் இவரால் எழுதப்பட்டது என்பது யாவரும் அறிவர். பின்னர் கி. பி. 1858-ல் திரு-வேங்கடசல முதலியார் பதிப்பித்த பிரதிக்கிணங்க, சுப்பராய முதலியார், சுப்பராய பிள்ளை என்ற இருவரும் பதிப்பித்த பாலகாண்டப் பதிப்பொன்றுதோன்றியது. இவர்கள் சென்னைக் கல்விச் சங்கத்தைச் சார்ந்தவர்கள். பின்னர், கி. பி. 1861-ல் சேலம் ஜில்லா துரைத்தனப் பாடசாலைத் தலைமைத் தமிழ்ப் புலவர் கிருஷ்ணசாமி முதலியார் என்பவர் பாலகாண்டத்தை உரையுடன் பதிப்பித்தனர். இப்பதிப்புக்கு உதவியவர்கள் வித்வான் காஞ்சீபுரம் சபாபதி முதலியாரும், கோமளபுரம் இராஜகோபாலப் பிள்ளையுமாவர். இப்பதிப்புகளுக்குப் பிற்பாடு பல வித்துவான்கள் பல காலத்தும் பதிப்புக்கள் வெளியிட்டுள்ளார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள் க. வ. திருவேங்

கடநாயுடு, திருமயிலை சண்முகம் பிள்ளை, சுன்னாகம் அ. குமாரசாமிப் பிள்ளை, தி. த. கனகசுந்தரம் பிள்ளை, சே. கிருஷ்ண மாச்சாரியார், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் முதலியோராவர். திருச்சி சவரிராயப் பிள்ளையும், பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியாரும் சேர்ந்து வெளியிட்டுள்ள கிஷ்கிந்தாகாண்டப் பதிப்புத் தனிப்படக் கூறத்தக்கது. இப்பதிப்புப் பல பிரதிகளை ஒப்பு நோக்கிப் பாடபேதங்களுடன் வெளியிட்டதாம். சில இராமாயணச் சுருக்கங்களும் வெளிவந்துள்ளன. இவற்றைத் தொகுத்தோர் இராஜதானிப் பாடசாலைப் புத்தக சங்கத்தார், வ. வே. சுப்பிரமணிய ஐயர், ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், டி. கே. சிதம்பரநாத முதலியார் ஆகியோர்.

இத்தனை சிறந்த வித்வான்களுள் ஒருவராவது இடைச்செருகல்களை நீக்கி, திருத்தமான பாடங்களை மேற்கொண்டு, பாடங்களையெல்லாம் தொகுத்துக் கொடுத்து ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றை வெளியிடவில்லையே, என்? இதற்கு இரண்டு காரணங்கள் உள என்று தோன்றுகிறது.

முதலாவது, கம்பன் பாடியனவாக எட்டுப் பிரதிகளில் காணப்படும் செய்யுட்கள் அனைத்தும் தமது பதிப்பிலும் இருக்க வேண்டும் என்று இவர்கள் கொண்ட கொள்கையேயாகும். இம்முறையே The principle of inclusiveness என்று ஆங்கிலத்தில் கூறுவர். இம் முறையில் ஆராய்ச்சி என்பதே இல்லை. ஒன்றற்கொன்று முரண்பாடான செய்யுட்கள் உளவெனினும் அவைகளும் இவர்கள் பதிப்பில் காணப்படும். இம்முறை தக்கதாகாது என்பது யாவர்க்கும் எளிதிற் புலனாகும்.

இரண்டாவது காரணம் ஆராய்ச்சிப் பதிப்பு என்ற கருத்தே சமீபகாலத்தில் தோன்றியதாகும். ஆங்கில நூல்களையும், ஆங்கில நூற்பதிப்புக்களையும் நோக்கியவர்களே இதன் அருமையை உணர்வார்கள். இம்முறை ஒன்றே கம்பனது இராமாயணத்தை உண்மையாகக் காட்ட வல்லது. பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் 'வாணி விலாஸ்' அச்சுக் கூடத்திலிருந்து வெளியிட்ட சுந்தரகாண்டப் பதிப்பு ஒன்று உளது. இதில் பதிப்பாசிரியர் தமக்குத் தோன்றியபடியெல்லாம் பாடத்தையும் செய்யுள் முறையையும் மாற்றி அமைத்து விட்டனர். ஆராய்ச்சி முறைப் பதிப்பே புதியது என்பதற்கு இச்சுந்தரகாண்டம் ஒரு நிதர்சனமாகும். ஆங்கில இலக்கியத்தில் பெரும் பயிற்சியுடையவரும் தமிழ் நாட்டுப் பெருமக்களுள் முன்னணியில் நிற்பவருமாகிய நண்பர் ஒருவரோடு இராமாயணப்

பதிப்பு விஷயமாய் ஒரு முறை பேச நேர்ந்தது. அப்பொழுது அவர் ஆராய்ச்சிப் பதிப்பு வெளியிடுதலைக் காட்டிலும், பொது மக்களுக்குப் பயன் படும்படியான நல்ல பதிப்பொன்று வெளி வருதலே மிக முக்கியமானது என்ற கருத்துப்பட மொழிந் தனர். தற்காலத்துலவும் பதிப்புக்களில் பிழைகளும், குறைபாடு களும், இடைச் செருகல்களும், எனைக் குழறு படைகளும் எத்தனை அதிகமாக உள்ளன என்பதை எடுத்துக் கூறுவதற்குப் போதும் தகுதியுள்ளவர்கள் இல்லை. நண்பர் கருதும் பொது மக்களுக்குரிய பதிப்பு ஆராய்ச்சிப் பதிப்பினை ஆதாரமாகக் கொண்டல்லவா தோன்றுதல் வேண்டும்? ஆயினும் இவர்கள் தெரிவித்த கருத்து, தமிழ் நாட்டினர் ஆராய்ச்சிப் பதிப்பினை எந் நிலையில் கொண்டுள்ளனர் என்பதனை விளக்குகிறது.

பண்டை நூல்களைப் பதிப்பிடும் முயற்சியில் ஈடுபட்டிருக் கும் ஒரு நூற்பதிப்புக் கழகத்தார் வாக்கியங்களையும் பாடங் களையும் தமக்குத் தோன்றியவாறு திருத்தி வெளியிட்டிருக்கின் றனர். முனிசீப் வேதநாயகம் பிள்ளையவர்கள் எழுதிய நூல் களை இவ்வாறு பதிப்பித்திருக்கின்றனர். நன் முறையில் அமைந்த பதிப்பு என்ற கருத்தே நமக்குப் புதிது என்பதை இச் செயல் புலப்படுத்தவில்லையா?

மூன்றாவதொரு காரணத்தையும் நாம் இங்கே குறிப்பிட லாம். தமிழ் நாட்டிலுள்ள ஏட்டுப் பிரதிகளுள் பெரும் பாலானவற்றையும் தொகுத்தால்தான் செம்மையான ஆராய்ச் சிப் பதிப்பு வெளிவருவதற்கு இடமுண்டு. இது கைகூடுவது எளிதன்று. பழம் பிரதிகளெல்லாம் அழிந்துவரும் இக்காலத் துக்கூடத் தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வோர் ஊரிலும் குறைந்த பக்ஷம் மூன்று கம்பராமாயணப் பிரதிகளாவது கிடைக்கலாம் என்று தோன்றுகிறது. இப் பிரதிகளை வைத்திருப்போர் கொடுத்து உதவுவதானும் அருமை. இப்பிரதிகள் அனைத்தை யும் ஒரு சேரத் தொகுப்பதும், அவற்றை ஆராய்ச்சி செய் வதும் சிறந்த வித்வான்கள் பலர் ஒன்று கூடியிருந்து பல ஆண்டுகள் உழைத்துச் செய்யவேண்டும் காரியங்களாம். இப் பெரு முயற்சிக்குரிய பொருட் செலவும் அற்ப சொற்பமான தல்ல. இவ்வாறாகப் பல காரணங்களால் திருந்திய கம்பராமா யணப் பதிப்பு இன்றுவரை நமக்குக் கிடையாமற் போயிற்று.

## 4

மேற்காட்டிய குறைபாடுகள் அனைத்தும் நீங்கிய ஒரு பதிப்பு என்னால் தயார்செய்துவிட முடியுமென்று நான் இறு

ராப்புக் கொள்ளவில்லை. அதற்குத் தடையாயுள்ள இடையூறுகளையெல்லாம் நன்கு அறிவேன். குறைபாடுகளை நீக்க முழுமனதுடன் முயலுவேன் என்று மட்டும் நான் உறுதி கூறுவேன். இதற்குச் சில முறைகளை நாம் பின்பற்றவேண்டும். ஆகவே, குறைபாடுகள் நீங்கிய ஆராச்சிப் பதிப்பில், நாம் மேற்கொள்ளவேண்டும் முறைகளைக் குறித்து இனி நோக்குவோம்.

முதலாவது நாம் செய்யவேண்டுவது, அச்சுப் பதிப்புக்கள் அனைத்தையும், ஏட்டுப் பிரதிகளிற் கிடைக்கக் கூடியனவற்றையும் ஒருங்கு தொகுத்தலாம். ஏட்டுப் பிரதிகள் சேகரிப்பது பற்றி நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டுவது ஒன்று உண்டு. தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு பிரதேசத்திற்கும் உரிய ஏடுகளைப் பெறுவதில் நாம் முயலவேண்டும். தமிழ்நாடு என்று சொல்வதில் திருவிதாங்கூர், இலங்கை, யாழ்ப்பாணம் முதலிய இடங்களையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். இங்ஙனம் பிரதேச வாரியாகச் சேர்க்கும் ஏடுகளில் காலத்தால் மிகப் பழமையானவை நமக்குப் பெரிதும் பயன்தருவன ஆகலாம். ஆகவே, இங்குக் கூறியதை ஞாபகத்தில் வைத்து ஏடுகள் சேகரிக்க முயலுதல் வேண்டும்.

அடுத்தபடியாக இந்த ஏடுகளைப் பொருத்தமான நியதிகளைக் கையாண்டு வகைப்படுத்தி வைத்தல் வேண்டும். ஓர் ஊரிலுள்ளாரை எடுத்துக்கொண்டால் இன்ன இன்ன மரபை, இன்ன இன்ன குடும்பத்தை, இன்ன இன்ன நிலையைச் சார்ந்தவர்கள் என்று பிரித்து உணருகிறோமல்லவா? அதுபோல, இவ்வாறு வகைப்படுத்துதலில் மிக்க கவனம் செலுத்துதல் வேண்டும். மேல் நாட்டுப் பதிப்பாளர்கள் மேற்கொண்டுள்ள முறை நமக்கு மிகவும் பயன்படுவதாகும். ஷேக்ஸ்பியரைக் குறித்தும் சாஸரைக் குறித்து இவர்கள் மூலபாடத்தை நிர்ணயிப்பதற்குக் கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றை வகைப்படுத்திப் பயன்படுத்தியுள்ள முறையே இங்கு நான் கருதுவது. இரண்டொரு நூல்களை உதாரணமாகக் குறிப்பிடலாம். ஷேக்ஸ்பியர் பதிப்புப்பற்றி ஜான்ஸன் எழுதியுள்ள முகவுரை நன்கு கற்றுத் தெளிதற்குரியது. இதுபோலவே கிரெக் (W. W. Greg) என்னும் ஆசிரியர் இயற்றியுள்ள The Calculus of Variants என்ற நூலும் நமது முயற்சிக்குப் பெரிதும் பயன்படுவதாகும். நமது நாட்டிலும் மகாபாரதப் பதிப்புப் பற்றி ஆசிரியர் வி. எஸ். ஸுக்தாங்கர் எழுதிய முன்னுரை நமக்கு

ஒரு சிறந்த வழிகாட்டி. சமீபத்தில் பர்த்ருஹரியின் சதகத்ரயம் சுமார் 300 பிரதிகளுக்கு மேல் ஒப்பிட்டு நோக்கிப் பதிப்பிக்கப் பட்டுள்ளமை நம்மிற் பலரும் அறிந்திருக்கலாம். இப்பதிப்பு முறையும் நமக்கு ஒருவாறு பயன்படக்கூடியதே.

பின்பு, ஏட்டுப் பாடங்கள் பரிசோதிக்கப்படுதல் வேண்டும். இவ்வாறு பரிசோதிப்பதற்கு ஏடுகளை வாசிப்பதில் தக்க பயிற்சியுடையவர்களே உரியர். பயிற்சி யற்றவர்கள் ஏடு வாசிப்பதால் பெரும் பிழைகள் நேரிடுதல்கூடும். பயிற்சி என்ற அளவில் ஏடுகளைச் செய்யுளோசை, பொருள் முதலியவற்றைக் கவனியாதபடி வாசித்தல் மட்டும் அன்று. அது போதுமானதல்ல. செய்யுளிலக்கணம் முதலியவற்றிலும் தக்க பயிற்சியுடையாரே இதற்கு உதவக் கூடியவர்கள். இத்தகுதியுள்ள ஒருசிலர் ஏடுகளை வைத்துக்கொண்டு பாடபேதங்களை யெல்லாம் குறித்துத் தொகுத்தல் அவசியமாகும், இப்பாட பேதங்களும் இன்ன இன்ன பிரதிகளில் உள்ளன என்று பிரதிகளின் பெயர்களுடன் குறிக்கப்படுதல் வேண்டும்.

பாடபேதங்கள் அனைத்தையும், இடைச்செருகல்கள் அனைத்தையும், நாம் ஆராய்ச்சிப் பதிப்பில் கொடுத்துவிடுவது அவசியமாகும். நாம் மேற்கொள்ள வேண்டும் பாடங்கள் எவை என்பதைத் திட்டமாக வரையறுத்துணர்தல்வேண்டும். பிறபாடங்களையும், அவை பற்றிய விவரணங்களையும், ஆராய்ச்சிகளையும் ஆராய்ச்சிக் குறிப்பு என்ற தனிப் பகுதியில் சேர்த்து விடுதல் வேண்டும். இப்போது அச்சில் வழங்கும் செய்யுட்கள் பிரதிகளின் உதவியாலும், பிறவகை ஆராய்ச்சியாலும் இடைச்செருகல் என உணரப்படுமாயின், அவற்றை உரிய இடங்களில் அடிக்குறிப்பாகக் கொடுத்து விடுதல் நலம். அதிகப்படியாயுள்ள ஏனைச்செய்யுட்களும், பாடபேதங்களும், ஆராய்ச்சிக் குறிப்புக்களுக்கும் ஒவ்வொரு காண்டத்திற்கும் இறுதியிலே ஒருசேரக் கொடுத்துவிடலாம் என்று தோன்றுகிறது, எனவே நூற்பகுதி ஒன்று ஆராய்ச்சிக் குறிப்புபகுதி ஒன்று என இரண்டு பகுதிகள் இப்பதிப்பில் அமைக்கலாம் என்று கருதப்படுகிறது:

ஒரு விஷயம் நாம் மனங் கொள்ளுவதற்குரியது. கம்பன் மேற்கொண்ட பாடம் ஒன்றேயாகத்தான் இருக்கக்கூடும். அவனது இராமாயண மூலப்பிரதியும் ஒன்றேயாகத்தான் இருத்தல்கூடும். அதனினின்றும் பிறந்தனவே தமிழ் நாட்டிலுள்ள ஏனைப்பிரதிகள் அனைத்தும். ஆகவே அவனது மூலபாடத்தை நிச்சயிப்பதுதான் நமது பெருமுயற்சி. இதை விடுத்துச் 'சிறந்த' பாடத்தைக் காணுவோம் என்று முயலுதல் அறிஞர்

கள் சிலருக்கு உகந்ததாயிருப்பினும், கம்பனது உண்மையான பாடத்தைக் காணுவதாகாது. ஆனல், பல இடங்களில் சிறந்த பாடமும் மூலபாடமும் ஒன்ருகவே அமைதலும் கூடும். இங்கே கூறும் முயற்சியைக் கடைபோக முற்றுவித்தல் மிக அருமையாயிருப்பினும் அதுவே செய்யத் தக்கது. அதுவே கம்பனை நமக்கு உள்ளபடி உணர்த்துவது. இப்பணியைச் செய்து முடித்தற்கு அருமை என்று கருதி நாம் கைவிடுதல் தகாது. வள்ளுவர்,

அருமை யுடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்

என்றனர். அவரது பொன்மொழியே நமக்கு வழிகாட்டியாக அமைதல் வேண்டும்.

மேற் கூறியபடி தெரிந்த உண்மையான மூல பாடத்தை நூற் பகுதியில் அமைத்தலோடு, இப்பகுதியிலுள்ள செய்யுட் களை ஓசை கெடாதபடி சந்தி பிரித்தலும், பொருள் விளக்கத் திற்கு வேண்டும் குறியீடுகளை அமைத்தலும் இப்பதிப்பில் நாம் கையாளவேண்டும் முறைகளுள் சிலவாகும். மேலும், நூற் பகுதியின் அடிக் குறிப்பில் பட்சாந்தரமாகக் கொள்ளக்கூடிய பாட பேதங்களுள் முக்கியமானவற்றைக் கொடுத்து விடுவதும் பயன்படுவதாகலாம். மிக இன்றியமையாததான குறிப்புரை யும் அடிக் குறிப்பாகச் சேர்க்க எண்ணியுள்ளோம்.

ஒவ்வொரு காண்டத்தின் முன்பும், கம்பன் அமைத்துள்ள வாறு நயம் தோன்ற எழுதிய கதைச் சுருக்கமும், ஒவ்வொரு படலத்தின் முன்பும அப்படலத்திற்குரிய கதைச் சுருக்கமும், படலப் பொருளின் விவரணமும் சேர்ப்பது வாசகர்களுக்குப் பயன்படலாம் என்று தோன்றுகிறது. அன்றியும், ஒவ்வொரு படலத்திலும் உரிய இடங்களில் தலைப்புக்கள் கொடுத்துக் கதைத் தொடர்ச்சியை எளிதில் அறிந்துகொள்ளுமாறு செய்த லும் அவசியமாம். இங்குக் கூறிய அம்சங்களெல்லாம், பாட பேத ஆராய்ச்சி செய்யும் அறிஞர்களைக் கருதியல்ல. பொதுமக் களுக்கும் இப்பதிப்புச் சிறிதளவேனும் பயன்படுதல் வேண்டும் என்று கருதியே இவற்றை அமைக்கக் கருதியுள்ளோம்.

ஆராய்ச்சிக் குறிப்புப் பகுதிக்குப் பின்பு அனுபந்தப்பகுதி ஒன்று அமைக்கப்படும். அதில் அபிதான விளக்கம், செய்யுள் முதற்குறிப்பு முதலிய அகராதிகள் சேர்க்கப்படுவதாம். இறுதி யாக, வால்மீகி கூறியுள்ளபடி இராமாயணக் கதைச் சுருக்க மும் காணப்படும்.

இப்பதிப்பிற்குப் பூர்வாங்கமாக ஒரு விரிந்த முன்னுரை அமைக்கவேண்டுவது மிகவும் இன்றியமையாததாம். அதில், இப்பதிப்பிற்கு உதவிய ஏட்டுப் பிரதிகளின் விவரங்கள், ஏட்டுப் பிரதிகளின் இனப் பாகுபாடுகள், ஏட்டுப் பிரதிகளின் வகைகளில் ஒன்றற்கொன்றுள்ள தொடர்பு, முற்பதிப்புக்களின் விவரங்கள், மூலபாடத்தைக் கண்டுபிடித்தற்குக் கையாண்ட முறைகள், கதை வேறுபாடுகளின் விவரங்கள், வரலாறுகள், மிகைச் செய்யுட்கள், சில பிரதிகளில் காணுதொழிந்த செய்யுட்கள், பாட ஆராய்ச்சியிலுள்ள இடையூறுகள், இடைச்செருகல்களின் விசாரணை, உத்தேச பாடங்கள்—இவை முதலிய பொருள்கள் பற்றி விரிவாக ஆராய்ந்தெழுத எண்ணியுள்ளேன்.

இப்பதிப்போடு கம்பனைப்பற்றிய ஆராய்ச்சி முடிந்து விட்டது என்று கருதுதல் தவறு. எத்தனையோ வகைகளில் நாம் ஆராய்ச்சி செய்தல் வேண்டும். ஒரு சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறேன் :

கம்பன் பயன்படுத்திய மூலநூல்கள்
கம்பன் கண்ட தமிழுலகம்
கம்பன் கண்ட தமிழ்மொழி
கம்பன் கண்ட இலக்கியம்
கம்பன் கண்ட அறிவுலகு
கம்பனது கவித்துவம்
கம்பனது சிற்பத் திறம்
கம்பனது பாத்திர அமைப்பு
ஒப்பு நோக்கு ஆராய்ச்சி
மேற்கோளோடுகூடிய நூற்பொருள் அகராதி
சொல் - தொடர் முதலியவற்றின் அகராதி
கம்பன் அகராதி
கம்பனைக் கற்க உதவும் துணை நூல்கள்
இதிகாசங்களின் இயல்புகள்

இவைகள் பற்றித் தனித்தனி மூலநூல்கள் இயற்றப்படுதல் வேண்டும்.

## முடிவுரை

இவைகளெல்லாம் விரைவில் செய்யவேண்டுவனவே யாயினும், இவற்றிற்கு அடிப்படையாயுள்ள ஆராய்ச்சிப் பதிப்பே இப்போது நாம் மேற்கொண்டுள்ள செயலாகும். தமிழ் மக்களது பண்பாட்டின் உச்ச நிலையை அறிவதற்கு இவ் அரிய

காப்பியம் பெரிதும் பயன் படுவது. தமிழ்க்கவித்துவத்தின் பேரெல்லையை உணர்வதற்குத் தக்க கருவியாயுள்ளது இப் பேரிலக்கியம். தமிழ் இலக்கியத்தின் சிகரமாய் அமைந்துள்ளது இப் பேரிதிகாசம். தமிழ் மொழியின் வளத்தையும் அதன் பெருமையையும் உணர்த்தி நாம் இன்றும் கையாளுதற்குரிய மூல நிதியைத்தருவது இவ் உலகு புகழ் பெருங்காப்பியம். இவ் வாறெல்லாம் பயன் பட வேண்டுமாயின், மேற்கூறியபடி அமைந்த ஆராய்ச்சிப் பதிப்பு இன்றியமையாதது. இதனை இனிது நிறைவேறும்படி செய்ய வேண்டுவது தமிழ்மக்களது கடமை.

இப் பதிப்பிற்கு வேண்டும் அரிய பணிகளையெல்லாம் காரைக்குடி, கம்பன் கழகம் மேற்கொண்டுள்ளது. இக் கழகத்திற்கும் என் போன்ற அன்பர்களுக்கும் ஓர் இனிய தொடர்பினை ஏற்படுத்தி, அனைவரும் ஒருங்கே முயன்று செய்ய வேண்டுப் இவ் அரிய காரியத்தில் பெரிதும் ஈடுபட்டு வருபவர், தேச பக்த சிரோமணியும் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் அறிஞருமாகிய எனது நண்பர் திரு. சா. கணேசன் அவர்கள். அவர்களும் கம்பன் கழகமும் முன்னிற்கும்பொழுது இவ் ஆராய்ச்சிப் பதிப்பு இனிது நிறை வேறும் என்பதில் சிறிதேனும் ஐயமுண்டா?

**இறைவன் திருவருள் முன்னிற்க!**

# இந்த நூலின் ஆசிரியர்கள்

**கஸ்தேவ் பிளாபர் :** பிரான்சு தேசத்தில் ரூவன் என்னும் நகரில் 1821-ம் ஆண்டில் ஒரு டாக்டரின் குமாரராகப் பிறந்தார். இந்த மேதாவி, பிரெஞ்சு மொழியின் வசன நடையைத் தலை சிறந்த முறையில் கையாண்ட ஒரு சிலருள் ஒருவர். சிறு கதைக் கலையின் தந்தையாகிய மாப்பஸானின் குருநாதரும் இவரே. யாதொரு சிரமமும் இல்லாமல் சுக வாழ்வு வாழ்ந்தார். 1880-ல் வலிப்பு நோயினால் காலமானார்.

**சிதம்பர ரகுநாதன் :** 26 வயது நிரம்பிய இந்த எழுத்தாளரின் நாவல்கள் இரண்டும், ஒரு சிறுகதைத் தொகுதியும், இலக்கிய விமர்சன நூல் ஒன்றும் ஏற்கெனவே வெளிவந்துள்ளன. அருமையான கதைகள் எழுதுவதுடன் ஒரு புனை பெயரில், நவீன பாணியில் கவிதைகளும் எழுதுகிறார்; சில காலமாக நாடகங்களும் எழுதி வருகிறார். தமிழில் அற்புதமான வசன நடையைச் சிருஷ்டிக்கும் சிலருள் ஒருவர் என்று அறிஞர்களால் பெரிதும் பாராட்டப்படுகிறவர்.

**ப. ஸ்ரீனிவாசன் :** "திருமணம்" என்னும் கதைத் தொகுதியின் ஆசிரியர். சரளம், வேகம், நாசூக்கான நகைச்சுவை, அடக்கம் முதலிய லக்ஷணங்களோடுகூடிய தமிழ் நடை எழுதுகிறவர். ஏகதேசமாக எழுதினாலும் நல்லகதைகளாக எழுதக்கூடியவர். இலக்கியத்தில் முற்போக்கான கருத்துடையவர். "தினமணி" யின் உதவியாசிரியராக இருக்கிறார். இவருக்கு இன்னும் 25 வயது நிரம்பவில்லை.

**எஸ். வையாபுரிப்பிள்ளை :** தமிழகம் நன்கு அறிந்த பேரறிஞர். சென்னைச் சர்வகலாசாலையின் தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியராகவும், தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராகவும் இருந்தவர். அநேக சிறந்த நூல்களை எழுதியிருக்கிறார்; அநேக சிறந்த நூல்களைப் பதிப்பித்திருக்கிறார். தமிழகத்தின் கல்விக் கடலாக இலங்கும் இப் பெரியார் இப்பொழுது கம்பன் கழகத்தார் வெளியிடத் தீர்மானித்திருக்கும் கம்பராமாயண ஆராய்ச்சிப் பதிப்புக்குத் தலைமைப் பதிப்பாசிரியராக இருந்து பணியாற்றி வருகிறார்.

